அச்சில் வாரா அருந்தமிழ்—5.

அடிமதிக்குடி

# அய்யனார் பிள்ளைத்தமிழ்

பதிப்பாசிரியர் :
**மு. சண்முகம் பிள்ளை,**
தமிழ் விரிவுரையாளர்,
திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி,
சென்னைப் பல்கலைக் கழகம்.




**சென்னைப் பல்கலைக் கழகம்**
**1975**

முதற் பதிப்பு: டிசம்பர், 1975.

## உள்ளுறை



## இதுவரை வெளிவந்த அருந்தமிழ் நூல்கள்

1. அப்பாண்டைநாதர் உலா
   — தமிழாய்வு I 1972

2. நாககுமார காவியம்
   — தமிழாய்வு II 1973

3. திருமேற்றிசை அந்தாதி
   — அப்பாண்டை நாதர் உலா, தனி நூலின் பிற்சேர்க்கை 1974

4. ஈனமுத்துப் பாண்டியன் கதை
   — தமிழாய்வு III 1974

## முகவுரை

### பிள்ளைத்தமிழின் முதன்மை

பிரபந்த வகைகளுள் முதலிடம் பெறுவது பிள்ளைத்தமிழ். பிரபந்த இலக்கணம் வகுத்துரைக்கும் பாட்டியல் நூல்கள் இப் பிள்ளைத் தமிழுக்கே முதலில் விளக்கம் தருகின்றன. வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல், பிரபந்த மரபியல் என்னும் நூல்களில் இப் பிரபந்தத்திற்கு முதன்மை தந்திருத்தல் காணலாம்.

பாட்டியல்களுள் பழமையானது என்று கருதப்படும் பன்னிரு பாட்டியலும், 'மேதகு சாதகம், பிள்ளைப் பாட்டே' என இதனை இரண்டாவதாக அடைவு செய்கின்றது. இதுபோன்றே, 'பிரபந்த தீபிகையும்' 'சதுரகராதி'யும் கொண்டுள்ளன. இம் மூன்று நூல்களில் மட்டும் முதலாவதாய்க் காணப்படும், 'சாதகம்' என்னும் பிரபந்தம் குழந்தை பிறந்த ஆண்டு, நாள், கிழமை, பக்கம், இராசி முதலியவற்றைக் கூறுவதாகும். அதாவது, குழந்தையின் பிறப்புப் பற்றியது சாதகம். அதனை அடுத்து வருவது பிள்ளைத்தமிழ். எனவே, பிள்ளைத்தமிழுக்குப் பாட்டியல் நூலார் எல்லாரும் முதன்மை தந்துள்ளனர் என்று நாம் கொள்ளலாம்.

> 'பிள்ளைக் கவிமுதல் புராணம் ஈறுத்
> தொண்ணூற் றாறெனுந் தகைய'

எனப் 'பிரபந்த மரபியல்' எடுத்துக் கூறுவதும் ஈண்டு ஒப்புநோக்கத் தகும்.

### பழமைச் சிறப்பு

பழந்தமிழ் நூலாம் தொல்காப்பியத்திலேயே 'பிள்ளைத்தமிழ்' இலக்கியம் பற்றிய குறிப்பு உள்ளது என்பர். தொல்காப்பியப் பொருளதிகாரப் புறத்திணையியலிலே பாடாண் பாட்டுப்பற்றி உரைக்கும் பகுதியில்,

> 'குழவி மருங்கினும் கிழவதாகும்' (தொல். பொருள். புறத். 29)

என்று ஒரு நூற்பா உள்ளது.[1] இது குழந்தைப் பருவத்தும் காமப் பகுதி பாடப்பெறும் என்னும் கருத்தினது. இதன் விளக்கவுரையில் நச்சினர்க்கினியர் பிள்ளைத்தமிழ்க் கூறுகள் அமையப் பாடும் மரபை இதில் உள்ள ‘மருங்கு’ என்னும் சொல் குறிப்பிப்பதாகக்கொண்டு கூறுகின்ருர்.[2]

நச்சினர்க்கினியர் தம் காலத்து வழங்கிய பிள்ளைத்தமிழ் நூல்களைக் கருத்திற்கொண்டு இவ்வகை விளக்கம் தருகிருர். எனவே, இவர் கூற்றை முற்றும் ஏற்றுக்கொள்வது இங்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. என்றுலும், குழந்தையைப் பொருளாக வைத்துப் பாடும் மரபு தொல்காப்பியர் காலத்தே தொடங்கிவிட்டமை புலனும்.

### உருப்பெற்ற வகை

பிள்ளைத்தமிழுக்கு முதன்மை வாழ்வின் முதனிலை என்பது மட்டுமன்று; பிரபந்தங்களுள் முதன்முதல் உருப்பெற்றதும் இதுவே என்னலாம். பெரியாழ்வார் தம் திருமொழியில் கண்ணனின் பிள்ளைமைக் கூறுகள் பலவற்றைப் போற்றிப் பாடிப் பிள்ளைத்தமிழுக்குத் தொடக்கம் செய்துள்ளார். இவருடைய திருமொழியில் தாலப் பருவம், அம்புலிப் பருவம், செங்கீரைப் பருவம், சப்பாணிப் பருவம், தளர் நடைப் பருவம் முதலிய பல்வேறு நிலையில் அமைந்த பாடல்கள் காணப்படுகின்றன. நாச்சியார் திருமொழியில் ‘சிற்றில் சிதையேல்’

---

1. புறப்பொருள் வெண்பாமாலைப் பாடாண் திணைப் பகுதியிலும், ‘குழவிக்கட் டோன்றிய காமப் பகுதி’ கூறப்பட்டுள்ளது கவனிக்கற்பாலது.

   ‘இளமைந்தர் நலம் வேட்ட
   வளமங்கையர் வகையுரைத்தன்று’ (பாடாண். 50)

   என்பது இதன் கொளுவாகும். இதனை விளக்கும் அந்நூல் வெண்பா வருமாறு :

   ‘வரிப்பந்து கொண்டொளித்தாய் வாள்வேந்தன் மைந்தா
   அரிக்கண்ணி யஞ்சி யலற—எரிக்கதிர்வேற்
   செங்கோல னுங்கோச் சினக்களிற்றின் மேல்வரினும்
   எங்கோலந் தீண்டல் இனி.’

2. ‘மருங்கு’ என்றதனன் மக்கட்குழவியாகிய ஒருமருங்கே கொள்க. தெய்வக்குழவி யின்மையின், இதனை மேலவற்ரேடு ஒன்ருது வேறு கூறினர்; தந்தையரிடத்தன்றி ஒரு திங்களிற் குழவியைப்பற்றிக் கடவுள் காக்க என்று கூறுதலானும், பாராட்டுமிடத்துச் செங்கீரையும் தாலும் சப்பாணியும் முத்தமும் வரவுரைத்தலும் அம்புலியும் சிற்றிலுஞ் சிறுதேருஞ் சிறுபறையுமெனப் பெயரிட்டு வழங்குதலானும் என்பது. (சொல். பொருள். புறத், 29 நச். உரை)

எனச் சிறுமியர் வேண்டும் திருமொழி உள்ளது. குலசேகரப் பெருமாள் இராகவனுக்குத் தாலாட்டு பாடலைத் ‘ தாலேலோ ’ எனப் பாடியுள்ளார். திருமங்கை மன்னன் தம் பெரிய திருமொழியில் ‘ சப்பாணிப் பருவம் ’ பாடுகின்றார்.

காவியங்களிலும் காவியத் தலைவர் முதலியோரின் குழந்தைமை நிகழ்ச்சிகள் சிற்சில பேசப்பட்டுள்ளன. கலிங்கத்துப்பரணியில் வரும் ‘அவதாரம்’ என்னும் பகுதியும் இவ்வகையினதே. இவையெல்லாம் பிள்ளைத்தமிழ் என்னும் பிரபந்த வகை தோன்றுவதற்கு நிலைக்களன்களாய் அமைந்தன. இப்பொழுதுள்ள பிள்ளைத்தமிழ் நூல்களுள் ஒட்டக்கூத்தர் பாடிய ‘ குலோத்துங்கன் பிள்ளைத்தமிழே ’ முந்திய நூலாகக் கொள்ளத்தக்கது.

*பிள்ளைத்தமிழ் இயல்பு*

பாட்டுடைத் தலைவரைக் குழந்தைமை நிலையில் வைத்து, அப் பருவ நிலைகளைப் பாட்டுடைத் தலைவர்மேல் ஏற்றிப் புகழ்ந்து பாடுவதே பிள்ளைத்தமிழ் நூல்களின் பொது இயல்பு. இதனைப் பிள்ளைக்கவி, பிள்ளைப் பாட்டு, பிள்ளைத் திருநாமம் எனவும் வழங்குவர்.

தெய்வங்கள்மீதும் மக்கள்மீதும் இப் பிரபந்தம் பாடுதல் மரபாகும்.[3] அன்றியும் ஆண்பாலர் மேலும் பெண்பாலர் மேலும் இப் பிள்ளைத்தமிழ் பாடப்படும். ஆகவே, ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருகூறுகவும் எண்ணப்படும். இரு பாலார்மேலும் பாடப்படும் பிள்ளைத்தமிழ் நூல்களிடையே சிற்சில வேறுபாடுகளும் உள்ளன.

*பத்துப் பருவம்: ஆண்பாற் பிள்ளைத்தமிழ்*

ஆண்பாற் பிள்ளைத்தமிழில் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை (முழக்குதல்), சிற்றில் (சிதைத்தல்), சிறுதேர் (உருட்டுதல்) எனப் பத்துப் பருவங்கள் கொள்வர். இவற்றுள் சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னும் முறை வைப்பு சில நூல்களில் சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்றும் காணப் படுகிறது.

*பெண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பருவம்*

மேலே ஆண்பாலுக்குச் சுட்டிய பத்துப் பருவங்களுள் காப்பு முதலாக அம்புலி வரையில் உள்ளவை பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கும்

---

3. தெய்வங்களுள் சிவபெருமானுக்குப் பிள்ளைத்தமிழ் பாடுதல் வழக்கத்தில் இல்லை. அவன் ‘ பிறவா யாக்கைப் பெரியோன் ’ என்பதனால், விடுத்தனர் போலும்.

உண்டு. ஆனல், ஈற்றில் வரும் சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்பவற்றிற்கு ஈடாகப் பெண்பாற் பிள்ளைத்தமிழில் கழங்கு, அம்மானை, ஊசல் என்பவற்றைப் பெரும்பாலும் கொள்கின்றனர். இம் மூன்றற்குப் பதிலாக வேறு சில மாற்றங்களையும் சில நூல்களில் காணலாம். கழங்கு, அம்மானை என்பவற்றுள் ஒன்றனை விடுத்து, 'நீராடல்' என்பதனைச் சேர்ப்பதும் உண்டு.

பன்னிருபாட்டியல் சிற்றிலிழைத்தல், சிறு சோறுக்கல், குழமகன், ஊசல், காமநோன்பு என்னும் ஐந்தைப் பெண்பாலருக்குக் குறிப்பிடுகிறது. பிங்கலந்தை நிகண்டு நூலார் குழமணம், நோன்பு, நீராடல், பாவையாடல், அம்மானை, கழங்கு, பந்தடித்தல், சிறுசோறடுதல், சிற்றிலிழைத்தல், ஊசலாடல் என்னும் பத்தையும் பெண்பாலருக்குக் கூறுகின்ருர். எனினும், இவற்றுள் மூன்றே பெண்பாற் பிள்ளைத் தமிழில் வருதல் கூடும்.

இலக்கணம், நிகண்டு முதலியன பெண்பாலர் விளையாடல்களுள் பலவற்றைத் தொகுத்துரைத்த போதிலும், பெரும்பாலான பிள்ளைத் தமிழ் நூல்களுள் அம்மானை, நீராடல், ஊசல் ஆகியவையே இடம் பெற்றுள்ளன. ஆண்டாள் பிள்ளைத்தமிழில் காமவேள் நோன்பும், சிவயோகநாயகி பிள்ளைத்தமிழில் கழங்காடுதலும் அமைந்துள்ளன. இவ்வாறுன மாற்றம் மிகச் சிறுபான்மையே.

*பிள்ளைக்கவி பெறு பருவம்*

மூன்று முதல் இருபத்தொரு திங்களில் பிள்ளைக் கவியில் வரும் பத்துப் பருவங்களையும் அடக்கியுரைப்பர். இருபத்தொரு திங்களில் ஒற்றைப்பட்ட திங்களிலே பிள்ளைக்கவி பாடுதல் நன்றென்பர். இவ் வரையறை சிதம்பரப் பாட்டியலிலும் கைலாச நிகண்டிலும் தெளிவாகத் தரப்பட்டுள்ளன.

'மூன்றுமுதல் இருபத் தொன்றனுள் ஒற்றைப்
பெறுதிங்கள் தனிற்பிள்ளைக் கவியைக் கொள்ளே'

என்பது சிதம்பரப் பாட்டியல்.

இன்னும் ஐந்தாண்டு முதல் ஏழாண்டு வரையிலும் பிள்ளைக்கவி பாடுதல் உண்டு என வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல் என்பவை தெரிவிக்கின்றன. இலக்கண விளக்கப் பாட்டியல், 'மூன்றைந் தேழாண்டிலும் ஆகும்' என மூன்று, ஐந்து, ஏழு என்னும் வரையறை குறிப்பிடுகிறது. பதினுறண்டு வரையில் ஆண்பாலுக்குப் பிள்ளைக் கவி பாடலாம் என்றும், பெண்பாலுக்குப் பூப்பு நிகழ்வளவும் பாடலாம் என்றும் பன்னிரு பாட்டியலில் இந்திரகாளியார் கூற்றுகக் காணப்படுகிறது. வேந்தர்கள் முடிசூட்டியபின் பிள்ளைக்கவி பாடுதல் கூடாது என்றும் பன்னிரு பாட்டியல் வரையறுக்கிறது.

காப்புப் பருவ மரபும் மாற்றமும்

காப்புப் பருவத்தில் திருமால் முதலிய தெய்வங்களைத் துதித்துப் போற்றி, பிள்ளைக்கவி பெறுவோரைக் காக்கவேண்டும் எனப் பாடுவர். திருமால் காப்புக் கடவுளாதலின் அவரை முதற்கண் பாடவேண்டும் எனப் பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல் நூல்கள் ஏதுக்காட்டி வலியுறுத்தும்.

'காப்புமுத லெடுக்கும் கடவுள் தானே
பூக்கமழ் துழாய்முடி புனைந்தோ னாகும்'

என்பது பன்னிரு பாட்டியல்.

காப்புப் பருவத்தில் இடம்பெறற்குரிய கடவுளர் யார் யார் என்னும் வரையறையையும் இப் பன்னிரு பாட்டியல் தொகுத்துத் தருகிறது :

'திருமால் அரனே திசைமுகன் கரிமுகன்
பொருவேல் முருகன் பரிதி வடுகன்
எழுவகை மங்கையர் இந்திரன் சாத்தன்
நிதியவன் நீலி பதினொரு மூவர்
திருமகள் நாமகள் திகழ்மதி என்ப
மருவிய காப்பினுள் வருங்கட வுளரே.'

இந் நூலிற்போன்றே நவநீதப் பாட்டியலிலும் திருமால், சிவபெருமான், சத்தமாதாக்கள் பதினொரு மூவர், பிரமன், பகவதி, குபேரன், சூரியன், சாத்தன், இந்திரன், முருகன், கணபதி, வடுகன் என்னும் தெய்வங்களைக் காவல்செய் வானவர் எனத் தொகுத்துரைத்தல் காணலாம். இதில் திருமகள், நாமகள், சந்திரன் என்னும் தெய்வங்கள் ஒழிந்த பதின்மூவர் இடம்பெறுகின்றனர். பன்னிரு பாட்டியல் கூறும் பதினாறு தெய்வங்களையும் பத்துப்பாடல் கொண்ட காப்புப் பருவத்தில் உரைப்பது அருமையே. ஆகவே, இவருள் எவரேனும் பதின்மர் இடம்பெறுவர் என்பதுதான் நடைமுறைக்கு உகந்ததாகும்.

பின்னாளில் சமயச் சார்பில்தான் பெரும்பான்மைப் பிள்ளைத்தமிழ் நூல்கள் தோன்றியுள்ளன. சைவர், வைணவர் முதலியோர் தத்தம் சமயம் பரப்பிய நாயன்மார், ஆழ்வாராதியர் முதலியோரையும் காப்புப் பருவத்தில் போற்றிப் பாடலாயினர்.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் தாம் பாடிய சேக்கிழார் பிள்ளைத்தமிழில் காப்பிற்குரிய கடவுளராகப் பாடியலார் உரைத்த கடவுளர் எவரையும் பாடவில்லை. சுந்தரர் பாடிப் போற்றிய திருத்தொண்டத்தொகைச் செய்யுள் முறைப்படி அமையும் அடியார்களைப் பாடியுள்ளார்.

குருவாயூரப்பன் பிள்ளைத்தமிழில் அவருக்கு நித்தமும் சாத்தப் பெறும் எண்ணெய்க் காப்பையே காப்பாகக் கொள்ளுமாறு திரு. மு. கோ. இராமன் பாடியுள்ளார்.

‘மகிழ்ந்து காணத் தெளிநல்லெண்
ணெய்க் காப்பிட்டே இளஞ்சூட்டு
நீரால் ஆட்டி வாகைத்தூள்
நிறுவித் தேய்ப்பார் நேயமுற
நேரா நின்னையலங் கரிப்பார்
செய்க்கா மருவும் குருவாயூர்ச்
செல்வா மற்ருேர் காப்புனக்கே
செப்ப அறியேம் ஒப்பரிய
திருக்காப் பேற்று மகிழுகவே’

என்பது இவருடைய காப்புரை.

அருக சமய முதல்வர் ஆதிநாதரைப் போற்றும் பிள்ளைத்தமிழ் நூலில், அப் பெருமான்மேல் கவிபாடச் சித்தர், சைனுலயங்களில் விளங்கும் சினதேவர் முதலியோர் காப்பினைத் தமக்கு வேண்டிப் பாடு கின்ருர். ஏனைய பிரபந்தங்கள் காவியங்கள் முதலியவற்றின் தொடக் கத்தில் வரும் பொதுவான காப்புப் பாடல்கள் போன்ற அமைப்பில் தான் ஆதிநாதர் பிள்ளைத்தமிழ் ஆசிரியர் பாடுகின்ருர். இவ்வகையில் தான் அடிமதிக்குடி அய்யனுர் பிள்ளைத்தமிழும் உள்ளது.

பெயர் வழக்கு

பிள்ளைத்தமிழ் நூல்கள் பெறும் பெயரமைதியிலும் ஓர் ஒருமைப் பாடு காணலாம். இறைவன் இறைவியர்மீதும், மற்றும் மன்னர், வள்ளல்கள், குருமார் முதலிய மானிடர்மீதும் பாடப்பெறுவன அவரவர் பெயராலேயே பெரும்பாலும் வழங்கப்பெறுகின்றன. அன்றியும் அவரவர் பெயருடன் அவர்கள் வீற்றிருக்கும் இடப்பெயரை உடன்கூட்டியும் பெயர் சூட்டுவர். குலோத்துங்கசோழன் பிள்ளைத் தமிழ், மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ், சேக்கிழார் பிள்ளைத்தமிழ், ஆதிநாதர் பிள்ளைத்தமிழ் முதலியன பாட்டுடைத்தலைவர் பெயருடன் இணைந்து வருவன. திருவானைக்கா அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ், திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ், திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ் போல்வன ஊர்ப்பெயருடன் பாட்டுடைத் தலைவர் பெயரும் சார்ந்துவரும் வழக்கிற்கு எடுத்துக்காட்டாம். இவ் விருவகையானுமன்றி பாட்டுடைத் தலைவர் வீற்றிருக்கும் இடப்பெய ராலும் ஒருசில பிள்ளைத்தமிழ் நூல்கள் பெயர் சூட்டப்பட்டுள்ளன. பழநி பிள்ளைத்தமிழ், புதுவை பிள்ளைத்தமிழ், கம்பை பிள்ளைத்தமிழ், நாகூர் பிள்ளைத்தமிழ், திருப்பரங்கிரி பிள்ளைத்தமிழ் முதலியன இடப் பெயரால் வழங்குவன காணலாம். இவ் வகையில் பெயர் பெற்ற நூல்கள் ஏனைய இரண்டினும் மிகக் குறைந்த எண்ணிக்கையுடை யனவே.

### பாவின் அமைப்பு

ஆசிரிய விருத்தம், வகுப்பு, ஈரெண் கலேவண்ணம் என்னும் இவற்றுள் ஒன்றால், பருவத்திற்குப் பப்பத்துப் பாடலாக நூறு பாடல்கள் பிள்ளைத்தமிழ் நூல்களில் பாடப்படுதலே பெரும்பான்மை மரபு.

'வன்ன விருத்தம் வகுப்பேயீ ரெண்கலே
வண்ணச் செய்யுள்
அன்னவை ஈரைம்ப∴தி னெலேயென்
றறைவர் கற்ருேர்,'

என்பது நவநீதப் பாட்டியல்.

'அகவல் விருத்தமும் கட்டளை யொலியும்
கலியின் விருத்தமும் கவின்பெறு பாவே.'

'பிள்ளைப் பாட்டே நெடுவெண் பாட்டெனத்
தெள்ளிதிற் செப்பும் புலவரும் உளரே,'

என்று பன்னிரு பாட்டியல் பிள்ளைக்கவிக்குரிய பாக்களை வகுத்துரைக்கின்றது. பெரும்பான்மையான பிள்ளைத்தமிழ் நூல்களும் ஆசிரிய விருத்தங்களாலானவையே. இப் பாடல் அமைப்பிலும் அங்கங்கே பருவப் பகுதிகளிடையில் சந்த வேறுபாடுகள் அமைய வெவ்வேறு வண்ணங்களில் பாடுவதும் உண்டு. எவ்வாறு பாடினும் அந்தந்தப் பருவப் பகுதிப் பாடல்கள், அவ்வப் பருவப் பெயர்கள் மகுடமாய் அமைந்துவரும் நிலேயிலேயே காணப்படும். எடுத்துக்காட்டாகத் தாலப் பருவத்தில், 'தாலோ தாலேலோ' என்று முடித்தலும், அம்புலிப் பருவத்தில், 'அம்புலீ ஆட வாவே' என்னும் விளியுடன் முடித்தலும் போல்வனவற்றைக் காட்டலாம்.

### பாடல் தொகை

பருவத்திற்குப் பத்துப் பாடலாக நூறு பாடல்கள் பாடப்படுவதே பிள்ளைத்தமிழ் நூல்களின் பெருவழக்கு. ஆயினும் பத்தினும் குறைவான எண்ணிக்கை பெற்ற நூல்களும் காணப்படுகின்றன. மல்லேயூர்ச் சிற்றம்பலக் கவிராயர்[4] பாடிய சிவந்தெழுந்த பல்லவன் பிள்ளைத்தமிழில் பருவத்திற்கு எவ்வேழு பாடல்கள் உள்ளன. சிவஞான முனிவர் பாடிய கலேசைச் செங்கழுநீர் விநாயகர்

---

4. இவர் காலத்து வாழ்ந்த படிக்காசுப் புலவரே இந் நூலேப் பாடினுர் என்று கருதி எழுதியோரும் உள்ளனர். அது தவறு என்பதனேச் சான்றுடன் எனக்கு விளக்கியவர் கவிஞர் மு. கோ. இராமன் அவர்களாவர்.

பிள்ளைத்தமிழில் ஒவ்வொரு பருவத்திற்கும் ஐந்தைந்து பாடல்கள் காணப்படுகின்றன.

இந்த இருபதாம் நூற்றாண்டில் பிள்ளைத்தமிழ் பாடியோர் சிலர் இதனினும் குறைவான பாடல்களைக் கொண்டுள்ளனர். சின்னப்ப நாயக்கர் பாடிய பழனி பிள்ளைத்தமிழிலும், பாலகவி முத்து. கோ. இராமன் பாடிய ஸ்ரீகுருவாயூரப்பன் பிள்ளைத்தமிழிலும் பருவத்திற்கு மும்மூன்று பாடல்கள் காணப்படுகின்றன. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய சிவஞான யோகிகள் சரித்திரத்தில் காப்பு முதல் சிறுதேர் வரையிலான பத்துப் பருவம் குறித்தும் ஒவ்வொரு விருத்தமாகப் பத்து விருத்தத்தால் ஒரு பிள்ளைத் தமிழ்ப் பதிகப் பாமாலையைச் சூட்டியுள்ளார். சிறு காவியத்தின் அங்கமாகப் பிள்ளைத்தமிழ் மரபை ஒட்டிப் பத்துப் பாடல்களைப் பாடி ஒரு புதுமையைப் பிள்ளையவர்கள் தோற்றுவித்துள்ளார்கள். டாக்டர் வ.சு. செங்கல்வராய பிள்ளை இயற்றிய திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ், பாலகவி முத்து. கோ. இராமன் எழுதிய திருநாவுக்கரசர் பிள்ளைத் தமிழ், நா. கனகராஜையர் பாடிய சுந்தரர் பிள்ளைத்தமிழ், திராவிடக் கவிமணி முத்துசாமி ஐயர் பாடிய மாணிக்கவாசகர் பிள்ளைத்தமிழ் ஆகியவற்றில் பருவத்துக்கு ஒரு பாடலாய்ப் பத்துப் பாடல்களே உள. மேற்குறித்த நால்வர் பாக்களையும் ஒருசேரக் கொண்டு நால்வர் பிள்ளைத்தமிழ் என்றும் பெயரிட்டு வழங்குவர். சதகமாய் நூறு பாடல் களைக் கொண்டிருந்த பிள்ளைத்தமிழ் இன்று பத்துப்பாடல்கள் கொண்ட ஒரு பதிகம் போன்று சுருங்கியுள்ளமையும் காலத்தின் விளைவே.

### அடிமதிக்குடி ஐயனார் பிள்ளைத்தமிழ்

அடிமதிக்குடி என்னும் ஊரில் கோயில் கொண்டருளும் அய்யனார் புகழ் பேசுவது இந்தப் பிள்ளைத்தமிழ். இதன் ஆசிரியர் பெயர் அறிய இயலவில்லை. நூலின் போக்கிலிருந்து இவர் சைன சமயத்தைச் சார்ந்தவர் என்பது தெளிவு. இவர் காலம் ஏறத்தாழ அப்பாண்டை நாதர் உலாவைப் பாடிய அனந்தவிசயர் வாழ்ந்த பதினாறும் நூற் றாண்டை ஒட்டியதாகலாம். இது பிள்ளைத்தமிழ் இலக்கிய மரபை ஒட்டியமைந்துள்ளது. ஆயினும், பெரும்பான்மைப் பிள்ளைத்தமிழ் நூல்களைப் போலன்றிப் பருவத்திற்குப் பத்துப் பாடல்களாய் இல்லாமல் ஐந்தைந்து பாடல்களைக் கொண்டுள்ளது இந் நூல். சிவஞான முனிவர் பாடிய செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழும் பருவத்திற்கு ஐந்து பாடல்களாய் ஐம்பது பாடல்களைக் கொண்டுள்ளமையும் ஈண்டு நினைவுகூரத்தகும். இப்பொழுது தெரியவருகின்றவரையில் ஐம்பது பாடல்களைக் கொண்டு விளங்கும் பிள்ளைத்தமிழ் நூல்கள் இவ்விரண்டுமே.

### அடிமதிக்குடி

‘அடிமதிக்குடி’ என்னும் ஊர் எங்குள்ளது என்று பார்ப்போம். இந்த ஊர் தென்னார்க்காடு மாவட்டத்தில் திருக்கோவலூர் வட்டத்தைச்

சார்ந்தது என்பதும் இதற்கு அதுகுடி, வீரசோழபுரம் என்னும் பெயர்கள் உண்டு என்பதும் இந் நூலின் ஏட்டுப்பிரதியை எழுதியவர், அதன் இறுதியில் எழுதிய குறிப்புகளால் தெரியவருகின்றன. 'திருக்கோவிலூரதுகுடி வீரசோழபுரம் ராசப்ப நயினுர் குமாரன் நல்லதம்பி எழுதி நிறைவேறினது' என்னும் குறிப்பினுல், 'அதுகுடி' என்பது 'அடிமதிக்குடி' என்பதன் மரூஉ என்பது வெளிப்படை. இப் பெயருடன் திருக்கோவலூர் வட்டத்தில் இப்பொழுது ஓர் ஊர் உள்ளதா என்பது தெரியவில்லை. 'அதுகுடி வீரசோழபுரம்' என்பதனுல் அதுகுடிக்கு வீரசோழபுரம் என்பது மற்றெரு பெயராம் என்று ஊகிக்கலாம். தமிழ்நாட்டு அரசாங்கம் வெளியிட்டுள்ள கிராமங்களின் அகரவரிசைப்பட்டி நூலில் (1972) திருக்கோவலூர்த் தாலுகாவில் 'வீரசோழபுரம்' என்னும் பெயர் இறுதியாய் இடம்பெற்றுள்ளது. எனவே, இன்று வீரசோழபுரம் என வழங்கும் ஊரே 'அதுகுடி' என மருவிய அடிமதிக்குடி என்பது தெரியவரும்.

இவ்வூரை அய்யனுர் பிள்ளைத்தமிழ் ஆசிரியர் 'அடிசை' எனப் பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். மற்றும், 'சினேந்திரபுரி', (7), 'தருமபுரி' (7, 5, 28, 40), 'தருமாபுரி' (34, 35, 45), 'ஆதிபுரம்' (8) என்னும் பெயர்களையும் வழங்கியுள்ளார். சினநாயகர் எழுந்தருளியிருப்பதால் 'சினேந்திரபுரி' என்றும், சினதருமம் நிலைபெற்ற ஊராதலால் 'தருமபுரி', 'தருமாபுரி' என்றும் பெயர் பெற்றதாதல் வேண்டும். 'கொலை தவிர் அடிசை' (19—20) என்று இவ்வூரில் கொல்லாவிரதத்தார் மிக்கிருந்தமையையும் இவ்வாசிரியர் சுட்டியுள்ளார். இவ்வூரிலுள்ள சைனப் பெருமக்கள் அருகதேவரின் ஆகமங்களை ஓதிவரும் வழக்கமுடையவர். ஆகவே. இவர்தம் வாய்மொழி கேட்ட குயில்களும் அவற்றை வழிமொழிகின்றனவாம் :

> 'வாமனெறி யாகம மெல்லாம்
> மாவிற் குயில்கள் மிகப்பயிற்ற' (40)

என்று இவ்வூரின் தெய்விகச் சூழலையும் பிள்ளைத்தமிழாசிரியர் குறிப்பாய் உணர்த்தியுள்ளார்.

அருகன் ஆகமங்களை மட்டுமா அவ்வூரார் ஓதினுர்கள்? சங்கத் தமிழையும் கற்றுணர்ந்தனர். இதனை,

> 'கூறும் சங்கத் தமிழ் ஒருபால்
> குலவும் மறைக்குரல் ஒலி ஒருபால்' (39)

எனவரும் ஆசிரியர் வாக்குத் தெரிவிக்கின்றது. இவ்வூர் மிகப் பழமையானது என்பது 'அடிசை மூதூரு' (43, 49), 'ஆதிபுரம்' (7, 8, 29) எனப் போற்றப்படுவதுகொண்டு அறியலாகும்.

அடிசையூர் 'அனசை' நாட்டிலே, 'விரிசிலை' (6, 9, 25) என்னும் நதிக்கரையில் அமைந்தது என்பதும் நிலவளம், நீர்வளம் மிக்க பதி என்பதும் இந் நூலால் தெரியவருகின்றன. அடிசையூராகிய

வீரசோழபுரம் பெண்ணையாற்றங்கரையில் உள்ள ஓர் ஊராகும். பிள்ளைத் தமிழாசிரியர் சுட்டுகின்றபடி அனசைநாடு, விரிசிலை என்பன முற்பட்ட வழக்காதல் வேண்டும் போலும்.

*ஐயனார்*

ஐயனார் சினநாயகராகிய அருகதேவர் ஆலயத்தில் விளங்கும் காவல் தெய்வம் ஆவர். இவரே அந்த ஊரின் காவல் தெய்வமும் ஆவர். 'அடிசை காவலன்' (1, 44, 46, 49) என்று இவர் சிறப்பிக்கப் படுகிறார். 'சினநாயகர்க்குரிய யோகசாத்தையன்' (46—50), 'அறிவனெறிகளை கவரு தேவகுரு நாதன்' (32) என்பவற்றால் இவர் சினநாயகரின் உரிமையாளராய் அவர்தம் அறத்தைக் காப்பவர் என்பது தெளிவாம். 'எண்குணத் திறைவனான அண்டர் நாயகனை அருச்சனை செய் மெய்யன்' (31) ஆவார் இவர்.

'மும்மதி முக்குடை மூவா முதல்வன் மொழிந்தமறை
அம்மதி சேருய ராரிய னேயறங் காப்பவனே'

என இப் பிள்ளைத்தமிழின் முதல் தொடக்கமாகிய சாத்தையன் வணக்கப் பாடலில் சாத்தையன் அருகதேவனின் திருவறம் காப்பவர் என்பதை ஆசிரியர் தெரிவித்துள்ளார்.

'ஐயனார்' என்பதனை 'அய்யனார்' எனவும் போலி எழுத்திட்டுச் சொல்லுவர். இவரைச் சாத்தன் என்றும், 'மாசாத்தன்' என்றும், 'சாத்தையன்' என்றும் குறிப்பிடுவது உண்டு. 'சாத்தையன்' என்னும் பெயரே இப் பிள்ளைத்தமிழ்ப் பாடல்களில் பல இடங்களிலும் பயின்று வந்துள்ளது. யோகநிலையில் இவர் சிறந்துள்ளாராதலின் 'யோக சாத்தையன்' என்றும் இவர் போற்றப்படுகிறார் (2, 3 முதலியன). 'யோகமாசாத்தன்' (4, 5) 'யோகவீரன்' (47), 'யோகேசன்' (14), 'யோகையன்' (38) என்று இந் நூலாசிரியர் ஐயனாரைப் பாராட்டுவர். 'அரிகர குமரன்' (13, 14, 19, 20, 43), 'அரிகரபுத்திரன்' (1, 8), அரியரபுத்திரன் (7) என்றும் இவர் வழங்கப்படுவர். அறுபகைகளையும் வென்றமையினால் அருகதேவருக்கு 'அரிகரன்' என்றும் ஒரு பெயருண்டு. அரிகரனாகிய அருகதேவருக்குப் புதல்வரைப் போன்று அவர்தம் அறம் காத்துத் தொண்டு பூண்டவராதலின், இவர் அரிகரபுத்திரன் என்று பெயர் பெற்றுள்ளார்.[5]

---

5. அரிகரபுத்திரர் என்பார் சிவபெருமானுக்கு மோகினியுருக் கொண்ட திருமாலிடம் பிறந்தவரான மைந்தர் என்றும் கொள்ளப்படுகிறார்; அரி - திருமால். அரன் - சிவன். இந்து சமயத்தாரும் இவரை ஊர்காவல் தெய்வமாகக்கொண்டு இவர்மேல் பல புராண வரலாறுகளையும் ஏற்றிக் கூறி வந்துள்ளனர். சாத்தையனைக் குறித்து வளர்ந்த வரலாறுகள் பல. அவற்றைப் பிற்சேர்க்கையில் காணலாம்.

'சம்புதிரு மறுமார்பன் அருள்கின்ற புதல்வனை' என இப் பிள்ளைத் தமிழாசிரியர் ஓரிடத்தில் சுட்டியுள்ளதும் (5) இக் கருத்துப் பற்றியேயாம்.

*சீதளநாதரின் இயக்கன்*

அருக சமய தீர்த்தங்கரர் ஒவ்வொருவருக்கும் தொண்டு பூண்டு காவல் கடமை செய்துவரும் இயக்கன், இயக்கியர் உளராவர். சாத்தையனார் பத்தாம் தீர்த்தங்கரராகிய சீதளநாதர்க்குரிய இயக்கன் ஆவார். இதுபற்றியே,

'சீதள சினபதி பாத சரோருக
சேவித மாவீரா' (7)

என்று இப் பிள்ளைத்தமிழாசிரியரும் பாராட்டுகின்றார்.

சாத்தையன் திருவுருவம்

சாத்தையனின் திருவுருவத்தையும் அவர்தம் வீரதீரங்களையும் எல்லாரையும் காக்கின்ற தன்மையையும் இப் பிள்ளைத்தமிழ் ஆசிரியர் பல இடங்களில் சிறப்பித்துப் பாடியுள்ளார். சாத்தையன் சைன மரபுப்படி பிரமதேவராகக் கருதப்படுகிறார். ஆகவே, இவர் 'சதுமறை யபயன்' (4) என்றும், 'கமலாசனத்திலுறை நால்வேதன்' (2) என்றும் போற்றப்படுகிறார்.

சாத்தனாகிய ஐயனாரின் நிறம் கருமை. 'காருலவு மேனிக் கனக்கொண்டல்' (2) என்னும்படி காட்சி தருகிறார். தலையிலே சடைமுடியுடன் காட்சி தருபவர். எனவே, இவர் 'மதிதிகழ் சடை மகுட கிரீடன்' என்று போற்றப்படுகிறார். இவர் தாங்கியுள்ள ஆயுதங்கள் பல : வில், அம்பு, வாள், வேல், சக்கரம், முசலம், பரசு, சூலம், செண்டு, முதலியனவாம். இவர்தம் செண்டாயுதம் எல்லா வற்றிலும் முதன்மையாய்க் கூறப்படும். 'செண்டாயுதத் திறைவன்' (3), 'செண்டாயுதப்பிரபலன்' (48), செண்டாயுதத்தன்' (15) என்று இவ்வாறு இப் பிள்ளைத்தமிழாசிரியரும் போற்றுகிறார். 'செண்டலங் காரன்' என்பதும் இவருக்குரிய ஒரு பெயராம்.

வெள்ளையானை, வேகமான குதிரை இவற்றை வாகனமாகக் கொண்டிருப்பவர் (14, 16, 23). சந்திரனைப் போன்று வெள்ளொளி வீசும் முத்தக்குடையுடையவர். பகைகளைக் கடிந்து அழிப்பதில் வல்லவர். 'உக்கிரகோப மிகுத்தோன்' (8), 'மாமேவு வீரியன்' (1), 'துஷ்ட நிக்கிரக வீரன்' (3). 'சத்துருசங்காரன்' (17), 'சகலசன ரட்சகன்' (27), கலைபலவும் நன்குணர்ந்தவன். ஆகவே,

'சம்புதிரு மறுமார்பன் அருள்கின்ற புதல்வனை
சகலகலை யுணர்வி னனை

சதுர்யுக மேகண்ட தருமபரி பாலனைச்
சங்கித சாயித் தியனை’

என்று போற்றுகிருர் பிள்ளைத்தமிழ் ஆசிரியர்.

இனி, சாத்தையனர் சைன சமயத்தாரால் எவ்வாறு போற்றப் பெறுகிருர் என்று பார்ப்போம் :

*அருகன் ஆலயத்தில் சாத்தையன்*

அருகன் ஆலயங்களில் மூவுலகநாதனுகிய மூவறு குற்றமும் முற்றும் நீக்கிய தீர்த்தங்கரரின் திருவுருவம் திருக்கோயிலின் மூலமூர்த்தியாய் விளங்கும். அருகதேவரின் இருக்கைக்குப் புறம்பே வெளியில் வலப்பக்கமாய்ப் பிரமதேவரின்—அதாவது ஐயனரின் உருவம் நிறுவப்பட்டிருக்கும். இவர் ஓர் இயக்கராவார். இவர்தம் உருவைப்போலவே இடப்புறமாய் இயக்கியின் படிமம் அமைக்கப் பட்டிருக்கும். இயக்கன் - இயக்கியர் அருகதேவரின் திருவறம் காத்துநிற்கும் காவல் தெய்வங்களாவர்.

சைனலய பூசை நடைமுறைகளிலும் மன்னுயிர் அனைத்திற்கும் புண்ணியநாதராய் விளங்கும் அருகர் முதலிய ஐங்குரவராகிய பஞ்சபரமேட்டிகளுக்கே (அருகர், சித்தர், ஆசாரியர், உபாத்தியாயர், சாதுக்கள்) முதற்பூசை நடைபெறும். அதன் பின்னர் காவல் தெய்வங்களாகிய இயக்கன்—இயக்கியர்க்கும் பூசை செய்யப்படும்.

இயக்கராகிய ஐயனருக்குச் செய்யப்படும் சிறப்புகளுள் முக்கிய மாய்க் குறிப்பிடத்தக்கது சந்தனக் காப்பு. இந் நிகழ்ச்சியை வியாழக்கிழமையன்று செய்விப்பதே பெரும்பான்மை வழக்கமாகும். மார்கழி மாதத்தில் இந்தச் சந்தனக் காப்புச் சாத்தும் வழிபாடு மிகுதியாய் நிகழ்த்தப் பெறுகிறது.

மற்றும் ஐயனருக்குச் செய்யப்படும் சிறப்பு வழிபாட்டில் ஐயமிழ்து (பஞ்சாமிர்தம்) அபிடேகமும் முக்கியமானதே. ஐயமிழ்தில் கலக்கப்படும் ஐந்து பொருள்களாவன : ஒன்று நீர் ; இரண்டாவது தேங்காயும் பழவகைகளும். மூன்ருவது பருப்பு வகை, நெய், இனிப்புகள் ஆகியவை; நான்காவதாக அமைவது பாலும் தயிரும் ; ஐந்தாவது இறுதியாகச் சந்தனம் அணிவிக்கப்பெறும். பல்வகை ஆடை, அணிகளாலும் மலர்மாலைகளாலும் ஐயனர் அலங்கரிக்கப் படுவார். பின், அவருக்கு அமுது படைத்து வணங்கி வழிபடுவர்.

ஐயனருக்குப் பூரணை, புட்கலை என்னும் இரு தேவிமாரும் உள்ளனர். இவர்களுடைய உருவமும் ஐயனர் உருவுடன் அமைத்து வழிபடப்பெறும்.

'வாரணத்தின் மீதே வளர்ந்த புகழாகும்
பூரணை புட்கலையாம் பூவையர்க்குக் காரணனும்'

என்று அப்பாண்டைநாதர் உலாவில் (57) அனந்தவிசயர் போற்றுகிறார்.

சைனலயத் திருவிழாக்களில் பகவன் வீதியுலா வரும்போது ஐயனார், இயக்கியர் உருவங்கள் முன்னே கொண்டு செல்லப்படும். இயக்க—இயக்கியர் அருகன் அறங்காக்கும் தொழில் மேற்கொண்டு அவருக்குப் பணிவிடைகள் செய்து செல்லுகின்றனர் என்பதனை இது குறிக்கும்.

**சாத்தையன் வழிபாடு**

சைனலயங்கள் எல்லாவற்றிலும் ஐயனாரின் படிமை இருக்கும். தமிழ்நாட்டில் சிறப்பாக வடார்க்காடு மாவட்டத்தில் தேசூர், கரந்தை, இளங்காடு என்னும் ஊர்களிலும் தென்னார்க்காடு மாவட்டத்தில் பெருமண்டூர், மேல்சித்தாமூர், திருநறுங்குன்றம் என்னும் ஊர்களிலும் ஐயனார் பூசனை சிறப்பாக நடைபெற்று வருகின்றது. வழிபாட்டில் பாடப்பெறும் தோத்திரப் பாக்கள் சிலவும் வழக்கத்தில் உள்ளன.[6]

**சுவடி வரலாறு**

இதுவரை அச்சில் வாராத இந்த அடிமதிக்குடி அய்யனார் பிள்ளைத் தமிழ்ச் சுவடியைத் தேடிப் பெற்றுவந்து அன்புடன் உதவியவர் பெரியார் டி. எஸ். ஸ்ரீபால் அவர்களாவர். திருப்பறம்பூர்ப் புத்தக சாலையிலிலிருந்து அவர்களுக்கு இச் சுவடி கிடைத்துள்ளது. இவ்வூரில் தோன்றிய ஸ்ரீசுதர்மசாகர முனிவர் ஐந்தவித்த ஆன்றோராய்ப் பல அற்புதங்களை விளைவித்து அண்மையில் அருக பதவியைப் பெற்றுள்ளார். மெய்த்தவத்தால் வீட்டுலக மெய்திய ஸ்ரீ 108 சுதர்மசாகர முனிவர் திருப்பெயரால் திருப்பறம்பூரில் இப்பொழுது நினைவு மண்டபம் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. இது குறித்துச் சிறப்பு மலர் ஒன்றையும் 'நல்லறம்' திங்கள் இதழ் (டிசம்பர் 1975) வெளியிட்டுள்ளது. சுதர்மசாகரர் மறைந்தபோது பெரியார் டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள் திருப்பறம்பூருக்குச் சென்றிருந்தார்கள். அப்பொழுது அங்குள்ள நூல்நிலையத்தை ஆராய்ந்தபோது இந்தச் சுவடி அவர்களுக்கும் கிடைத்தது.

இந்தச் சுவடியின் இறுதியில்,

'வாக்தேவி சகாயம். ஸ்ரீகெந்தவேணுகிரி அப்பாண்டைநாதர் கடாட்சம் உண்டாக வேணும்.'

---

6. திருநறுங்கொண்டைத் தோத்திரத் திரட்டு நூலில் மகா சாத்தய்யா பதிகம், மகா சாத்தய்யா கட்டளைக் கலித்துறை என இரு பிரபந்தங்கள் உள. இவற்றைப் பிற்சேர்க்கை 2-ல் காண்க.

என்று தமிழிலும், அடுத்து,

'ஸ்ரீ நேமிநாதாய நம: வாக்தேவி சகாயம், சுபமஸ்து'

என்று கன்னடத்திலும் எழுதப்பட்டிருக்கிறது.

இதனை அடுத்து,

'பராபவஞு கார்த்திகைமீ 28வ அஷ்டமி 21¼ உத்தரம் 50, பிரீதி 15-6-21½, திவி 7—இந்த சுப தினத்தில் திருக்கோவலூரதுகுடி விரசோழபுரம் ராசப்ப நயினார் குமாரன் நல்லதம்பி எழுதி நிறைவேறினது. அடிமதிக்குடி அய்யனார் பிள்ளைத் தமிழ் முற்றும். ஸ்ரீ பிரம்ஹ தேவர் துணையாக வேணும். வாக்தேவி சகாயம்,'

என்னும் குறிப்புகள் காணப்படுகின்றன.

இந்தச் சுவடிக்கும் ஏற்கெனவே சித்தாமூர் ஜைன மடத்திலிருந்து கிடைத்த அப்பாண்டை நாதர் உலாச் சுவடிக்கும் ஓர் இயைபு காணப் படுகிறது. இரண்டு பிரதிகளையும் எழுதியவர் நல்லதம்பி என்பாரே யாவர். இரு சுவடிகளும் பிரதி செய்யப்பட்ட ஆண்டும் ஒன்றே. உலாச் சுவடியைப் பராபவ வருஷம் கார்த்திகை மாதம் 19ஆம் தேதி எழுதி முடித்திருக்கிறார். இந்தப் பிள்ளைத்தமிழ்ச் சுவடியும் அதே ஆண்டு கார்த்திகை 28ஆம் நாளில் நிறைவு செய்திருக்கிறார். உலாப் பிரதி எழுதிய ஒன்பதாம் நாளில் பிள்ளைத்தமிழ்ச் சுவடியும் எழுதி முற்றுவிக்கப்பட்டிருக்கிறது.

தமிழ்நாட்டு அரசின் கீழைத்திசைச் சுவடி நூல்நிலயத்தார் வெளி யிட்டுள்ள 'பிள்ளைத்தமிழ்க் கொத்து' இரண்டாம் பாகத்தில் ஐந்தாவது நூலாகக் காணப்படும் 'யோகி சாத்தையர் பிள்ளைத்தமிழ்' என்னும் குறை நூல் இந்த அடிமதிக்குடி அய்யனார் பிள்ளைத்தமிழின் பிற்பகுதியாகும். இதில் நான்காவது பருவமாகிய சப்பாணிப் பருவத்தின் 5ஆம் பாடல் தொடங்கி நூல் முடிய உள்ளது. ஆயினும், இதில் பாடல்களின் இடையிடையே சொற்களும் அடிகளும் சிதை வுற்றும் பல இடங்களில் பொருள் விளக்கமின்றியும் காணப்படு கின்றன. நூலின் பெயர்கூட ஏடு சிதைந்த நிலையில், 'யோகி சாத்தையர் பிள்ளைத்தமிழ்' என எழுதப்பட்டுள்ளமை கொண்டே இச் சுவடியின் நிலையை உய்த்துணரலாம். நூல் முழுமையும் திருத்தமான பாடங் களுடனும் குறிப்புரை முதலியவற்றுடனும் முதன்முதலாக இப்பொழுது தான் வெளிவருகின்றது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## குறிப்புரையும் அகராதியும்

இப் பிள்ளைத்தமிழ்ப் பாடல்களைப் பெரிதும் முயன்று ஆய்ந்து செப்பஞ் செய்தபோதிலும் விளங்காத இடங்கள் சில உள்ளன. இவை

யெல்லாம் மேலும் திருத்தமுற வேறு சுவடிகள் கிட்டவேண்டும். இதன் சுவடி யாரிடமாவது இருந்து உதவினுல் இனிவரும் பதிப்பில் இது மேலும், நன்கு திருத்தமுற அமையும். பாடல்களில் வரும் அருஞ் சொற்களையும் சில மரபுகளையும் விளக்கிக் குறிப்புரை ஒன்று எழுதிச் சேர்த்துள்ளேன். சிறப்புப் பெயர் முதலியவற்றின் அகராதியும் பாட்டு முதற்குறிப்பு அகராதியும் தரப்பட்டுள்ளன.

### பிற்சேர்க்கை

ஐயனர் என வழங்கும் சாத்தன் என்னும் தெய்வத்தைக் குறித்துப் பல்வேறு செய்திகள் இலக்கியங்களிலும் பிற குறிப்புகளிலும் விரவிக் கிடப்பது தெரியவந்தது. அவற்றை எல்லாம் தொகுத்துச் ‘சாத்தன் வரலாறு’ என்னும் தலைப்பில் விரிவாக எழுதியுள்ளேன். பிள்ளைத் தமிழ்ப் பாடல்களில் வரும் பல செய்திகளை விளங்கிக்கொள்வதற்கும் இவ் வரலாறு உதவும்.

மற்றும் திருநறுங்கொண்டைத் தோத்திரத் திரட்டில், அவ்வூரில் கோயில் கொண்டிருக்கும் சாத்தையனைப்பற்றிய தோத்திரங்கள் காணப்படுகின்றன. இச் சாத்தையன் இருபத்துமூன்றும் தீர்த்தங்கர ராகிய பார்சுவநாதர் திருக்கோயிலின் காவல் தெய்வமாக விளங்கு பவர்; சமண சமயத்தாரால் பெரிதும் போற்றப்படுபவர். எனவே, அய்யனர் பிள்ளைத்தமிழில் வரும் செய்திகளோடு ஒப்புநோக்கிக் காண்பதற்குத் துணைசெய்யும் வகையில் இரண்டாவது பிற்சேர்க்கை யாக ‘மகா சாத்தய்யா பதிகம்,’ ‘மகா சாத்தய்யா கட்டளைக் கலித் துறை’ என்னும் இரு சிறு பிரபந்தங்களும் இணைக்கப்பட்டுள்ளன.

### நன்றியுரை

‘தமிழாய்வு’ இதழில் அச்சில் வாரா அருந்தமிழ் நூல்களைத் தேடி அச்சிடும் பொறுப்பை எனக்குத் தந்துள்ள தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களுக்கு முதற்கண் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன். அடுத்தபடியாக வெளிவாரா நூல் களை ஆர்வத்துடன் தேடிக்கொண்டுவந்து அன்புடன் உதவிவரும் முது பெரும் பெரியார் சமண சமயக் காவலர், ஜீவபந்து, பிராணிமித்திரா, டி. எஸ். ஸ்ரீபால் அவர்களின் தமிழன்புபெரிதும் பாராட்டற்பாலது. அவர்களுக்கு என் நன்றி கலந்த வணக்கங்கள்.

ஒரே ஏட்டை வைத்துக்கொண்டு ஒரு நூலை அச்சிடுவது பெரிதும் துன்பம் தருவது. அதற்கு ஏட்டுப் பரிசோதனையில் அனுபவம் வாய்ந்தவர் துணையும் இன்றியமையாதது. இந்த வகையில் நான் இந் நூற் சுவடியைப் பிரதிசெய்து ஆராய்ந்து வந்தபொழுது அன்பர் இருவர் உடனிருந்து உதவினர். ஒருவர் டாக்டர் உ. வே. சாமிநாதையர்

நூலகத்தின் தமிழ் நூல் வெளியீட்டுப் பொறுப்பிலிருக்கும் நண்பர் கவிஞர் மு. கோ. இராமன் அவர்களாவர். மற்ரெருவர் ச. தேவகுமார், M.Sc., ஆவர். இவர் இளைஞராயினும் சமண சமய சாத்திரங்களில் நல்ல பயிற்சியுடையவர். இவரால் அருக சமயம்பற்றி இப் பிள்ளைத்தமிழில் வரும் குறிப்புகள் விளக்கமாயின. இவ் விருவருக்கும் என் உளமார்ந்த நன்றியைத்தெரிவித்துக்கொள்ளுகிறேன். அகராதிகளை முறைபடுத்திப் படியெடுத்தும் அவ்வப்போது அச்சுப்படி திருத்துவதற்கு உதவிபுரிந்தும் வந்த திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி உதவியாளர் செல்வன் பா. சங்கரனுக்கு என் நல்வாழ்த்துகள்.

அய்யனர் திருவருள் அனைவர்க்கும் ஆகுக.

சென்னை-5.
20-12-'75.

மு. சண்முகம் பிள்ளை

## தமிழ் இலக்கிய உலகில் பிள்ளைத்தமிழ்

அடிமதிக்குடி அய்யனுர் பிள்ளைத் தமிழ் (16)

அண்ணுமலை ரெட்டியார்
நவநீத கிருட்டிணன் பிள்ளைத் தமிழ் (19)

அப்புக்குட்டி ஐயர்
நல்லூர்ச் சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழ் (18)

அப்புலிங்கம் (கலைவாணன்)
காவை முருகன் பிள்ளைத்தமிழ் (20)

அருணுசலக் கவிராயர், சீகாழி.
அனுமார் பிள்ளைத்தமிழ் (18)

அருணுசலக் கவிராயர், மு. ரா.
சிவகாமி பிள்ளைத்தமிழ் (20)
சேது பர்வதவர்த்தனியம்மை பிள்ளைத்தமிழ் (20)
சேறை தவம்பெற்ற நாயகி பிள்ளை (20)
திருப்பரங்கிரிப் பிள்ளைத்தமிழ் (20)

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ்

அழகர் பிள்ளைத்தமிழ்

அழகிய சொக்கநாத பிள்ளை
காந்திமதியம்மை பிள்ளைத் தமிழ் (19)

ஆண்டாள் பிள்ளைத்தமிழ்

ஆழ்வார் பிள்ளைத்தமிழ்

இராமன், மு. கோ.
திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ் (20)

ஒட்டக்கூத்தர்
குலோத்துங்கசோழன் பிள்ளைத் தமிழ் (12)

கச்சியப்ப முனிவர்
சென்னை விநாயகர் பிள்ளைத் தமிழ் (18)

---

இத் தொகுப்பு, தமிழ்நாட்டு அரசு வெளியிட்டுள்ள 'தமிழ்நூல் விவர அட்டவணைகள்,' அரசாங்கக் கீழைத்திசைச் சுவடி நிலையம் வெளியிட்டுள்ள 'பிள்ளைத்தமிழ்க் கொத்து' என்னும் திரட்டுநூல், திரு. ந. சி. கந்தையாப்பிள்ளை தொகுத்துள்ள 'தமிழ்ப்புலவர் அகராதி,' 'தமிழ் இலக்கிய அகராதி' என்னும்அகராதிகள், அபிதான சிந்தாமணி, தமிழ்க் கலைக்களஞ்சியம், மற்றும் சிதம்பரம் மணிவாசகர் நூலக வெளியீடாகிய திரு. ந. வீ.செயராமன் என்பார் எழுதியுள்ள 'சிற்றிலக்கியச் செல்வங்கள்' என்னும் நூல் முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆக்கப்பட்டுள்ளது. நூற்பெயரை அடுத்துப் பிறைவளைவுக்குள் தரப்பட்டுள்ள எண்கள் அவ்வந் நூல் தோன்றிய நூற்றுண்டினைக் குறிக்கும். ஆசிரியர் பெயர் தெரியவாரா நூல்களும் ஆசிரியர் அகரவரிசையில் தரப்பட்டுள்ளன. காலம் திட்டமாகத் தெரிய வாராதனவாகிய நூல்கள் எண் குறிப்பின்றிக் காணப்படும்.

அடிமதிக்குடி

# அய்யனர் பிள்ளைத்தமிழ்

## சாத்தையன் வணக்கம்

மும்மதி முக்குடை மூவா முதல்வன் மொழிந்தமறை
அம்மதி சேருய ராரிய னேயறங் காப்பவனே
எம்மதி கோடி யிருந்தாவ தேதுன் னிருதயத்தின்
சம்மதி யாம்படி செய்வா யடிசையிற் சாத்தையனே.

மதி - முழுநிலா ; அறிவு. 'முச்சகம் நிழற்றும் முழுமதி முக்குடை' (நன். சொல். 1). முக்குடை - அருகதேவருக்கு நிழல் செய்து விளங்கும் மூன்று குடை ; மூவுலகையும் அவர் காப்பதற்குச் சின்னமாக இவை இலங்குகின்றன. இவற்றிற்குக் கீழிருந்து முறையே சந்திராதித்தம், நித்திய விநோதம், சகல பாசனம் என்பது பெயராம். மூவா முதல்வன் - மூப்பு இன்றி ஒரு தன்மைத்தாய தலைவன், அழிவில் லாதவன். மொழிந்த மறை - அருளிய வேதம் நான்கு : பிரதமாநு யோகம், சரணநு யோகம், கரணநு யோகம், திரவ்யாநு யோகம். ஆரியன் - உயர்ந்தோன். அறம் - அருகதேவன் அருளிய திருவறம்.

"மூவா முதலா உலகம் ஒருமூன்று ஏத்தத்
தாவாத இன்பம் தலையாயது தன்னின் எய்தி
ஓவாது நின்ற குணத்து ஒள்நிதிச் செல்வன் என்ப
தேவாதி தேவன்அவன் சேவடி சேர்தும் அன்றே"

என அருகதேவனைப் போற்றுகிறர் சீவக சிந்தாமணிக் காவியத்தில் திருத்தக்கதேவர். அறம் காப்பவன் - திருவறத்தைக் காக்கும் இயக்கன். சம்மதி - சன்மதி, தூய அறிவு. அடிசை - 'அடிமதிக்குடி' என்னும் ஊரின் குறுக்கம். சாத்தையன் - சாத்தன் ஐயன், சாத்த ணுகிய ஐயன். ஐயன் - ஐயனர், தலைவன். ஐயனருக்குச் 'சாத்தன்' என்னும் ஒரு பெயரும் உண்டு. ஐயனர்மீது பிள்ளைத்தமிழ் பாடத் தொடங்கும் கவிஞர் தூய அறிவு (நற்காட்சி) வேண்டி ஐயனரையே முதலில் வேண்டுகின்ரூர். (சாத்தையனரைப்பற்றி வழங்கும் செய்தி களை இந்நூலுள் பிற்சேர்க்கையில் காணலாம்.)

## காப்பு

1. பூமேவு பொன்மாது வளரடிசை காவலன்
புனித னரிகர புத்திரன்
புகர்முகவெள் ளானையான் தருமபுரி பாலகன்
போற்று மன்பர்க் குரியவன்
மாமேவு வீரியன் பூரியன் திரியன்
மதுரவாக் கறிந்து தருவோன்
மஞ்சுதிகழ் மேனியன் விஞ்சையர்கள் பணிதேவ
மாசாத் தன்றனைக் காக்கவே—
தேமேவு மாமுதற் பஞ்சகர்த் தாக்களுஞ்
செப்பெரிய நான்ம றைகளுஞ்
செகமேற் சராசரமும் முப்பத்து முக்கோடி
தேவர் களுமடி பரவவே
பாமேவு மறுசமய நீதமும் பேதமும்
பட்சமும் பண்பு மாகிப்
பகரரிய குற்றங்கள் பதினெட்டு மேநீத்த
பரமூர்த்தி யாவ னவனே.

காப்பு என்பது பாட்டுடைத் தலைவனைத் தெய்வங்கள் காப்பதாக என வேண்டும் பகுதியாகும். இப் பருவப் பாடல்களின் முற்பகுதி பாட்டுடைத் தலைவனுடைய இயல்பும், பிற்பகுதி அவனைக் காக்குமாறு வேண்டும் தெய்வங்களின் புகழுமாக அமைவது மரபு. இந்நூலின் காப்புப் பருவச் செய்யுள்களின் முற்பகுதிகளில் சாத்தையன் புகழ் பேசப்பட்டுள்ளமை காணலாம். பிற்பகுதியில் முறையே பரமூர்த்தியும் ஆயிரத்தெட்டு வேதமுணர் பெருமானுமாகிய அருகன் (1, 2), வாகுபெலி (3), கெவுதமுனி, சாரணர், முனிபதிகள் (4), வாணி (5) ஆகியோர் போற்றப்பட்டுள்ளனர்.

பொன்மாது - இலக்குமி. காவலன் - காவல் தொழில்புரிவோன். ஐயனரை ஊர்காவல் தெய்வமாக ஊரின் வெளிப்புறத்தே வைத்து வழிபடும் வழக்கம் நம் நாட்டில் வழிவழியாய் வந்துகொண்டிருக்கிறது. இதனல், இவருக்குப் 'புறம்பணையான்' என்னும் ஒரு பெயரும் உண்டு. புகர் - புள்ளி. தருமபுரி - அடிமதிக்குடியின் மற்றொரு பெயர்; அருகதருமம் நிலைபெற்றிருக்கும் ஊர் என்பதாம். வீரியன் - வீர முடையவன். தாரியன் - மாலையையுடையவன். திரியன் - தைரியத்தையுடையவன். மதுரவாக்கு - இனிய பேச்சு. மஞ்சு - மேகம். விஞ்சையர் - வித்தையையுடையவர், வித்தியாதரர். அரிகரன் - வினைப் பகை வென்றேன். ஐயனர் அரிகரனுகிய அருகதேவனின் இயக்கன் ஆதலால், உபசார வழக்காய் அரிகரபுத்திரன் என்று சொல்லப் பட்டது. 'அரிஹரம்' என்பது பாவங்களைப் போக்குபவன் என்னும்

பொருளில் அருகனுக்கு உரிய ஒரு சிறப்புப் பெயராம். தேவமாசாத்தன் - தெய்வத்தன்மையையுடைய சாத்தன் என்னும் தெய்வம். பஞ்சகர்த்தாக்கள் - பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் எனப் பரமசிவத்தின் உருவங்களாய்ப் படைப்பு முதலிய ஐந்தொழில் புரிவதற்கு அமைந்த ஐந்து தலைவர்கள். செப்பெரிய - புகழப்படுகின்ற பெரிய. செகம் - உலகம். சராசரம் - இயங்கியற் பொருளும், நிலையியற் பொருளும். அறுசமயம்-நித்தியம், அநித்தியம், அவாக்கியம், பின்னம், அபின்னம், சூனியம். நீதம் - தகுதி. பட்சம் - அன்பு. பரமூர்த்தியானவன் சாத்தன்தனைக் காக்க எனக் கூட்டுக. குற்றங்கள் பதினெட்டாவன: பசி, நீர்வேட்டல், பயம், வெகுளி, உவகை, வேண்டல், நினைப்பு, உறக்கம், நரை, நோய்வாய்ப்படுதல், மரணம், பிறப்பு, மதம், இன்பம், அதிசயம், வியர்த்தல், கேதம், கையறவு என்னும் யாக்கைக்குரிய பதினெட்டு வகையான குறைகள்.

'பதினெண் குற்றம் அரிந்தோய் நீ
பரம நான்மை அடைந்தோய் நீ' (மேருமந். 808)

'மருளி மருட்டும் மதன்கணையோடு மானமு மாயமுடன்
மருவிய குற்றமும் ஒருபதி னெட்டுடன் வானவர் தாம்மகிழ
உருள உருட்டுக அனந்தநல் வீரிய உருட்டுக சிறுதேரே.'
(ஆதிநாதர் பிள்ளைத் தமிழ், 98) (1)

2. சீருலவு கயிலாச வெள்ளிவெண் மலைமீது
தேவரார் செய்த சபையில்
திரிமேக லாபீட சிங்கா சனத்தின்மேற்
றிகழு மாயிரத் தெட்டிதழ்ப்
பேருலவு செந்தா மரைப்பொன் பொகுட்டின்மிசை
பெருகவீற் றிருந்து ஞானப்
பேரொளி விளங்குமா யிரத்தெட்டு வேதமுணர்
பெருமானை அஞ்ச லிப்பாம்—
காருலவு மேனிக் கனங்கொண் டலைச்செழுங்
கமல தளநய னுட்சண
கமலா சனத்திலுறை நால்வேத னைப்பெருகு
கதிகொண்ட புரவி யானைத்
தேருலவு தென்னடிசை நகர்மேவு செல்வனைத்
தேவதே வாதி பரனை
சேவலங் கொடிமேவு யோகசாத் தையன்மீது
செப்பி டுந்தமிழ் வளரவே.

வெள்ளி வெண்மலை - வெள்ளி மயமான வெண்ணிற மலை. இதனை, 'விசயார்த்தமலை' என்பர். தேவரார் செய்த சபை - சமவசரணம்.

திரிமேகலா பீடம் - பிரதம பீடம், துதிய பீடம், திருதிய பீடம் என மூவகைப் பீடங்கள். சிங்காசனம் - நான்கு திக்குகளிலும் நான்கு சிங்கம் சுமந்திருக்கும் இருக்கை. அருகதேவர் வீற்றிருக்கும் தாமரை மலர் ஆயிரத்தெட்டு இதழ்கள் கொண்டது. பொகுட்டு - கொட்டை; ஆயிரத்தெட்டுத் திருநாமமும் அருகதேவருக்கு உண்டு. அஞ்சலிப் பாம் - வணங்குவாம். கார் - கருமை. மேனி - உடம்பு. கொண்டல் - மேகம். கமலதளம் - தாமரைப் பூவின் இதழ். நயனுட்சணன் - கண்களையுடையவன். நால்வேதன் - நான்கு வேதமும் பயின்றவன். எனவே, இவனைப் 'பிரமயட்சன்' என்றும் உரைப்பர். கதி - வேகம். புரவி - குதிரை. தேவதேவாதிபரன் - தெய்வ கணங்களுக்குத் தலைவன். தமிழ் - தமிழ்ப் பாமாலை, நூல். (2)

3. பல்கிரண கதிர் சொரிய நின்றிலகு முடிசூடும்
பரதேசு வராதி ராசன்
பாதமலர் சூடுமுப் பத்திரா யிரமகுட
பார்த்திபரு மவர்கள் சேனை
வல்லவரு மடிபடிய ஆதிரா சனைக்கையில்
வாரிச் சுழற்றி யோசை
வலம்புரியை வாய்வைத்து விசயகோ டணைசெய்த
வாகு பெலியைப் பணிகுவாம்—
சொல்வண்மை சேரடிசை யூரதிபனைக் கூறு
துட்டநிக் கிரக வீரனை
சோதிபெரு மெய்ஞ்ஞானச் சுகிர்தனைக் கவிமாலை
சூடு மணிவரை மார்பனைச்
செல்வமிகு நவநிதிக் கிழவனைப் புலவனைச்
சென்டா யுதத்தி றைவனைத்
தேவர்குரு பரநாத யோகசாத் தையன்மகிமை
சிறந்தி னிதுவர்த் திக்கவே.

பரதேசுவராதிராசன் - பரதேசுவரச் சக்கரவர்த்தி. பார்த்திபர் - அரசர். அடிபடிய - கீழ்ப்படிய; பாதத்தில் விழுந்து வணங்க,

'சுதனூற் றுவரில் பரதேசன் சோர்வில் மகுடம் பெற்றனர்கள்
சூழ்முப் பத்தி ராயிரவர் சொரிந்து மலர்கள் கொடுபரவ.'

(ஆதிநாதர் பிள்ளைத் தமிழ், 42)

வலம்புரி - உயர்ந்த சங்கு. விசயகோடணை - வெற்றி முழக்கம். சொல் வண்மை - புகழப்படும் கொடை. துட்ட நிக்கிரக வீரன் - தீயோரைக் கொன்றழிக்கும் பெருவீரன். சுகிர்தன் - நற்செயலாளன். நவநிதிக் கிழவன் - ஒன்பதுவகைச் செல்வங்களுக்கும் உரிமையுடையவன்.

புலவன் - அறிஞன். செண்டாயுதன் - குதிரைச் சம்மட்டி கொண் டோன். வர்த்திக்க - பெருக. (3)

4. மாதுவளர் பொன்மேரு வரைமீதி லும்பர்சென்
மாபி டேகஞ் செய்திட
வானவர்க ளிந்திரன் கண்களா யிரங்காண
மலரடி பணிந்து போற்றும்
ஆதியங் கடவுளருள் மறைமொழி விரித்துரை செய்
யாதி கெவுதம மாமுனி
அட்டமா சாரணர்கள் நவகோடி முனிபதிக
ளம்பு யத்தாள் பணிகுவாம்—
நீதிநெறி யரசியல் நடத்துமம ரேந்திரனை
நிதிபெற்ற கருணை யானை
நிலையாத சென்மசா கரவாரி கரைகண்டு
நெடுங்கதிகள் நான்கை நீக்கி
சோதிபெறு கைவல மடந்தையைப் புணர்கவெனத்
துதிசெய் பரமா ஞானனை
துன்னலர்கள் பணியடிசை யோகமா சாத்தனெனுஞ்
சுராதி பதியினைக் காக்கவே.

மாது - அழகு. பொன்மேருமலை - பொன்நிறமாகக் காட்சி தரும் மகா மேருமலை. உம்பர் - தேவர். சென்மாபிடேகம் - அருகருக்கு நிகழும் இரண்டாம் கலியாணம்.

'வாமனன் சென்மாபி டேகத்தின் வானவர்கோன்
தாமறந்து செய்யுஞ் சதுர்முகத்தன்'

(அப்பாண்டைநாதர் உலா, 326)

ஆதியங்கடவுள் - பகவான் வர்த்தமான மகாவீரர். கெவுதம மாமுனி-பகவான் வர்த்தமான மகாவீரரின் முதல் கணநாதர். அட்டமா சாரணர்கள் - எட்டுப்பெருஞ் சாரணர்கள். முனிபதிகள்-முனிவர்க்குத் தலைவராயுள்ளோர். நவகோடி - ஒன்பது கோடி. அம்புயத்தாள் - திருவடித்தாமரை. அமரேந்திரன் - தேவர் தலைவன். சென்மசாகர வாரி - பிறவிப் பெருங்கடல். நான்கு கதிகள் - நான்கு வகையான பிறப்புகள் : தேவர், மக்கள், நரகர், விலங்கு என்னும் நால்வகைப் பிறப்பு. சோதி - ஒளி. கேவல மடந்தை - வாலறிவாகிய பெண், மோட்சமாகிய பெண். பரம்-மேன்மை. துன்னலர்கள்-பகைவர்கள். சுராதிபதி - தேவர்கள் தலைவன். (4)

5. அம்பொனிசை யும்பொகுட் டினிதுசூழ் செலவரும்
பகவி தட்பூ நெட்டித
முணிகொண்ட நறவெள்ள அம்போரு கத்தில்வள
ரகிலமேழ் புரக்கு மாதை
உம்பர்பணி வேதனுன் முகமருவு பாரதியை
ஓங்கார ரூப மாகி
உலகெலாம் நிறைகின்ற சாரதாம் பிகைவாணி
உபய பொற்றுள் பணிகுவாம்—
சம்புதிரு மறுமார்ப னருள்கின்ற புதல்வனை
சகல கலையுணர் வினுனைச்
சதுரயுக மேகண்ட தருமபுரி பாலனைச்
சங்கித சாயித் தியனை
செம்பொனெளிர் முகபடா மணியுமா யானைவரு
திலகவெண் கவிகை யானை
திருவடிசை நகர்யோக சாத்தையன் மீதுபகர்
செந்த மிட்டிற முயர்கவே.

அம்பொன் - அழகிய பொன். பொகுட்டு - தாமரைக்கொட்டை. அகவிதழ் - உள்ளிதழ். அணி - அழகு. நறவெள்ளம் - தேன் பெருக்கு. அம்போருகம் - தாமரை. வளர்தல் - இருத்தல். அகிலம்ஏழ் - ஏழு உலகங்கள்: நரகர், மத்திம உலகம், கல்பவாசி உலகம், நவக்கிரக பேகம், நவாங்கிசை, பாஞ்சராத்திரம், சோதிர் உலகம். புரக்கும் - காப்பாற்றும். மாது - பெண். உம்பர் - தேவர் வேதன் - பிரமன். பாரதி - சரசுவதி, கலைமகள். ரூபம் - வடிவம். ஓங்கார ரூபம் - ஓம் என்னும் திவ்ய தொனி வடிவம். உபயம் - இரண்டு. சாரதாம் பிகை - கலைமகள். நான்முகன் மருவு பாரதி - நான்கு முகங்களை யுடைய அருகனோடு ஒன்றியவள். சம்பு - சுகத்தைத் தருபவன். திருமறு மார்பன் - இலக்குமி வாசம் செய்யும் மார்புடையவன். திரு மறு - ஆயிரத்தெட்டு மறு. சகல கலை - எல்லாக் கலைகளும். சதுர யுகம் - நான்கு யுகம்: கிருத யுகம், திரேதா யுகம், துவாபர யுகம், கலி யுகம். சங்கித சாயித்தியன்-இசையும் இயலும் உடையவன். முகபடாம் யானையின் முகத்தில் இடும் அலங்காரத் துணி. திலதம் - சிறந்தது. கவிகை - குடை. பகர் - சொல். (5)

காப்பு முற்றும்.

## செங்கீரை

6\. மணிகொண்ட தெண்டிரைக் கங்கைப் பிரவாகநதி
வரைவிரி சிலைப்பு னலையே
வாரிப் பசும்பொற் குடத்திற் கொணர்ந்துநறை
வாசங் கமழ்ந்த வெந்நீர்
பணிகொண்ட மடிமிசையில் வைத்துநீ ராட்டியே
பைந்துகி லுநீர் துடைத்துப்
பார்பரவ வேநிலக் காப்பிஞற் பொட்டிட்டுப்
பஞ்சணையின் மீதில் வைத்து
கணிகொண்ட கும்பமுலை யன்னைபா லூட்டியிரு
கண்குளிர நோக்கி யன்பாய்க்
கடககடி சூத்ரமொடு மணிசெம்பொன் ஞுடைமுடி
கர்ண குண்டல மாலிகை
திணிகொண்ட சிங்காரத் திண்புய விலாசனே
செங்கீரை யாடி யருளே
திருவளரு மடிசைநகர் யோகசாத் தையநீ
செங்கீரை யாடி யருளே.

செங்கீரை என்பது குழந்தை முட்டிபோட்டுத் தவழும் பருவம் ஆகும். ஒரு காலை மடக்கி ஒரு காலை நீட்டி, இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலையை நிமிர்த்திக் குழந்தை முகம் அசைய ஆடும் பருவம் செங்கீரையாம்.

மணி - இரத்தினம். தெண்டிரை - தெளிந்த அலை. பிரவாகம் - பெருக்கு. சிலைப்புனல் - மலையிலிருந்து இறங்கி வரும் நீர், ஓசையை யுடைய நீர். வாரி - முகந்து. பணிகொண்ட மடிமிசை - மடித்த தொடையின்மேல். பார் பரவே - உலகோர் போற்ற. நிலக் காப்பு - தரையை நீருடன் இழைத்து பொட்டிடல். கணி - கண்ணி, மாலை. கும்பமுலை - கும்பம் போன்று தோற்றமளிக்கும் முலை. கடகம் - காப்பு. கடிசூத்ரம் - அரைஞாண். முடி - கிரீடம். கர்ணம் - காது. குண் டலம் - காதணி. மாலிகை - மாலை. திணிகொண்ட - திண்மையாக. புயவிலாசன் - புய அழகுபடைத்தவன். (1)

### வேறு

7\. ஆதி பரம்பர சோதி யெனுமற
வாழி பரந்தாமன்
அரியணை யானற பிண்டியி னிழ
லமர்ந்தரு ளும்வீரன்

காதி யெனும்வினை காலனு டன்பொரு
காமனை வென்ருேர்நீள்
காரகில் சேர்புகை மேவிய தோர்கயி
லாய முறைந்தாளுஞ்
சீதள சினபதி பாத சரோருக
சேவித மாவீரா
தேவர்க ளந்தணர் நீள்புவி ராசர்கள்
தேன்மலர் கொண்டே தான்
ஆதவ னர்ச்சனை புரியுரை நேயா
ஆடுக செங்கிரை
ஆதி புரத்துறை அரியர புத்திரன்
ஆடுக செங்கிரை.

பரம்பரம் - மேலானது. சோதி-ஒளி. அறவாழி - தருமசக்கரம். பரந்தாமன் - மேலான முத்தியுலகுக்குரியோன். அரியணை - சிங்காசனம். பிண்டி - அசோகு. நிழல் - நிழல்; வீரன் - வினை வென்றவன். காதிவினை - ஞானவரணீயம். தரிசனுவரணீயம், மோகனீயம், அந்தராயம் என்னும் நான்கு வினைகள். காலன் - ஆயுள்வினை. காமனை - இச்சையை. ஓர் - ஒப்பற்ற. கயிலாயம் - கயிலாய மலை. சீதள சினபதி-சீதளநாதர், பத்தாம் தீர்த்தங்கரர். பாதசரோருக சேவிதன் - திருவடித் தாமரையை வணங்குபவன். ஆதவன் - சூரியன். நேயா - அன்பனே, நேயன் என்பதன் விளி. ஆதிபுரம் - அடிமதிக்குடி. அரியர புத்திரன் - சாத்தையன். (2)

. ஏடலர் கற்பக மலரணை நீத்தா
ரிட்டம ருந்தேவ
ஏத மிகுத்தவர் வலிவை மிதித்தோ
யேழையர் பங்கா நீள்
தோடலர் பொற்புய வடிவு செழித்தோய்
சூர மிகுங்கோவே
சோதி மதிக்கலை வதன விசித்திர
சூல மிகுத்தோனே
கூடலர் மெய்ப்புகழ் தணையட ருக்கிர
கோப மிகுத்தோனே
கோதறு சொற்பெறு முதுதமிழ் பெற்ருய்
கோல மிகுஞ்சிலா

ஆடல் வயப்பரி மதகரி யுற்றோய்
ஆடுக செங்கீரை
ஆதி புரத்துறை அரிகர புத்திரன்
ஆடுக செங்கீரை.

ஏடு - இதழ். கற்பகம் - சீதள சினபதியின் இலச்சினை. ஏதம் - குற்றம். ஏழையர் பங்கன் - எளியவர் பக்கத்தே நின்று உதவுவோன்; ஏழையர்க்கு உறவானவன். தோடு - பூவிதழ். சூரம் - வலிமை. சூலம் - முத்தலையுடைய சூலாயுதம். கூடலர் - பகைவர். உக்கிரம் - கடுமை. கோதறு - குற்றமற்ற. முதுதமிழ் - தொன்மைத் தமிழ். கோலம் - அழகு. சீலம் - குணம், பண்பு. ஆடல் - வெற்றி. வயப் பரி - வலிமை வாய்ந்த குதிரை. மதகரி - மதம் பொருந்திய யானை. (3)

வேறு

9. கிரிரா சனைத்தழுவி மலைவள மெலாங்கொண்டு
கிரணமுத் தாடை பூண்டு
கெண்டை குதி கொண்ட விழி மருட்டிவிலை மாதெனக்
கெம்பிதம தாகி மீண்டே
பொருவாரு திக்கிறைவன் மார்பிலுயர் மாலையைப்
பூட்டிவசி கரிக்க வென்றே
புறப்பட்ட விரிசிலையி னீர்தேங்கி நிலையெனப்
புனல்பரந் தனசை நாட்டின்
மருமீறு தாமரைத் தடம்பல நிரம்பியே
வாழைபூஞ் சாலி மஞ்சள்
வளஞ்சிறந் தோங்குதிரு வடிசைநக ராதிபா
வானவர்கள் பரவு கோவே
திருஞான மிகுரூப வடிவுநிறை சுந்தரா
செங்கீரை யாடி யருளே
திருவளரு மடிசைநகர் யோகசாத் தையநீ
செங்கீரை யாடி யருளே.

கிரிராசன் - மலையரசன். கிரணம் - ஒளிக்கதிர். கெண்டை - கயல்மீன். விழி - கண். மருட்டி - மயங்கச் செய்து. விலை மாது - பொருட் பெண்டிராகிய பரத்தை. கெம்பிதம் - கெம்பீரம், ஆரவாரம். வாருதி - கடல். விரிசிலையினீர் - மலையிலிருந்து பரந்து பெருகி வரும் தண்ணீர். புனல் - நீர். மரு - மணம். தடம் - தடாகம், குளம். சாலி - நெல். கோ - தலைவன். ஞானமிகு ரூபன் - அறிவு வடிவினன். சுந்தரன் - அழகன். (4)

10. நறையிட்ட புயவீர விஞ்சைய ரியக்கராட்
சதர்கெருட காந்த ருவரும்
நடனமிடு பூதேந்திர வியந்தரா திபரதிப
னை வீரு தேந்திர னென்றிசை
நிறையிட்ட இந்திரனு மக்கினி யெமராசனு
நிருதி வருணன் வாயுவும்
நிதிநாத னிசானன் சேடன்மதி யிரவியும்
நெருங்கிநின் றிடைவி டாது
முறையிட்டு மவரவர்கள் குறைகுற்ற மோதியு
முழுமணிக் கடக மென்கை
முடிவைத்து மடிபரவி நின்றுபொன் மணிவச்சிர
முத்தார மாலை கவிகை
திறையிட்டு நின்றுநவ மணியிட்ட முன்றிலாய்
செங்கிரை யாடி யருளே
திருவளரு மடிசைநகர் யோகசாத் தையநீ
செங்கிரை யாடி யருளே.

நறை - நறுநாற்றம், மணமுள்ள மலர். விஞ்சையர் - வித்தியாதரர். இயக்கர் - பதினெண் கணத்துள் ஒரு கணத்தார். ராட்சதர் - அரக்கர் குலத்தார். கெருடர் - பதினெண் கணத்துள் ஒரு கணத்தார். காந்தருவர் - கந்தருவர், பாடுவோர். பூதேந்திரன் - பூதத்தலைவன். வியந்தராதிபர் - வியந்தரர் முதலிய எண்வகைத் தேவர்களின் தலைவன். இந்திரன், அக்கினி, எமராசன், நிருதி, வருணன், வாயு, நிதிநாதன், ஈசானன் வரையில் கூறப்பட்டார் எட்டுத் திக்குப் பாலகராவர்; இவர் முறையே கிழக்குத் திசையிலிருந்து வடகீழ்த்திசை வரை காக்கின்றவராவர். நிதிநாதன் - குபேரன். சேடன் - பவணன், நாகன். மதி - சந்திரன். இரவி - சூரியன். முறையிடுதல் - குறை சொல்லி வேண்டுகை. குறைகுற்றம் - தீங்கும் பிழையும். பரவி - வணங்கி. பொன்மணி வச்சிர முத்தார மாலை - மாலைவகை. கவிகை - குடை. திறையிடுதல் - காணிக்கை செலுத்துதல். நவமணி - ஒன்பதுவகை இரத்தினம்: கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து, புருடராகம், வைடூரியம், வைரம் ஆகிய ஒன்பதுவகை இரத்தினங்கள். (5)

செங்கீரை முற்றும்

## தால்

11. பொங்குதிருப் பாற்கட லலைபோற்
புடைநின் றிரட்டுஞ் சாமரையாய்
போற்று மடியார்க் கருள்புரியும்
பூவார் பதசெந் தாமரையாய்
கொங்கு திகழ்பத் மாசனத்தாய்
குலவு மணிச்சிங் காசனத்தாய்
கோடி மதிசூரிய நிறத்தாய்
கொடியார் கண்கா ணுநிறத்தாய்
திங்க ளொளிபோற் புனைகவியாய்த்
தெளிந்த சகல கலையுடையாய்ச்
செம்பொன் னுலகி லரம்பையர்கள்
சேரு மதிசேர் சுகத்தானே
சங்க நிதிசேர் திருவடிசைத்
தலைவா தாலோ தாலேலோ
தரும யோகசாத் தையநீ
தாலோ (தாலோ) தாலேலோ.

தால் என்பது தாலாட்டு பருவம்; குழந்தையைத் தொட்டிலில் இட்டு அக் குழந்தையின் சிறப்புகளை மொழிந்து, 'தாலோ தாலேலோ' எனத் தாலாட்டும் பருவம் ஆகும்.

புடை - பக்கம். இரட்டும் - மாறிமாறி வீசப்படும். சாமரை - வெண்சாமரை; கவரிமான், மயிரால் அமைந்த அரச சின்னம். போற்றும் - துதிக்கும். பூவார் - அழகு நிறைந்த. பதசெந்தாமரை - பாதமாகிய சிவந்த தாமரை மலர், திருவடித் தாமரை. கொங்கு - மணம். பத்மாசனம் - தாமரை மலர் இருக்கை; குலவு - பொருந்திய. மணி சிங்காசனம் - அழகிய மணிகள் பதித்த சிங்காசனம். நிறம் - திருமேனி; ஒளி, மார்பு; கொடியர் - கொடி போன்ற பெண்கள். திங்கள் - முழுமதி. கவியாய் - கவிகையை உடையாய். சகல கலை - எல்லா வகையான அறிவு நூல். பொன்னுலகு - தேவர் உலகு. அரம்பையர் - தேவருலக நடன மாதர். மதிசேர் சுகத்தான் - ஞானம் சேர்ந்த இன்பமுடையான். சங்கநிதி - குபேரனது நவநிதியுள் ஒன்று. (1)

12. ஓங்கு பெருங்கூர் மதியுடையாய்
ஒளிசேர் தரள மதிக்குடையாய்
உதிக்குங் கரட மதகரியாய்
உம்ப ருலகோர் தமக்கரியாய்

வீங்கும் களப வரைப்புயத்தாய்
விரைசேர் மலர்க்கண் ணம்புயத்தாய்
மின்னே பகுந்த சடைமுடியாய்
விளங்கும் பசும்பொன் மணிமுடியாய்
தேங்கொள் கமல மலர்த்தொடையாய்
திசையோர் பரவும் விருதுடையாய்
தேவா திபனே ஆதிபனே
செல்வா நிதமும் சிறந்தபுகழ்
தாங்கு மடிசைத் திருநகரா
தலைவா தாலோ தாலேலோ
தரும யோகசாத் தைய நீ
தாலோ (தாலோ) தாலேலோ.

கூர்மதி - நுட்ப அறிவு. தாளம் - வெண்மை. உதிக்கும்-வெளிப்படும். கரடமதகரி - கவுளிலிருந்து மதநீர் பாயும் யானை. உம்பர் உலகோர் - மேலுலகில் வாழ்பவர். வீங்குதல் - பருத்தல். களபம் - வாசனைச் சாந்து. வரைப்புயம் - மலைபோன்ற தோள். மின் - மின்னல். பகுந்த-விரிந்த, பிளவுபட்ட. மணிமுடி-கிரீடம். தேங்கொள்-தேம்கொள், தேனைக்கொண்ட. மலர்த்தொடை - மலர்மாலை. திசையோர் - எட்டுத் திசைகளில் உள்ளாரும். பரவு - துதிக்கும், போற்றும். விருது - சிறப்பு, வெற்றி. தேவாதிபன் - தேவர்களுக்குத் தலைவன். ஆதிபன் - ஆதிபத்தியம் செலுத்துபவன், நிதமும் - நித்தமும், நாள் தோறும். (2)

**வேறு**

13. உக்கிரம தாகிய நற்கன காளி
யுரம்பெறு மாகாளி
யுதிர மிடம்பெறு பூதன முடன்மது
உண்டிடு வேதாளம்
வக்கிர சிரானனமுற்ற பிசாசுகள்
வஞ்சனை யொருகோடி
மதர்வினை நோய்பல நீள்புவி மீதினில்
வரசெயம் வருவாரை
நிக்கிரக மேசெய்து மக்கினி வாயெழல்
நீறெழு தூளாக
நிதமிகு காரண முலகவர் காணவும்
நீதிசெய் தடல்மீறுஞ

சக்கிரத ராயுத முற்ற சடாதரா
தாலோ தாலேலோ
சதுமறை யபையா அரிகர குமரா
தாலோ தாலேலோ.

உக்கிரம் - கொடுமை, கோபம். உரம் - வலிமை. உதிரம் - இரத்தம். பூதனம் - பூதன், உயிர். மது - கள். வேதாளம் - பேய். வக்கிரம் - மாறுபாடு, வேறுபாடு. சிரானனம் - சிர ஆனனம். தலையும் முகமும். மதர்வினை - செருக்கிய செய்கை. புவி - பூமி, செயம் வருவார் - வெற்றிகொண்டு திரிவார். நிக்கிரகம் - அழிக்கை. நாசம் செய்கை. அக்கினி - நெருப்பு. தூள் - தூசி. நிதம் - நித்தம், அடல்மீறும்-வலிமை மிகும். சக்கிரதரன் - சக்கிராயுதத்தைக் கொண் டிருப்பவன். சடாதரன் - சடையைத் தரித்திருப்பவன். அபையன் - அபயன், அடைக்கலம் தந்து காப்பவன். (3)

14. மதுவொழு கியதா மரைமலர் முகனீள்
வரனே மின்போல
மதிதிகழ் சடையாய் மகுட கிரீடா
வானு டாள்கோவே
கதமிகு முருமோ டசனி கனைவாள்
கால்வேல் போராழி
கதிர்விடு முசலா யுதபர சுடனே
கால்வாய் நின்சூலம்
மதமிகு பரிவா ரணமுடை யவனே
வாழ்வீ ளகசூரா
வரிவிழி மடவா ருளமகிழ் வோனே
வாகா யோகேசா
சததள கமலா சனசதுர் முகனே
தாலோ தாலேலோ
சதுமறை யபையா அரிகர குமாரா
தாலோ தாலேலோ.

மது ஒழுகிய - தேன் சிந்திய. வரன் - மேலானவன், வரம் அருள் பவன். மின் - மின்னல். கிரீடம் - தலையணி. வானுடு - தேவர் உலகு. கோ - தலைவன், அரசன். கதம் - சினம். உரும் - அசனி, இடிவகை. போராழி போர்க்குப் பயன்படும் சக்கிராயுதம். கதிர்விடும் - ஒளி வீசும். முசலாயுதம் - உலக்கை. பரசு - மழுவாயுதம். பரி - செலவு. வாரணம் - யானை. வரிவிழி - செவ்வரி படர்ந்த கண். வாகா - தோள் வலியுடையோனே. யோகேசன் - யோக ஈசன், யோகம் பயிலும்

தலைவன். சததள கமலாசனம் - நூறு இதழ்களையுடைய தாமரை மலர் இருக்கை. (4)

வேறு

15. வண்டார் மலர்சேர் குழலரம்பை
மாதர் துதிக்கக் காந்தருவர்
வரம்பில் கிதத் தொனியிசைப்ப
மறையோர் சுருதி முறைகூற
விண்டா மலர்க் காவணஞ் சோலை
வெள்ளிகிரி விஞ்சையர் தேவர்
மேனாட் டமரர் புடைசூழ
வேந்தர் வேந்த ரடிபரவச்
செண்டா யுதத்தாய் நவமணிசேர்
சிங்கா சனத்தில் வீற்றிருந்தே
திருவாய் முறுவல் கொண்டமுகச்
செந்தா மரையா யன்பினுயர்
தண்டா மரையா ளிருந்தபுய சயிலா
தாலோ தாலேலோ
தரும யோகசாத் தையநீ
தாலோ (தாலோ) தாலேலோ.

குழல் - கூந்தல். அரம்பை மாதர் - தெய்வ மகளிர். காந்தருவர்- கந்தருவ லோகத்தார். வரம்பில் - அளவில்லாத. கீதத்தொனி - இசை ஒலி. சுருதி - வேதம். விண்டாமலர் - விரிந்த பூக்கள். காவணம்-பந்தல். விஞ்சையர் - வித்தியாதரர். மேனாடு - தேவருலகு. அடிபரவ - பாதத்தில் விழுந்து வணங்க. செண்டாயுதம் - குதிரைச் சம்மட்டி ஆயுதம். புய சயிலா - தோள்களாகிய மலையையுடையவனே. (5)

தால் முற்றும்

## சப்பாணி

16. அமரர்பதி யேறுவெள் ளயிராவ தத்தைநின்
றுக்கிரமித் தேமணிக் கையா
லடர்மருப் பைப்பறித் தேபிடித் தாடியதி
லட்டகெச மெட்டை வீசி
கமரிடக் கனகவரை காலினு லெற்றியே
கயிலைம லைதனை யசைத்துக்
கண்டுகை கூப்பியே நீள்கடல் (கையினுல்)
கலக்கிவீ ரிட்டு லாவி
திமிரமு மதவெள்ள மாருக வெங்கண்
சினந்துநண் ணுர்கள் செய்த
செயலதும் புவனத் திரிசெக மெனுமவைகளும்
செந்தூள் பரக்க வீசும்
சமரமுக ரணவிசய வெள்ளைவா ரணத்திறைவா
சப்பாணி கொட்டி யருளே
சத்துருசங் காரனெனு முக்கிரமா சாத்தையநீ
சப்பாணி கொட்டி யருளே.

சப்பாணி என்பது குழந்தை காலை மடித்து உட்கார்ந்து தம் கைகொட்டி விளையாடும் பருவம். சப்பாணியாவது இரு கைகளையும் சேர்த்துக் கொட்டுதல்.

அமரர்பதி - செளதர்மேந்திரன். அயிராவதம்-இந்திரனது யானை. ஆக்கிரமித்தல் - கைப்பற்றல். அட்ட கயம் - எட்டுத்திக்கு யானைகள். கமரிட - பிளக்க. கனகவரை - பொன்மயமான மேருமலை. கைகூப்புதல் - வணங்குதல். வீரிட்டு - திடீரெனப் பேரொலி எழுப்பி. கயிலைமலை - கயிலாய மலை, ஆதிபகவன் முத்தியடைந்த இடம். திமிரம் - இருள், கருமை. சினந்து - கோபித்து. நண்ணுர்கள் - பகைவர்கள். திரிசெகம் - மூன்று உலகம். செந்தூள் - செந்நிறப்பொடி. சமரமுகரணவிசயன்-போர்முனையில் கலந்து வெற்றிபெறுவோன். வெள்ளைவாரணம் - ஐராவதம். சத்துருசங்காரன் - பகைவர்களை வென்றழிப்பவன். (1)

17. நீண்டிட் டகன்றவெண் மலையில் பிறந்து (கடல்)
நீளரரு வரையி னூடே
நிலைகொண்ட கதிஐந்து மாருது நடைகொண்டு
நெடுமேக மதனி னூடே

யிண்டிப் படியதென யிருமருங் கணைதாக்கி
யெண்பத் திரண்டங்குலத்
தேருது குறையாது சுபலட்ச ணுங்கிதமு
மிலகுபொன் னவரத் தினமும்
பூண்டிட் டடங்காத மேவலர்கள் சாயவே
போந்திடம் வலமு லாவி
புனைகின்ற கிண்கிணிச் சிலம்புகல் கல்லெனவே
போரமரர் வேந்தர் கோட்டை
தாண்டிக் குதித்திடறு தவளமாம் பரியிறைவா
சப்பாணி கொட்டி யருளே
சத்துருசங் காரனெனு முக்கிரமா சாத்தையநீ
சப்பாணி கொட்டிய யருளே.

வெண்மலை - வெள்ளியம் பெருமலை. கடல் நீளருவரை - கடல் சூழ்ந்த நில எல்லை. கதி ஐந்து - குதிரையின் ஐவகை நடைப்போக்கு : மல்லகதி, மயூரகதி, வானரகதி, சசகதி, சரகதி. படியது என - படி என்று சொல்லும்படி. அணை-கலனை, குதிரைச் சேணம். அங்குலம்-விரலளவு. ஏருது குறையாது-மிகாதும் குறையாதும். சுபலட்சணுங் கிதம் - நல்ல இலக்கண அடையாளங்கள். அங்கிதம் - அடையாளம். இலகு பொன் - ஒளிவீசும் பொன். பொன்னவரத்தினம் - பொன் மணிகளினலான ஆபரணம். மேவலர்கள் - பகைவர்கள். இடம்வலம் உலாவுதல்-இடசாரி வலசாரியாகச் செல்லுகை. கிண்கிணி - காலணி, பாதசங்கை. அமரர் வேந்தர் - தேவர் தலைவர். இடறுதல் - எற்றுதல். தவளமாம் பரி - வெண்ணிறமான பெரிய குதிரை. (2)

18. போரிட்ட வயவீரர் வெங்களத் தூடு போய்ப்
பொன்செய் மணிவாள் கேடகம்
பொறுத்திட் டிலங்கவரு ருத்திராவ தாரனென
புரந்த ராதிகள் கூடியே
நேரிட்ட ரதகெசம் பரிவீரர் விஞ்சையர்
நெடும்போர் செலுத்து வாரின்
நிலையாத குதிவெள்ளஞ் சுழித்தோடிப் பாயவதில்
நிமிர்பிணக் குவைகள் சூழப்
பாரிட்ட பேயலகை பூதங் களித்தாடும்
பாரெ லாஞ்செஞ் சேறெழப்
பயிரவி ரத்தவெறி தாக்கிநின் ருடவது
பார்த்தினி துபுன் முரலாய்

தாரிட்ட புயவரை குலுங்கச் சிறந்துனது
சப்பாணி கொட்டி யருளே
சத்துருசங் காரனெனு முக்கிரமா சாத்தையநீ
சப்பாணி கொட்டி யருளே.

வயவீரர் - வலிமைபெற்ற வீரர். வெங்களம் - கொடிய போர்க் களம். மணி - அழகு. கேடகம் - பரிசை. ருத்திராவதாரன் - உருத் திரனுடைய மறுபிறப்பு. புரந்தராதிகள்-இந்திரன் முதலிய தேவர்கள். நேரிட்ட - எதிரிட்ட. ரத கெசம் பரி வீரர் - தேர் யானை குதிரை காலாள் என்னும் நால்வகைப் படையினர். விஞ்சையர் - வித்தியாதரர். குவை - குவியல், கூட்டம், பாரிட்ட - பாறிய, குறுகிய. பேய் அலகை பூதம் - பேயின் இனங்கள். செஞ்சேறு - குருதிக்கலப்பால் சிவந்த குழம்பு. பயிரவி - பைரவி, துர்க்கை. புன்மூரல் - புன்சிரிப்பு, குறுஞ் சிரிப்பு தார் - மாலை. புயவரை - தோளாகிய மலை. (3)

வேறு

19. கலைநில ரதமை திலதமு மிருகுழை
கற்பைமுத் தாரம்
கதிர்விடு புயவரை தமனிய மணியுமிழ்
கைக்கடகப் பூணும்
விலையிட வரிதரை வடமணி ஒளிர்விடு
மிக்குயர் பட்டாடை
விரைகம ழிருபத பரிபுர மொலியெழ
மிக்கழகுற் ருேனே
மலையென வளர்முலை வரையர மகளிர்கண்
மைக்குழல் பொற்ருேடும்
வனமயி லெனவுன தழகினி லவர்மயல்
வைத்து விருப்பானர்
கொலைதவிர் மறமொழி யுறுதிகொ ளிருதய
கொட்டுக சப்பாணி
கொலைதவி ரடிசையி லரிகர குமரா
கொட்டுக சப்பாணி.

கலை - ஒளி, அழகு. அரத மை - சிவந்த மை. குழை - குண்டலம். திலதம் - திலகம், நெற்றிப் பொட்டு. கற்பை முத்தாரம் - கல் ஒளி வீசும் முத்துமாலை. கடகப்பூண் - காப்பு. அரைவடம் - அரைஞாண். பரியகம் - சிலம்பு, காலணி. கதிர் ஒளி. தமனியம் - பொன்.

கொலைதவிரடிசை - கொலைச் செயல் புரியா மக்கள் வாழும் அடிசையூர். (4)

20. விரைசெறி மலர்பொலி யிரசத கிரியாய்
வெற்றி மிகுத்தோனே
விரிசிலை நதியா யணைசெயில் வளமுயர்
மிக்கடி சைக்கோவே
வரையள றிடபாய் பரியுடை யவனே
மத்த கெசத்தோனே
வரிவிழி மடவா ருளமகிழ் வோனே
மற்புய விற்காமா
நிரைமணி யரையிடை யசைவுற வொலியெழ
நித்தன பொற்பாதா
நிதமிகு ரணமுர சொடுவிசை யமுமதிர்
நித்திய மணக்கோலம்
குரைகட லெனவதிர் மழைமுர சுடையாய்
கொட்டுக சப்பாணி
கொலைதவி ரடிசையி லரிகர குமரா
கொட்டுக சப்பாணி.

விரை - மணம். இரசதகிரி - வெள்ளிமலை. அணைசெய் - சார்ந்த வயல். அளறிட - சேருகும்படி. மத்தகெசம் - மத்தகத்தோடுகூடிய யானை. வரிவிழிமடவார் - செவ்வரி படர்ந்த கண்களையுடைய மகளிர். காமா - மன்மதனே. நித்தன - நடனமாடுகிற. நிரைமணி - மேகலாபரணம். ரணமுரசு - போர் முரசு. விசயம் - விசயகோடணை, வெற்றி முழக்கம். குரை கடல் - ஒலிக்கும் கடல். மழை முரசு - கரிய முரசு, மேகம்போல் இடிக்கும் குரலுடைய முரசு. (5)

சப்பாணி முற்றும்

## முத்தம்

21. ஓசைக் கடலில் திரையெறிய
ஒதுங்கிக் கரையில் வலம்புரிசூ
லுளைந்தே யுகுத்த வெண்டரள
முவப்ப மதிக்க விலையிடலாம்
கோசக் கரடம் பொழி மதமாக்
கூன்வெண் பிறைக்கோட் டிடைப்பிறந்த
குளிர்வெண் மதியை விலையிடலாம்
கொங்கார் சோலை வயல்சிறந்த
ஆசைப் பயிர்க்காய்க் குலைச்சாலி
அதில்சேர் தரளம் விலையிடலாம்
ஐயா உனது திருவாய்முத்
தார்க்கு மதிக்க விலையில்லை
தேசுற் றினிய மழலைமொழித்
திருவாய் முத்த மருள்வாயே
சிறக்கும் யோகசாத் தையநின்
திருவாய் முத்த மருள்வாயே.

முத்தம்: குழந்தையை மடியில் வைத்துக் கொஞ்சிக் குலவி முத்தம் தருக என வேண்டும் பருவம்.

வலம்புரி - வலம்புரிச் சங்கு. உளைந்து - வருந்தி. உகுத்த-இட்ட, ஈன்ற. விலையிடலாம் - விலைத்திட்டம் செய்யலாம். கோசம் - யானை யின் ஆண்குறி. கரடம் - கவுள், கன்னம். மதமா - யானை. கூன் - வளைவு. குளிர் வெண்மதி என்றது யானையின் கொம்பிலிருந்து தோன்றிய முத்துகளை. கொங்கு - மணம், தேன், மகரந்தம். ஆசைப் பயிர் - விரும்பிச் செய்த நெற்பயிர். சாலி - நெல். தரளம் - முத்து; திருவாய் முத்து - வாயால் தரும் முத்தம். தேசு - விளக்கம். மழலை மொழி - குதலைச் சொல். (1)

22. வர்த்தித் திருக்கும் பெருங்கடலில்
மணிமுத் தலைபட் டுழன்ற முத்தம்
வானிற் பிறந்த முத்தமடர்
மாசிற் பிறந்த முத்தமது
குத்தித் திருக்கும் மதயானைக்
கோட்டில் மணிமுத் தமர்க்களத்தில்
குருதி தோய்ந்த மணிமுத்தம்
கோகன கத்தி லுறைமுத்தம்

சுத்தித் திருக்கும் வண்டுநறை
சுவைத்த பருமுத் தடர்மூங்கிற்
றுளையில் மணிமுத் தனல்கொள் முத்தம்
துதியோ ருனது மதிமுகவாய்த்
தித்தித் திருக்குங் கனியதரத்
திருவாய் முத்த மருள்வாயே
சிறக்கும் யோகசாத் தையநின்
திருவாய் முத்த மருள்வாயே.

வர்த்தித்திருக்கும் - தழைத்திருக்கும், பெருகியிருக்கும். வான் - ஆகாயம். மாசு - மேகம். குத்தித்திருக்கும்-குத்திக்குடையும். அமர்க் களம் - போர்க்களம். குருதி - இரத்தம். கோகனகம் - தாமரை. சுத்தித்திருக்கும் - சூழ்ந்திருக்கும். நறை - தேன். அனல் - தீ. கனி யதரம் - கொவ்வைக் கனிபோன்ற உதடு.

கடல் முதலிய இடங்களில் பிறக்கும் முத்துகளுக்குக் குறை கற் பித்து, சாத்தையனின் திருவாய் முத்தத்தைக் கவிஞர் புகழ்கிறர்.

முத்துப் பிறக்கும் இடங்களாவன : மதி, மேகம், சங்கு, சிப்பி, மீன், முதலை, உடும்பு, தாமரை, வாழை, கமுகு, கரும்பு, செந்நெல், மூங்கில், யானைக் கொம்பு, பன்றிக் கொம்பு, பசுவின் பல், நாகம், கொக்கு, நங்கையர் கழுத்து. (திருவிளை. மாணிக்க, 53-56. அபிதான சிந்தாமணி) (2)

23. காதூர் கயற்கண் விலைமடவார்
காலிற் சிலம்பார்ப் பொலிபோலுங்
கமலத் தடத்தி லனஞ்சிலம்பக்
கனற்சா றடுவெம் புகையினமா
மூதூர் குயில்கள் காரெனவே
விள்ளா தொடுங்க மயில்கள்சிறை
விரித்துக் கூவி விளையாட
வேரித் தாழை மலர்க்கனகத்
தாதூர் மலர்ச்சண் பகந்தேமாந்
தருப்பைம் பூகங் கனியரம்பை
தண்தே னெழுகுஞ் சுளைவருக்கை
தனியே கவிதா வித்திரிய
மூதூ ரடிசை யுயர்மொய்ம்பார்
முதல்வா முத்த மருள்வாயே
முனைவற் குகந்தசாத் தையநின்
முதல்வாய் முத்த மருள்வாயே.

காதூர் கயற்கண் - காதின் அசைவு சென்று நீண்ட கயல்மீன் போன்ற கண். விலைமடவார் - பொதுமகளிர், பரத்தையர். ஆர்ப்பொலி - ஆரவார ஒலி. கமலத்தடம் - தாமரைக் குளம். அனம் - அன்னம். சிலம்ப - ஒலிக்க. கனல் - நெருப்பு. சாறு - கருப்பஞ்சாறு. இனமா - கூட்டமாக. மூதூர் - பழைமையான ஊர். கார் - மேகம். விள்ளாது - வாய் திறவாது, ஒலி செய்யாது. ஒடுங்க - அடங்க. சிறை - சிறகு. வேரி - தேன். கனகத்தாது - பொன்நிறமான மகரந்தம். தரு - மரம். பைம்பூகம் - பசுமையான கமுகு. அரம்பை - வாழை. வருக்கை-வருக்கைப் பலாக்கனி. கவி - குரங்கு. மொய்ம்பு - வலிமை. முனிவன் - அருகதேவன். உகந்த - விருப்பமான. (3)

*24.* பாடஞ் சிறந்த வெண்மேனிப்
பசும்பொன் னூடே மணிதுலங்கும்
பவளக் கொடியி லரசதப்பூண்
பணியா விலங்கும் மணிமேடை
சூடுஞ் சிகர முடிமீது
தோகை நடிக்கு மகில்வாசத்
தூமங் கமழும் வண்டு நறை
சுவைத்தே வெறியாற் சுழன்றுடும்
வேடஞ் சிறந்த கயல் மத(ர்க்கண்)
வியஞ்சேர் களப முலைமடவார்
வீணை பயிற்று மிசையொலியால்
விளங்கு நெடுந்தோ ரணவீதி
மாடஞ் சிறந்த திருவடிசை
வளக்கோ முத்த மருள்வாயே
வளரும் யோகசாத் தையநின்
மணிவாய் முத்த மருள்வாயே.

பாடஞ் சிறந்த - வேலைப்பாடு அமைந்த. இரசதம் - வெள்ளி. மணிமேடை - அழகிய மாளிகையின் மேல்தளம். சிகரம் - உச்சி. அகில் - அகில் மரம். வெறி - மயக்கம். வேடம் - புறக்கோலம், புற அழகு. வியஞ்சேர் களபம் - வேறுபட்ட நறுமணப் பொருள்கள் சேர்ந்த களபச் சாந்து. வீணை - நரம்புக் கருவிகளுள் ஒன்று. தோரண வீதி - தோரணங்களால் அலங்கரிக்கப்பட்ட தெரு. (4)

*25.* கத்துந் தரங்க விரிசிலை நீள்
கரையிற் கால விருமருங்கிற்
கமழ்பூம் பாளைக் கமுகடியிற்
கன்னல் வனத்திற் கழைச்சாற்றில்

மற்ற மரத்த தறியிடையில்
வளருஞ் சாலி வயற் பரப்பில்
மருவார் வனசப் பூம்பொகுட்டில்
வளஞ்சேர் குவளை மடுவதனில்
வைத்த அணைக்கு ளூற்றோடி
வரம்பில் மடையில் மறுகாலில்
வானிற் சிறந்த மழைத்துளியில்
மதித்தா ரகைபோற் குளிர்ந்த நிலா
முற்றந் திகழுந் திருவடிசை
முதல்வா முத்த மருள்வாயே
முனைவர்க் குகந்தசாத் தையநின்
முதல்வாய் முத்த மருள்வாயே.

கத்தும் தரங்கம் - ஒலிக்கும் அலை. கால - கக்க, எரிய. கன்னல் - கரும்பு. கழைச்சாறு - கருப்பஞ்சாறு. தறி - கட்டுத்தறி. சாலி வயல் - நெல்வயல். மருவார் - மணம் நிறைந்த. வனசம் - தாமரை. பூம் பொகுட்டு - அழகிய நடுக்கொட்டை. மடு - பள்ளம், சிறு நீர்நிலை. ஊற்று - நீரூற்று. மறுகால் - நீர் வெளியில் வடிந்து செல்வதற்கான மதகு, கால்வாய். தாரகை - நட்சத்திரம். முனைவர் - அருகதேவர். (5)

முத்தம் முற்றும்

## வாரானை

26. பொற்பாம் பசும்பொன் மணியரைஞாண்
பூட்ட வருக விரலாழி
புனைய வருக உடம்பினில்தூள்
போக்க வருக தளர்ந்தநடை
சொற்பார் துதித்த முலைக்குளமு
தூட்ட வருக வொருவசனம்
சொல்ல வருக பூப்பனிநீர்
சொரிய வருக யிணைக்கனக
வெற்பார் புயங்க ளசையமடி
மிசையி லிருக்க வருகவஞ்சர்
மீறு தொழிகவரு கனல்மீது
மீது வருக வரு குயில்நேர்

கற்பார் மடவா ரிசையடிசைக்
கதிபா வருக வருகவே
கடவுள் யோகசாத் தைய நீ
கனிவாய் வருக வருகவே.

பொற்பு - அழகு. பசும்பொன் - மாற்றுயர்ந்த பொன். விரலாழி - மோதிரம். தூள் - துகள், தூசி. போக்க - நீக்க, அகற்ற. சொற்பார் - புகழ் பூத்த உலகம். முலேக்குளமுது - முலேப்பால். வசனம் - வார்த்தை, பேச்சு. பூப்பனி நீர் - பொலிவு பெற்ற குளிர்ந்த நீர், பன்னீர். வெற்பார் புயங்கள் - மலேபோன்ற தோள்கள். மடி - மடித்த தொடையின் மேற்பாகம். (1

27. எண்டலங் தன்னிலே வெகுகாரணப் பிரபல
எந்தை நீமிக வருகவே
ஏழையர் தங்கள்பங் கிருந்தவர்க் கிடர்தீர
இருநிதி மிக வருகவே
விண்டலங் தனிலமரர் துதியோது புயல்வருக
வேத நாயகன் வருகவே
மேலான நன்மதுர வாக்கறிங் துயர்வரிசை
மிகவருள் செய்தவன் வருகவே
குண்டலங் திகழ்சந்திர விப்பவங் தனர்க்கருள்
கூரவே மிக வருகவே
குஞ்சரங் தனிலேறி யஞ்சாதி ரென்றுறுதி
கூறி னேன்மிக வருகவே
மண்டலங் தனிலுள்ள சகலசென ரட்சகன்
வாசி யான்மிக வருகவே
மஞ்சுதிகழ் கோபுரஞ் சூழுஞ்சி னேந்திரபுரி
மாசாத் தையன் வருகவே.

எண்டலம் - எட்டுத் திக்குகளுடன் கூடிய நிலம். பிரபலன் - புகழுடையோன், முதன்மையானவன். எந்தை - எம் தந்தை. புயல் - மேகம், புயல்போன்ற நிறமுடைய சாத்தன். வேதநாயகன்-வேதங்களே மொழிந்த தலேவன். மதுரவாக்கு - இன்சொல். செய்தவன் - செய்கின்ற தவத்தையுடையவன். குஞ்சரம் - யானே. உறுதி கூறினேன் - உறுதிமொழிந்தவன். மண்டலம் - உலகம். சகல சென ரட்சகன் - எல்லோருக்கும் காப்பு அளிப்போன். மஞ்சு - மேகம். (2)

28. அண்டமா மதிக்கிறையீர் புறத்தினு மணியாகத்
தரித்து வடவெற் பதிரவே
நடைகொண்டு கதிஐந்து மீரிரு மருப்பினு
லட்டங்க கிரியை மோதி

எண்டிசையில் வேழங்கள் பின்காட்டி யோடவே
எழில்வால் பிடித்து வீசி
யிகலசுரர் தளமுறிய முசலா யுதத்தினல்
இடித்தோட வேவிரட்டி
வண்டுவா ருதிதனைத் திரள்பனைக் கையினல்
வாய்மடுத் துண்டு சேடன்
மணிமவுலி யுதிரவே கிண்டெட்டி வீசியெதிர்
மழையெனப் பிளிறி யுரறுஞ்
சண்டமா ருதவேக மும்மதவெள் ளானையாய்த்
தாமரைக் கையில் வருகவே
தருமபுரி காவலா யோகசாத் தையநீ
தயவு டன்மிக வருகவே.

அட்டங்கிரி - எட்டுக்குல மலைகள். வடவெற்பு - வடதிசையில் உள்ள மேருமலை. எண்டிசை - எட்டுத்திசை. வேழங்கள் - யானைகள். இகலசுரர் - மாறுபட்ட அரக்கர்கள். தளம் - படைத்தளம். முசலா யுதம் - உலக்கையாயுதம். வாருதி - கடல். சேடன் - ஆதிசேடன், பூமியைத் தாங்குபவன். பனைக்கை - பனைபோன்று நீண்ட கை. மணி மவுலி - இரத்தினம் பதித்த கிரீடம். கிண்டு - தோண்டி. மழையெனப் பிளிறி-மேக முழக்கம்போல ஒலியிட்டு. சண்டமாருதம் - புயல் காற்று. வெள்ளானை - சாத்தையனின் ஊர்தி. தருமபுரி - அடிமதிக்குடிக்கு ஒரு பெயர். (3)

வேறு

29. இன்பக்கதித் தேவே வருக
இடர்தீர்த் தெமையாள் பவன்வருக
இருள்நீக் கியபாற் கரன்வருக
இமையோர் குலத்துக் கிறைவருக
துன்பக் கொலைநீத் தவன்வருக
சோதி யருள்நிச் சயப்பொருளில்
துணிவோன் வருக மறையுணருந்
தூயோன் வருக வருகவே
வன்பற் கிரங்கா தவன்வருக
மாலில் லாத மணிவருக
வறுமை நீக்கித்தவன் வருக
வாமன் நெறிகாப் பவன்வருக

அன்பர்க் கரிய புயல்வருக
அறிவிற் பெரிய முதல்வருக
ஆதி புரத்தில் வளர்மாசாத்
தையன் வருக வருகவே.

இன்பக்கதி - நற்பேறு. தேவு - தெய்வம். இடர் - துன்பம். பாற்கரன் - சூரியன். இமையோர் - தேவர். வன்பன் - கொடியன். வாமன் நெறி – அருகதேவன் அருளிய நல்லற நெறி. முதல் - முதன்மை யானவன், தலைவன். ஆதிபுரம் - இதுவும் அடிமதிக்குடிக்குரிய ஒரு பெயர். வளர்தல் - தங்குதல், விளங்குதல். (4)

வேறு

30. விண்ணி லமரர் துதிபகரும்
வீரன் வருக வருகவே
விளங்கும் சகல கலைஞான
வேதன் வருக வருகவே
வண்ண மலர்கள் புனையுமுயர்
வடிவோன் வருக வருகவே
மாங்காய் வாகை தனிற்காய்க்க
வைத்தோன் வருக வருகவே
எண்ணு மடியார் வினையகற்றும்
இறைவன் வருக வருகவே
இமையோர் துதிக்க வீற்றிருக்கும்
ஏகன் வருக வருகவே
அண்ணல் வருக தென்னடிசை
அய்யன் வருக வருகவே
அழகு வளரும் யோகசாத்
தையன் வருக வருகவே.

வீரன் - வீரம் பொருந்திய சாத்தையன். சகலம் - எல்லாம். வண்ணம் - அழகு, நிறம். வேதன் - வேதம் அருளியவன். வடிவோன் - அழகன். மாங்காய் வாகைதனிற் காய்க்க வைத்தோன் - இங்குக் குறிக்கப்படும் வரலாறு எதுவென விளங்கவில்லை. ஒருகால் இயற்கை கடந்த அற்புதங்களை ஆற்ற வல்லவன் என்பதனைக் குறிக்கும்போலும். வினையகற்றும் - வினைகளைப் போக்கும். ஏகன் - ஒப்பற்றவன், தனித்திருப்போன். அண்ணல் - பெரியோன், ஐயன் - தலைவன். (5)

வாரானை முற்றும்

## அம்புலி

31. முண்டகாசன மூர்த்தி யெண்குணத் தலைமையான்
முத்தியிற் செல்வ னறிவன்
மூவா முதல்வனுயர் தாவாத நெறியுதவு
முச்ச கச்சிரோ ரத்தினனீள்
பிண்டி வாமனினிய தொண்டர் நாயகனெனப்
பீடுய ருமாதி பகவன்
பெம்மான் திகம்பரன் முனிவரன் கயிலையான்
பிஞ்சு மதிபுனை வேணியன்
பண்டமரர் நெறிபட நுதல்விழி விழித்தவன்
பகர்மா திமூரு பங்கினன்
பைங்கண்விடை யேறிவரு திங்கள்முக்
பண்ணவ னாதி சுவரன் [குடையுளோன்
அண்டர் நாயகனை நித மர்ச்சனைசெய் மெய்யனுடன்
அம்புலீ யாட வாவே
அடிசையம் பதியில்வளர் யோகசாத்
தையனுடன் அம்புலீ யாடவாவே.

அம்புலி: வானத்து விளங்கும் சந்திரனைக் குழந்தையுடன் விளையாட வருக என அழைக்கும் பருவம். கவிஞர் சந்திரனைச் சாம பேத தான தண்டம் என்னும் நால்வகை உபாயத்தாலும் அழைக்கும் முறையை இப் பருவத்தில் காணலாம்.

முண்டகாசனம் - தாமரை மலரிருக்கை. எண்குணம் - கடையிலா அறிவு, கடையிலாக் காட்சி, கடையிலா வீரியம், கடையிலா இன்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியா வியல்பு. அறிவன் - ஞானி. மூவா முதல்வன் - கடவுள். தாவாத நெறி - கேடிலா வழி. முச்சகம் - மூவுலகம். சிரோரத்தினன் - தலையிடத்துள்ளவன். பிண்டி-அசோகு. வாமன்-அருகன். தொண்டர் - அடியவர். நாயகன்-தலைவன். பீடு - பெருமை. ஆதிபகவன் - கடவுள். பெம்மான் - பெருமான். திகம்பரன் திக்குகளை ஆடையாயுடையவன். கயிலையான் - கயிலைமலையிடத்து இருப்பவன். பிஞ்சுமதி - பிறைச்சந்திரன். வேணியன் - சடைமுடியுடையவன், பண்டு - முன். நெறிபட - தகாத வழியை அழிக்க. நுதல் விழி - நெற்றிக்கண்; ஓதியறிவாகிய மூன்றும் அறிவு. மாது - கேவல ஞானம். விடை - எருது. பண்ணவன் - தேவன், அருகன். ஆதிசுவரன்-ஆதிபகவான். அண்டர் நாயகன் - தேவர் தலைவன். அம்புலி - சந்திரன்.

'அருவினையை அழித்தானை பிறவி ஒழித்தானை
அன்பர்க் கெளியானை ஆகமங்கள் உரைத்தானை
அழகுற நின்றானை பாவ உரியானை
கூற்றை உதைத்தானைத் திருநெறி தந்தானை
தேவர்க் கரியானை திருவுல களந்தானை
காட்சி கொடுத்தானைக் கருணை புரிந்தானை'

(ஆதிநாதர் பிள்ளைத்தமிழ், 6)

எனவும்,

'குனிசிலை யைங்கணை மதனை நீறாய் வேறாக
கொடிய வினைப்பகைவர் கூறாய் நீராடும்
தனிஞானச் சுடரொளியே'

(ஆதிநாதர் பிள்ளைத்தமிழ், 21)

எனவும் வரும் ஆதிநாதர் பிள்ளைத்தமிழ்ப் பாடல்களுடன் ஒப்பிடுக. (1)

32. மறைவலவ நீயுமோ மறைவலவ னல்லாது
வயங்கெழு விமான முடையோன்
வானிலே நீயும் விமானமுடை யாயின்று
வாரியில் முளைத்த சோதி
எறிதிரையி லேமுளைத் தெழுசோதி வடிவு நீ
இகல்மஞ்சு திகழ்மே னியான்
என்னளு மஞ்சுபல மூசவக் கிராயுதன்
இருவர்க்கு மொன்று தலால்
பொறிவழி யிறுக்கியுயர் முனிவர்சுரர் துதியோது
புங்கவன் பிண்டி வாமன்
புகலரிய மூவுலகில் நால்வகைத் தேவரும்
போற்றுமிரு சரண நெடுமால்
அறிவனெறி களைகவரு தேவகுரு நாதனுடன்
அம்புலீ யாட வாவே
அடிசையம் பதியில்வளர் யோகசாத் தையனுடன்
அம்புலீ யாட வாவே.

வயம் கெழு - வலிமை வாய்ந்த. வாரி - நீர்நிலை. எறிதிரை - கடல். இகல் - மாறுபாடு. மஞ்சு - மேகம். பொறிவழி - ஐம்பொறிகளின் வாயில்களான புலன்கள். சுரர் - தேவர். புங்கவன் - சிறந்தோன். நால்வகைத் தேவர் - பவணர், வியந்தவர், ஜோதிஷ்கர், கல்பாவாசிரியர் என்ற நால்வகைத் தேவர்கள். அறிவனெறி - அருகதேவனின் திருவறநெறி. (2)

33. தயவுயர்செய் மெய்யற மெல்னெத் தோன்றலால்
தயவி லார்தமை யறிந்தே
சந்ததந் தோற்ரு திருந்துவளர் தன்மையால்
தண்மதி குளிர்ந்த நிலவால்
உயர்கினுந் திருமேனி யொயிலாக ஒருகாகி
யூகினில் விளங்கு மொழியா
லுல்லாச சம்பிரம மிகுந்ததிரு வழகினு
லொக்கு மிருவோர்க்கு மதனல்
வியன்மொழி பகர்ந்தமுத லெண்குணத் திறைவாரி
வேக சிர்பரஞ் சோதிநீ
மிக்கஅற வாழியான் குளிர்தளிர்ப் பிண்டியான்
விரிமலர்த் தாள்ப ரவியே
அயமேறி வருவென்றி வீரகெம் பீரனுடன்
அம்புலீ யாட வாவே
அடிசையம் பதியில்வளர் யோகசாத் தையனுடன்
அம்புலீ யாட வாவே.

தயவு - கருணை, இரக்கம். சந்ததம் - எப்பொழுதும். ஒருகாகி - ஒருமைப்பட்டு. யூகினில் - ஊகத்தில். சம்பிரமம் - ஒளி. வியன் - மேன்மை. எண்குணத்திறை - அருகன். அறவாழியான் - தரும சக்கர முடையவன். அயம் - ஆடு. (3)

34. துதிசெய்யு முனதுவெண் முகதெரிச னத்தினுற்
சொரிமதுக் குவளை யலரும்
சோதிதரு மிவனழகு முகதெரிச னத்தினுற்
தொண்டர் பூவிழி யலர்வுறும்
புதியவெண் ணிலவுகதி ரொளிப்ரபையி னுலுனைப்
பூதல மெல்லாம் போற்றிடும்
புகலரிய கிர்த்திவெண் கதிரின லிவனையே
புவியே கம்மும் போற்றிடும்
யெதிர்வார்க ளிரவலர்க் கிருநிதியு முதவுவா
னிரவல ரிடத்தில் நியும்
இலங்கவே முன்வந்து தோற்றுவாய் வளர்தன்மை
இருவர்க் குமொன் ருதலால்
அதிசய மிகுந்ததரு மாபுரிக் கதிபனுடன்
அம்புலீ யாட வாவே
அடிசையம் பதியில்வளர் யோகசாத் தையனுடன்
அம்புலீ யாட வாவே.

தரிசனம் - பார்வை. மது - தேன். தொண்டர் - அடியார். பூவிழி - மலர் போன்ற கண். ஒளிப்ரபை - ஒளி வட்டம். கீர்த்தி - புகழ். புகழின் நிறம் வெண்மை என்பர். புவியேகமும் - பூமி அடங்கலும். போற்றிடும் - வணங்கிப் பாராட்டும். இரவலர் - இரவு மலரும் பூ. இலங்க - விளங்க. தருமாபுரி - அடிமதிக்குடி. அதிபன்-தலைவன். (4)

35. சோதிதரு நீள்கலையி னுல்மாதர் மனத்தினைத்
துயர்செய் குவாய்நீ யிவன்
சொற்பெருகு வளர்கலையி னுலுலகில் முன்னமொரு
தோகையைத் துயர்செய் தனன்
நீதிதரு மாசுண மறைக்குமுனே முன்னமவன்
நீதி பாம்பால் மறைத்தான்
நெடுமேரு வலமாக வருகுவாய் நீயிவன்
நிறைகொள் புவிமூன்று முறைவான்
பாதிமதி யாவதுந் தேய்வதும் வளர்வதும்
பாரில் நீயிவ னன்பரைப்
பட்சமுடன் வளரவும் அஞ்சாது தேயவும்
பண்ணு வானுகை யாலே
ஆதிதரு மாபுரியில் லகளங்க ரூபனுடன்
அம்புலீ யாட வாவே
அடிசையம் பதியில்வளர் யோகசாத் தையனுடன்
அம்புலீ யாட வாவே.

கலை - கிரணம். மாசுணம் - பெரும் பாம்பு, இராகு கேது. நீதி பாம்பு - அறநெறியாகிய பாம்பு. புவி - உலகம். பட்சம் - அன்பு, பிரியம். அகளங்க ரூபன் - களங்கமில்லாத தூய வடியுடையவன். (5)

அம்புலி முற்றும்

## சிற்றில்

36. காமே வுயர்செண் பகஞ்சூதங்
கைதைப் பாரி சாதகநற்
கமுகு சேர்வ லம்புரிநீள்
கனிமா தளகற் பகவல்லி
பூமே லரிய யிருவாட்சி
புதைபூங் குரவம் புன்னகம்
பொற்பார் நறைமல் லிகைமுல்லைப்
பொன்னூர் கோங்கு மந்தாரை
மாமே வுறுஞ்சி ரரவிந்தம்
மானத மதனு னம்புழுகு
மகிழ்குங் குமஞ்சவ் வாதுசுண்ணம்
மருவார் கொழுந்து வேர்மலியுந்
தேமே வணைசைத் திருநாடா
சிறியேன் சிற்றில் சிதையேலே
தேவே யோக சாத்தையா
சிறியேன் சிற்றில் சிதையேலே.

சிற்றில் - தெருவிலே சிறுமியர் சிறுவீடு கட்டி விளையாடுவர். அப்போது சிறுவர் விளையாட்டாய் அவர் கட்டிய சிறுவீடுகளை அழிப்ப துண்டு. அவ்வாறு அழிக்கவரும் சிறுவரைப் பார்த்து, 'எம் சிற்றிலை அழியாதே' என வேண்டுவதாகப் பாடப்படுவதாம்.

கா - சோலை. சூதம் - மாமரம். கைதை - தாழை. வலம்புரி - நந்தியாவட்டை. கோங்கு - கோங்க மரம். மரு - மணம், புழுகு, குங்குமம், சவ்வாது சுண்ணம் என்பன வாசனைப் பொருள்கள். வேர் மலி - வெட்டிவேர். (1)

37. பாரே சிறந்த நெடுஞ்சோலைப்
பண்டு டெறிந்து குதித்துமந்தி
பலவின் கனிமாங் கனிவாழைப்
பழங்கள் சிதற மதுவோட
நேரே யுடைந்த செழுந்தேனும்
நெகிழ்ந்த மலர்க்கா வுறைதேனும்
நெருங்கிக் கலந்தே மழைபொழிய
நெடுநீர் பாய மடுப்பெருகி

காரே சிறந்த மணித்தோகை
கலப மயில்கூத் தாடவது
கண்டே தருக்கோ கிலம்பாடக்
கமலத் துறைமா மகள்மகிழச்
சீரே சிறந்த திருவடிசைச்
செல்வா சிற்றில் சிதையேலே
தேவே யோகசாத் தையா
சிறியேன் சிற்றில் சிதையேலே.

மந்தி - குரங்கு. பலவின் கனி - பலாப்பழம். மலர்க்கா - மலர்ச் சோலை. மணித்தோகை - அழகிய இறகு. கோகிலம் - குயில். கமலம் - தாமரை, கமலத்துறை மாமகள் - இலக்குமி. (2)

வேறு

38. மஞ்ச டம்புயவே யுயர்சி ருள்ளாய்
வர்த்தனை நற்றருமா
வஞ்சனை யலகைத் திரளால் நய்யா
மற்கிருபை யுற்றவனே
அஞ்சன விழிமெய்ப் புனமா துள்ளா
யப்புவிழித் திருமா
தம்பிகை யுயர்முக் கனிபோற் சொல்லா
ளற்புத புட்கலைசேர்
வெஞ்சின வெகுளிக் கடமா வல்லாய்
வெற்றி மிகுத்தவனே
வெம்பண நீழலிற் பெருமா னல்லோன்
வித்தக னற்றுறவர்
செஞ்சர ணிணையைப் பணிமா மெய்யா
சிற்றில் சிதையேலே
செந்தமி ழடிசைப் பதியோ கையா
சிற்றில் சிதையேலே.

வேய் - மூங்கில். அலகை - பேய். நய்யாமல் - வருந்தாமல். கிருபை - அருள். அஞ்சன விழி - மை தீட்டிய கண். அப்புவிழி - அம்பு போன்ற கண். புட்கலை - ஐயனாரின் தேவி. வெகுளி - கோபம். கடமா - யானை. வெம்பண நீழலிற் பெருமான் - கொடிய பாம்புப் படத்தின்கீழ் அமர்ந்த பார்சுவ நாதர். வித்தகன் - அறிஞன், ஞானி. யோகையா - யோக நிலையிலிருக்கும் தலைவனே. (3)

வேறு

39. காருங் கடலுங் கலிப்பொருபால்
கடிமும் முரசி னார்ப்பொருபால்
கழனி நடுகைக் குரலொருபால்
கரவாய்ப் பம்பை யதிர்பொருபால்
கூறுஞ் சங்கத் தமிழொருபால்
குலவு மறையி னொலியொருபால்
கோக னகங்கண் டிசை யொருபால்
குமிறு மேளத் தொனியொருபால்
வாரும் வடமும் புனைந்த கொங்கை
மடவார் நடனத் தொலியொருபால்
வலமார் யாழி னிசையொருபால்
மகிமை விளங்கி மிகுந்தவளம்
சேரு மடிசைத் திருநகராய்
சிறியேன் சிற்றில் சிதையேலே
தேவே யோகசாத் தையா
சிறியேன் சிற்றில் சிதையேலே.

கார் - மேகம். கலிப்பு - ஒலிப்பு. கடி - கடிப்பு, முரசடிக்கும் கோல். மும்முரசு - நியாய முரசு, வீரமுரசு, தியாக முரசு. தியாக முரசிற்கு பதிலாக மணமுரசு கூட்டி மும்முரசு எனலும் உண்டு. கழனி- வயல். நடுகைக்குரல் - நடுவார் எழுப்பும் ஒலி. பம்பை - தோலா லான கோலால் அடிக்கும் இசைக்கருவி. குமிறுதல் - ஒலித்தல். மேளம் - நாகசுர மேளம். வார் - முலைக்கச்சு. வடம் - மணிவடம். மகிமை - மேன்மை. (4)

40. அம்பொற் புரிசைக் கொடியாடை
அறவி லாரை நீப்பவுய
ரறிவோர் தம்மை மகிழ்ந்தழைப்ப
வடருஞ் சோலைத் தடமனைத்தும்
வம்பிற் பொலிந்த மலர்த்தருக்கள்
மகிழ்ந்து கூர்ந்து முடிசூடி
வாம னெறியா கமமெல்லாம்
மாவிற் குயில்கள் மிகப்பயிற்ற
விம்பக் கதிரோன் றேர்ப்புரவி
விரைந்து செலும்போ துயர்கதலி
விசையால் விரிக்க வெண்மதிதோய்
விளங்கும் புவிசே ருயர்தூபிச்

செம்பொற் சிகரத் தருமபுரித்
திறலோன் சிற்றில் சிதையேலே
தேவே யோக சாத்தையா
சிறியேன் சிற்றில் சிதையேலே.

புரிசை - மதில். நீப்ப - விலக்க. அறிஞோர் - அறிஞர். அடரும் சோலை - நெருக்கமான சோலை. தடம் - இடம். வம்பு - மணம். தருக்கள் - மரங்கள். வாமன் - அருகன். விம்பம் - வட்டம். தூபி - சிகரத்துள்ள மேடை, உச்சி. தருமபுரி - அடிமதிக்குடியின் மற்றொரு பெயர். (5)

சிற்றில் முற்றும்

## சிறுபறை

41. வருந்திட்ட தனமாதர் நடைநா டகஞ்செய்ய
மகிழ்பஞ்ச வாத்தி யங்கள்
மகிமையால் வெவ்வேறு தொனிகள் மிக வதிரவே
மாற்றலர் தம்மை விம்மி
யுருந்தொட்டி வருவீரர் குஞ்சரந் தன்னிலே
உக்கிரமுட னேறி மீறி
உம்பர்படை சூழ்வரப் பவனிவந் தடைபவர்க்
குண்மை வரனல்கு முரவோய்
கருந்தொட்டி யுண்டென்று நம்புமன் பர்க்குவெங்
கனுநவை கடும்பேய் வலுக்
கர்மரோ கங்கள்வஞ் சனைபில்லி சூனியங்
கதிர்முன் னிருள்போல நீக்கித்
திருந்தொட்டி மணமருந் தார்பிணி தவிர்ப்பனென
சிறுபறை முழக்கி யருளே
திருஞான குருபரா யோகசாத் தையநீ
சிறுபறை முழக்கி யருளே.

சிறுபறை என்பது குழந்தை சிறுபறையைக் கொட்டி விளையாடும் பருவம். சிறுபறை முழக்கு எனக் குழந்தையை வேண்டுவதாக இப் பருவப் பாடல் அமையும்.

பஞ்ச வாத்தியங்கள் - தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி மிடற்றுக்கருவி என்னும் ஐவகை இசைக்கருவிகள்.

தொனி - ஒலி. ஒட்டிவருதல் - வஞ்சினம் கூறி வருதல். உருந்து - உருத்து, மெலித்தல், விகாரம். குஞ்சரம் - யானை. உக்கிரம் - கடுமை, கோபம். உம்பர் - தேவர். வரன் - வரம். கர்ம ரோகங்கள் - வினைப் பயனுல் வந்த நோய்கள். பில்லி சூனியம் - சூனிய வித்தை; பிறர் கெடுதிக்காகச் செய்யப்படுவது. கதிர் - சூரியன். ஒட்டி - சேர. ஞான குருபரன் - ஞான குருக்களுள் சிறந்தோன். (1)

42. கும்பகின் னரர்கொண்ட சிகரங்கள் கோபுரம்
கொடுங்கைநீ ளணிமண்டபம்
குதிகொண் டுலாவுகயல் வாவிசுற் ருலையம்
கோகநக வெண்பதாகை
கம்பமுத லகளங்க மாளிகைகள் நவரத்ன
கசிதமாய் வளரநாளுங்
கடலலைக ளுயரவே நிலோச்சிய வாத்தியஐங்
காலமுறை பூசை புரிய
நம்புமுன தடியவர்கள் கிளைபெருக வேசேது
ராசனும் வளர்க நாடு
நகரமும் பெரியோர்கள் கல்வியுஞ் செல்வமும்
நன்மையே வளர்க நீயும்
செம்பொன்னெளிர் செங்கைகள் சிவந்திடா
சிறுபறை முழக்கி யருளே [வண்ணநின்
செகதலம் புகழடிசை யோகசாத் தையநீ
சிறுபறை முழக்கி யருளே.

கின்னரர் - யாழிசை வல்ல தேவ சாதியார். கொடுங்கை - வீடு முதலியவற்றில் வெளிப்புறம் நீண்டு வளைந்துள்ள உறுப்பு. வாவி - குளம். சுற்ருலயம் - கோயிலைச் சூழ்ந்துள்ள பரிவார தேவதைகளின் ஆலயம். கோகநகம் - தாமரை. பதாகை - கொடி. கசிதமாய் - பதித்தவாய். நாளும் - நாள்தோறும், எல்லா நாள்களும். நிலோச்சியம் - நிலைபெற்று ஒலிக்கை. ஐங்கால பூசை - விடியற்காலை, காலை, நண்பகல், மாலை, இரவு என்னும் ஐந்து காலங்களில் நிகழும் வழிபாடு. கிளை - சுற்றம். சேதுராசன் - திருக்கோவலூர்ப் பகுதியாகிய சேது நாட்டையாளும் அரசன். (2)

வேறு

43. குருகுயர் பொழிலுறை மலரொமு கியதென
குளிர்ச்சிசெய் யருள்செயவே
குலமக ளென்னில மதில்முடி யுறவே
குலைக்கதிர் மிகுவயல்சூழ்

வருகய லுகளிய புனநல்ந ளினியிலே
வனப்பெரு மைகள்பலவே
மலருணு பொழுதினி லுலவிய கயலுற
மடிசொரி மிகுகன பால்
பருகிய மடவன மலரம ளியிலே
படுத்துயர் துயிலுறவே
பழகிய மதுகர மிகுமிசை யதனுற்
பரத்தினை நினைவுறவே
முருகலர் மணமிகு மனசை யிலபதிபா
முழக்குக சிறுபறையே
முதுபுக ழுடிசையி லரிகர குமரா
முழக்குக சிறுபறையே.

குருகு - குருத்து, பறவை. பொழில் - சோலை. குலமகள் - நற்குடியில் பிறந்தவள். உகளிய - பிறழ்ந்த, தாவிய. புனநல் நளினி - நீரில் மலரும் நல்ல தாமரை, நீர் நிறைந்துள்ள நல்ல தாமரைத் தடாகம். மடவனம் - இளைய அன்னம். அமளி - படுக்கை. துயிலுற - தூங்க. மதுகரம் - வண்டு. பரத்தினை - மேலான இறைவனை. முருகு - தேன். முதுபுகழ் - தொல்புகழ், வழிவழியாக வரும் பெருமை. (3)

வேறு

44. சென்னலம் பெருகுரவி தேர்ப்பரிக் காற்குரந்
தொய்யிள நீர்கள் சிதறி
துய்யசெவ் வந்திமரு முல்லைமல் லிகைபாயத்
தூர்மொய்த்து வளர் நெட்டிலைக்
கன்னலங் கழனிநீர்க் காலமே கோலமாய்க்
கருஞ் சேற்றஞ் சேறு செழித்துக்
கனமாக' யெருவுரஞ் சேர்ந்துபக டுழுதசால்
கட்டி கோதறக் கரைந்து
நன்னலம் பெருகரளை யன்னவே முளைவித்து
நாள்முதற் களிகூர்ந்து நீ
நல்லமிர்த மீந்துநிதம் பாதுகாத் தனையென்று
நட்பி னுல்பெட் பாகவே
சென்னலங் கதிர்முத்த மிடுமடிசை காவலா
சிறுபறை முழக்கி யருளே
திருஞான குருபரா யோகசாத் தையநீ
சிறுபறை முழக்கி யருளே.

சென்னலம் - செல்லுகின்ற பெருவேகம். ரவி - சூரியன். பரி காற்குரம் - குதிரையின் காலில் உள்ள குளம்பு. தொய் - தொங்கு. இளநீர் - முற்றாத இளந்தேங்காய். துய்ய - தூய்மையான. மரு - மருக்கொழுந்து. தூர் - அடிப்பாகம். மொய்த்து-நெருங்கி. நெட்டிலை - நீண்ட இலை. கன்னலங்கழனி - கரும்புத்தோட்டம். இனமாக - மிகுதி யாக. பகடு - ஏர். கட்டி - சேற்றுத்திரள். கோதற - பழுது அற, குற்றமில்லாமல். களிகூர்ந்து - மகிழ்ச்சி மிக்கு. பெட்பு - விருப்பு. சென்னலங்கதிர் - பரவுகின்ற நல் ஒளி. (4)

45. கொங்குலவு முல்லைமல் லிகைவல்லி சாதகங்
கோபுரங் கொடுங்கை தென்னங்
குலைமஞ்ச ளிஞ்சிபூ வலரிமா தளைத்தருக்
கோதையர் குடங்கொங் கையில்
அங்கமல வாவிகரை செங்கரும் பந்தாட
வடர்கொடிக் காற்கேணிமா
வணிமணித் தேரதிரு மகிழ்புறங் கூவல்சுளை
யவிர்பலாக் கனிமீது நீள்
பைங்கமுகு கோளரைக் குங்குமத் தருவாழை
பாரிசா தகம சோகம்
பானலம் பூவயல் நீண்மதகு கால்கங்கு
பன்பணிப் புரிசை மறுகில்
செங்கய லுலாவுதரு மாபுரிக் கதிபனே
சிறுபறை முழக்கி யருளே
செகதலம் புகழடிசை யோகசாத் தையநீ
சிறுபறை முழக்கி யருளே.

கொங்கு - தேன், மகரந்தம். வல்லி - கொடி. பந்தாட - பந்து விளையாட பைங்கமுகு - பசுமையான கமுக மரம். பானல் - குவளை. கங்கு - எல்லை, கரை. புரிசை - மதில். (5)

சிறுபறை முற்றும்

## சிறு தேர்

46. சந்திரன் முதல்நவக் கிரகங்க ளெழுமுனிவர்
தருமநவ நாத சித்தர்
சட்சக்கிர வர்த்திகள் நவகோடி முனிபதிகள்
தையலர்க ளெழுகன்னிமார்
மந்திர மிகுகண் ணுகநா சனத்துட்ட
வயிரவன் வீர காளி
வரையிலர மகளிர்கள் தேவரம் பையர்நீல
மஞ்சுதவழ் கிரியில் வாழும்
கந்தருவர் கின்னரர் யட்சர்வித் தியாதரர்
கண்ணு யிரத்த மரர்கோன்
கைதொழுது துதியோது கடவுளர்க் குறவனே
கமலா சனத்தி னுளும்
செந்திரு விளங்கடிசை மூதூரு காவலா
சிறுதே ருருட்டி யருளே
சினநா யகர்க்குரிய யோகசாத் தையநீ
சிறுதே ருருட்டி யருளே.

சிறுதேர்: குழந்தை சிறுதேரை இழுத்து விளையாடும் பருவம். சிறுதேர் உருட்டியருள்க என வேண்டும் வகையில் இப் பருவப் பாடல்கள் அமையும்.

நவக்கிரகங்கள் - ஒன்பது கோள்கள்: சந்திரன், சூரியன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது. எழு முனிவர் - ஏழு இருடிகள்: அகத்தியன், புலத்தியன், அங்கிரசு, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டன். நவநாத சித்தர் - சித்தில் வல்ல ஒன்பது முனிவர்: சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அனுதி நாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர். சட் சக்கிரவர்த்திகள்-ஆறு சக்ரவர்த்திகள். நவகோடி முனிபதி - ஒன்பதுவகைச் சித்தர் கூட்டம். எழு கன்னிமார் - தெய்வத் தாய்மார் எழுவர். பிராமணி, நாராயணி, மகேசுவரி, கௌமாரி, வாராகி, உருத்திராணி, இந்திராணி. வயிரவன் - வீரத்தேவதையாக வணங்கப்படும் கிராம தேவதை. காளி - துர்க்கை. வரையிலரமகளிர்- மலையில் வாழும் தெய்வப் பெண்டிர். தேவரம்பையர் - தேவருலகத் தெய்வ மகளிர். கந்தருவர், கின்னரர், யட்சர், வித்தியாதரர்-பதினெண் தேவகணத்தை சார்ந்தவர்கள்; இசையில் வல்லவர்கள். கண்ணுயிரத் தமரர்கோன் - ஆயிரங்கண்ணுடைய தேவர்தலைவனாகிய இந்திரன். கடவுளர்க்கு உறவன் - அருகதேவருக்கு அடிப்பணி செய்யும் உறவு பூண்டவன். கமலாசனம் - தாமரையிருக்கை. செந்திரு - சிவந்த

இலக்குமி. மூதூரு-பழைமையான ஊர். காவலன் - காவல் தொழில் புரிபவன். (1)

47. விந்தா சலத்தைநிகர் மணிமாட கூடநிரை
வெற்றிநீள் கொடி தோரணம்
மின்னுலாவிய சதகோ புரவாச லடர்வெற்றி
வேந்தர்நெடு வீதி தோறும்
கொந்தார் குழற்பாவை மாதர் செம்பஞ்சடு
குழம்பி னடிேனு வாதுசெங்
கோகநக மலர்புலத் திடைபூத்த தேன்வண்டு
கூடிமொய்த் திடுவளமைசேர்
நந்தாத செல்வமிகு திருவடிசை நகர்மேவும்
நாதனே யோக வீரா
நவைசெய்த வஞ்சகர்கள் பகைவென்று
நாடெலாம் வர்த்திக்க நீள் [முனதுகிருபை
செந்தா மரைக்கொத்த திருமுக மலர்ந்தினிது
சிறுதே ருருட்டி யருளே
சினநா யகர்க்குரிய யோகசாத் தையநீ
சிறுதே ருருட்டி யருளே.

விந்தாசலம் - விந்தியமலை. நிகர் - ஒத்த. நிரை - வரிசை. தோரணம் - அலங்காரத் தொங்கல். கொந்தார் குழல் - பூங் கொத்துகள் அணிந்த கூந்தல். பாவை - பதுமை போன்ற பெண்; செம்பஞ்சு - மகளிர் காலுக்கு அணியும் செந்நிறக் குழம்பு. கோகநக மலர் - தாமரை மலர். வளமை - வளப்பம், செல்வ மிகுதி. நந்தாத - குறையாத, கெடாத. நவை - குற்றம், தீங்கு. வஞ்சகர்கள் - ஏமாற்று வோர். வர்த்திக்க - பெருக, மேலோங்க. (2)

48. விண்டோய் கொடிச்சிகர மேல்மஞ் சுறங்கவெளிர்
வெண்ணிலாக் கொழுவி தவழும்
விரிதலை யரம்பைமேல் வாளைகுதி கொள்ளநறை
மிகுபாளை வாய்க்கமு கின்மேல்
கண்டார் விருப்பமுற நாகவல் லிக்கொடிகள்
கன்னியுங் கணவனும்போற்
கவின்பெற்று வளரநீள் சுரபுன்னை மலர்கள்மங்
கலப்பொரிகள் போற் சிதறவே

தண்டேன் பிலிற்றுசண் பகமலர்கண் தீபமாய்த்
தழைக்கு மடிசைக் கடவுளே
சகலசென ரட்சகா மெய்யர்க்கு மெய்யனே
சத்தர்ம பரிபாலகா
செண்டா யுதப்பிரபல வீரியா ஆரியா
சிறுதே ருருட்டி யருளே
சினநா யகர்க்குரிய யோகசாத் தையநீ
சிறுதே ருருட்டி யருளே.

மஞ்சு - மேகம். அரம்பை - வாழை மரம். வாளை - வாளைமீன். நறை - தேன். நாகவல்லி - வெற்றிலை, வள்ளிக்கொடி. மங்கலப் பொரி - மங்கல நாளில் சொரியப்படும் நெற்பொரி. சுரபுன்னை-புன்னை வகையுள் ஒன்று. பிலிற்றுதல் - சிந்துதல். தீபம் - விளக்கு. செனம்- சனம், மாந்தர். ரட்சகன் - காப்போன். சத்தர்மம் - நல்லறம். பரிபாலகன் - காப்போன். பிரபலன் - பெருமையுற்றோன். ஆரியன் - அறிவுடையோன், பெரியோன், ஐயனார். (3)

49. பண்டமர ஞெரு சாப முற்றேன மாகியுற்
பவித்து வளர்கின்ற நாளிற்
பண்ணவன் ஆரண்ணியந் தன்னிலே கண்டடி
பணிந்தர்ச் சனைகள் செய்யவே
கண்டிறை யருட்படி பவித்ரபுரி வாழ்வணிகன்
கழனியை யழித்தவனையே
காரணஞ் செய்துகொண ரென்னவது
காட்டியே கூட்டி வருநாள் [போய்மாய்கை
எண்டிசையு ளோரேத்திய மெய்க்காட்சி நல்கியவ
னீடேற வீடுதவவே
யிந்நகரி யிறையீய ஆவடிக் கழஞ்சுபொன்
னெனவாங்கி யங்கவைத்த
திண்டிறல் விளங்கடிசை மூதூரு காவலா
சிறுதே ருருட்டி யருளே
சினநா யகர்க்குரிய யோகசாத் தையநீ
சிறுதே ருருட்டி யருளே.

ஏனம் - பன்றி. பண்ணவன் - தேவன், அருகன். ஆரண்ணியம் - ஆரணியம், காடு. அர்ச்சனை - மலரிட்டு வழிபடுகை. பவித்ரபுரி - ஓர் ஊர். கழனி - வயல். மாய்கை காட்டி - பொய்த்தோற்றம் காட்டி, வஞ்சித்து. மெய்க்காட்சி - நல்லறிவு. ஈடேற - உய்வடைய, வாழ. நகரி - நகரம். திண்டிறல் - மிக்க வலிமை. (4)

50. கனகவரை போலவரு போர்த்தே ருலாவியெழு
கடற்புவியி லார்கள் காண
கருதலர்கள் நெஞ்சங் கலங்கநீ ரதமேறுங்
காட்சியாங் காண வேண்டி
அனகனுறை மாளிகையும் நீடுழி வாழ்கவுன்
னதிசயந் தன்னை நம்பி
அழகுசிங் காரதமியற்றுகுப் பயவணங்
காமுடி பணிந்து போற்ற
மனகதியில் நீள்புவி பூண்டெழு கோடணையெனு
மாநகர விதி தனிலே
வாமனுறை கோவில்வல மாகவே நீள்புரவி
வானிலெழு கோட்டை யூர்தேர்த்
தினகரன் போலுனது முன்காண நின்றதேர்
சிறுதே ருருட்டி யருளே
சினநா யகர்க்குரிய யோகசாத் தையநீ
சிறுதே ருருட்டி யருளே.

கனகவரை - பொன்மயமான மலை, மேருமலை. கடற்புவி - கடல் சூழ்ந்த உலகம். கருதலர்கள் - பகைவர்கள். ரதம் - தேர். அனகன் - கடவுள், அருகன். அனகன் உறை மாளிகை - திருக்கோயில். அதிசயம் - சிறப்பு, சகசாதிசயம், கர்மக்ஷயாதிசயம், தெய்விகாதிசயம் (சீவக. 2813). அழகு சிங்கார ரதம் - அழகு குறையாத தேர். குப்பய்ய வணங்காமுடி - குப்பய்யன் என்னும் அரசன். கதி - வேகம். கோடணை-ஆரவாரம், வெற்றி முழக்கம். வாமன்-அருகன். தினகரன்-சூரியன். (5)

சிறுதேர் முற்றும்

# சிறப்புப் பெயர் முதலியவற்றின் அகராதி

[எண்: பாட்டு எண்]

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

[எண் : பாட்டு எண்]

# சாத்தன் வரலாறு

## சாத்தன்—ஒரு பொதுப் பெயர்

'சாத்தன்' என்பது மக்களுக்கும் மாக்களுக்கும் பொதுவாய் வழங்கப்பட்டுவந்த திணைப் பொதுப் பெயர் ஆகும். அஃறிணை, உயர்திணை என்னும் இருதிணையும் குறித்துவரும் இவ்வகைப் பொதுப் பெயரை 'விரவுப் பெயர்' என்றும் 'இயற் பெயர்' என்றும் வழங்குவர். இதற்கு எடுத்துக் காட்டாகத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் சாத்தன், கொற்றன் என்பவற்றைத் தந்துள்ளனர்.

இயற் பெயர் முன்னர்த் தந்தை முறைவரின் நிகழும் சொற் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டாகச் 'சாத்தந்தை,' 'கொற்றந்தை' எனக் காட்டியுள்ளனர். ஆதலால் சாத்தன் என்னும் பெயர் இயற் பெயராய் வழங்கப்பட்ட தொன்ருகும். அடைமொழிச் சிறப்புடன் வரும்பொழுது பெருஞ் சாத்தன்றந்தை, பெருங் கொற்றன்றந்தை, கொற்றங் கொற்றன்றந்தை, சாத்தங் கொற்றன்றந்தை என்று வரும் எனக் கூறுகின்றனர். மக்கள் முறையுணர்த்தும் பெயர் வரும் பொழுது கொற்றங் கொற்றன், சாத்தங் கொற்றன் எனவரும். சாத்தங் கொற்றன் என்ருல் சாத்தனுக்கு மகனுகிய கொற்றன் என்பதாம்.

## வழக்குப் பயிற்சி

'மரபேதானும்' நாற்சொல் லியலான் யாப்புவழிப் பட்டன்று' என்னும் தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பாவில் (80) பேராசிரியரும் சாத்தன் கொற்றன் என்னும் இப் பெயர்களையே எடுத்தாண்டுள்ளார். பேராசிரியர் இங்கே தரும் விளக்கம் வருமாறு :

> " வழக்கெனவும் செய்யுளெனவும் இடைதெரியாமல் ஒரு வாய்பாட்டான் வழக்குஞ் செய்யுளும் ஆகி ஒரு சொற்ருெடரினைச் சொல்லியதுபோலச் செய்யுள் செய்தல் என்றவாறு. 'சாத்தனுண்டான், கொற்றனுண்டான்' எனவும், 'சாத்தனுறங்கினுன் கொற்றனுறங்கினுன்' எனவும் 'சாத்தனை அறியாதார் ஒருவரையும் அறியாதார்' எனவும், 'சாத்தனிற் கொற்றன் போமே' எனவும் நின்ற வழக்கியலை முறையானே ஆசிரியமும் வெண்பாவும் கலிப்பாவும் வஞ்சியுமாகப் பரப்பப்பட்ட யாப்புவழிப் படுத்துக் கண்டுகொள்க."

இவ்வாருகச் சாத்தன் கொற்றன் என்னும் பெயர்களைத் தொல் காப்பிய உரையாசிரியர் நூற்றுக்கு மேற்பட்ட இடங்களில் எடுத் தாண்டுள்ளனர். 'சாத்தனை அறியாதார் ஒருவரையும் அறியாதார், சாத்தனிற் கொற்றன் போமே' என்பதனல் சாத்தன் என்னும் பெயர் எல்லாரானும் அறியப்பட்ட தொன்ரும் என்பது வெளிப்படை. இதற்குக் காரணம் சாத்தன்வழிபாடு தமிழகம் எங்கும் பரவியிருந் தமையேயாகும்.

'படர்க்கை முப்பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின்வரும் வினையெனிற் பெயர்க் கெங்கும்
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி'

எனவரும் நன்னூல் நூற்பா (394) உரையில்,

'சாத்தன் தெய்வம், அவற்குப் பலியிடுக,'

'சாத்தன் வந்தது, அதற்குப் புல்லிடுக,'

என்று உரைகாரர் வரலாற்று விளக்கம் தந்துள்ளனர். ஆகவே, சாத்தன் என்னும் இப் பெயர் இயற் பெயராய்த் தெய்வத்தைச் சுட்டும் பெயராய்ப் பண்டுதொட்டுப் பெருவழக்காய், எல்லார்க்கும் அறிமுகமானதாய் நிலவியமை தெரியவரும்.

## பெயர்க் காரணம்

'சாத்து' என்பது வணிகக் குழுவைக் குறிக்கும். வண்டிகள், எருதுகள் முதலியவற்றின் மீது சரக்குகளை ஏற்றிக் கூட்டங் கூட்டமாக வாணிகத்தின் நிமித்தம் ஊர்ஊராகச் சென்றுவந்த கூட்டம் சாத்து எனப்பட்டது. எனவே, சாத்தன் என்பது வாணிகக் குழுவில் உள்ள வன், வாணிகம் புரிவோன் என்னும் பொருள்பட்டு நிற்றல் காணலாம். 'மாசாத்துவான்' என்பது பெருவணிகன் என்னும் பொருளில் காரணப் பெயராகும். 'பெருங்குடி வாணிகன் பெருமட மகளே' எனக் கண்ணகியை விளிக்கும் கோவலன் அவள் தந்தையைப் பெருங்குடி வாணிகன் எனக் குறிப்பிடுதலும் காணலாம்.

"மகாசாத்திரன்' என்பது 'மாசாத்தன் என மாறி அமைந்தது எனக் கருதுவார் அடியார்க்குநல்லார். 'பாசண்டச் சாத்தன்' என் பதில் உள்ள 'பாசண்டம்' என்பதன் பொருளைத் தெளிவுபடுத்து மிடத்து அவர் வளையாபதிப் பாடல் ஒன்றனை எடுத்துக் காட்டித் தம் கருத்தினை நன்கு விளக்கியுள்ளார். அவர்தம் கருத்துரை வருமாறு :

'பாசண்டம் தொண்ணூற்றறுவகைச் சமய சாத்திரத் தருக்கக் கோவை :

'பண்ணாற் றிறத்திற் பழுதின்றி மேம்பட்ட
தொண்ணூற் றறுவகைக் கோவையும் வல்லவன்
விண்ணா றியங்கும் விறலவ ராயினும்
கண்ணாறி நோக்கிக் கடுநகை செய்வான்'

என்றார் வளையாபதியிலுமாகலின், இவற்றிற்கு முதலாயுள்ள சாத்திரங்களைப் பயின்றவனாதலின் மகாசாத்திரன் என்பது அவற்குப் பெயராயிற்று.''

பாசண்டச்சாத்தன் என்பான் தெய்வமாதலின் இவ்வாறு பெயர்க் காரணம் கற்பிக்கின்றார் போலும்!

## தெய்வச் சாத்தனின் சிறப்புப் பெயர்கள்

'சாத்தன்' என்னும் தெய்வத்தைச் சாத்தா, சாத்தையன், மாசாத்தன், ஐயன், ஐயனார், அரிகரபுத்திரன், அரியரபுத்திரன், ஹரிஹரபுத்திரன் என்றெல்லாம் வழங்குவர். நிகண்டு நூல்களும் ஐயனாருக்குரிய பெயராகச் சிலவற்றைத் தொகுத்துத் தருகின்றன. அவற்றுள், பழமையான நிகண்டுகள் சிலவற்றுள் காணும் ஐயனார்க் குரிய பெயர்களைக் காண்போம்:

'[1]கோழிக் கொடியோன், [2]சாத வாகனன்,
[3]காரி, [4]சாத்தன்—கடல்நிற [5]ஐயன்.'
(திவாகரம், தெய்வப். 9)

'[1]சாத வாகனன், [2]கோழிக் கொடியோன்,
[3]சாத்தன், [4]வெள்ளையானை வாகனன்,
[5]காரி, [6]செண் டாயுதன், [7]கடல்நிற வண்ணன்,
[8]பூரணை கேள்வன், [9]புட்கலை மணாளன்,
[10]ஆரியன், [11]அறத்தைக் காப்போன், [12]யோகி
[13]அரிகர புத்திரன்,—[14]ஐயன் பெயரே.'
(பிங்கலம், வானவர். 25)

'காரி யூர்தி காரிக் [15]குதிரை,
கோழிக் கொடியு மாகும் என்ப.' (பிங்கலம், வானவர். 26)

'[1]காரியே, [2]புறத்தவன், [3]பூங்கடல்
வண்ணன், [4]நெடிய சாத்தாப்,
[5]பூரணை கேள்வன், [6]யோகி,
[7]புட்கலைதன் மணாளன்,
[8]ஒருமா சாத்தன், [9]செண்டாயுதன்,
[10]வெள்ளை யூர்தி
[11]ஆரியன், [12]அறத்தைக் காப்போன்,
[13]அரிகர குமரன், [14]ஐயன்.' (சூடாமணி, தேவப். 28)

முந்திய நிகண்டு திவாகரம் ஐயனருக்கு ஐயன் உட்பட ஐந்து பெயர்களைத் தருகிறது. ஆனல், பின்வந்த பிங்கல நிகண்டு சூடாமணி நிகண்டு ஆகியவை பத்திற்கும் மேற்பட்ட பெயர்களைச் சுட்டியுள்ளன. அவற்றையும் பிற வழக்குப் பெயர்களையும் அகர அடைவில் காண்போம் :

| | |
|---|---|
| அய்யனுர் (ஐயனுர்) | சாத்தன் |
| அரிகரகுமரன் | சாத்தா |
| அரிகரபுத்திரன் | சாஸ்தா |
| அரியரபுத்திரன் | சாதவாகனன் |
| ஹரிஹரபுத்திரன் | செண்டாயுதன் |
| அறத்தைக் காப்போன் | செண்டலங்காரன் |
| ஆரியன் | புட்கலைமணளன் |
| ஐயன் | புறத்தவன் |
| ஐயனுர் | புறம்பணையான் |
| ஐயப்பன் | பூரணை கேள்வன் |
| கடனிறவண்ணன் | மாசாத்தான் |
| கடல்வண்ணன் | யோகி |
| காரி | யோகேசன் |
| காரிக்குதிரை (யாளி) | வெள்ளையானை வாகனன் |
| காரி யூர்தி | வெள்ளை யூர்தி |
| கோழிக்கொடியோன் | |

இப் பெயர்கள் எல்லாமே காரணப் பெயர்கள். இவற்றுள் சில ஒரே காரணம் பற்றி அமைந்த வெவ்வேறு பெயர்களாகவும் காணப் படுகின்றன. கால அடைவில் ஐயனருக்கு வழங்கும் பெயர்களின் வளர்ச்சி அவருடைய வரலாறு மக்களிடையே பெருகி வளர்ந்த வகையையும் காட்டுகின்றது எனலாம்.

### சங்க காலத்தில் சாத்தன் பெயர்

சங்கத் தொகை நூல்களில் பாடியோர் பலரும் பாடப்பட்டோருள் சிலரும், 'சாத்தன்' என்னும் பெயரைப் பூண்டுள்ளனர் என்பது தெரிய வருகிறது. அழிசி நச்சாத்தனர், ஆடுதுறை மாசாத்தனர், ஆலம்பேரி சாத்தனர், உறையூர்க் கதுவாய்ச் சாத்தனர், கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனர், கருவூர்ப் பூதஞ்சாத்தனர், தொண்டி ஆமூர்ச் சாத்தனர் முதலியன புலவர் பெயர்களாகும். மணிமேகலைக் காவியத்தைத் தந்தவர் மதுரைக் கூலவாணிகன் சித்தலைச் சாத்தனர் என்பதாம். பாண்டியன் கீரன் சாத்தன், கருவூர்ச் சேரமான் சாத்தன், ஒல்லையூர் கிழான்மகன் பெருஞ்சாத்தன் என்பன அரசர்கள் சிலரும் சாத்தன் பெயரைக் கொண்டிருந்தமையைப் புலப்படுத்தும். இவற்றை

நோக்கும்போது சங்க நாளில் சாத்தன் என்னும் பெயர் பெரு வழக்கிற்ருய் ஊரொடும் மற்றும் பண்புகளோடும் சார்ந்த அடைமொழி பெற்றும் பெருக வழங்கியமை தெளிவாம். 'ந' 'பேரி' 'பெரு' மா முதலிய சிறப்புணர்த்தும் அடைமொழிகளும் சாத்தன் பெயருக்கு அமைந்தமையும் சிந்திக்கத் தக்கதொன்ருகும்.

## பிடவூர்ச் சாத்தன்

சோழநாட்டுப் பிடவூர்கிழான் மகன் பெருஞ்சாத்தன்மேல் மதுரை நக்கீரரால், 'கடைநிலே'த் துறையில் பாடப்பெற்ற புறநானூற்றுப் பாடல் ஒன்று உள்ளது (395). இப் பெருஞ்சாத்தனே,

'சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்
செல்லா நல்லிசை உறந்தைக் குணது
இருங்கோ வேண்மான் அருங்கடிப் பிடவூர்
அறப்பெயர்ச் சாத்தன் கிளேயேம் பெரும!'

(புறம். 395 : 18 - 21)

என நக்கீரர், 'அறப்பெயர்ச் சாத்தன்' என்னும் சிறப்பு அடைமொழி தந்து போற்றியுள்ளார். இத் தொடருக்கு அறத்தால் புகழ்பெற்ற சாத்தன் என்பது பொருள்.

இப் பகுதிக்குக் குறிப்புரை எழுதிய டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள் நக்கீரர் பாடிய பிடவூர்ச் சாத்தன் அவ்வூரில் கோயில் கொண்டுள்ள தெய்வத்தின் பெயரைப் பெற்றவன் என்று விளக்கம் தந்துள்ளார்கள். அவர்கள் தரும் கருத்துரை வருமாறு :

'பிடவூர் என்பது சோழநாட்டில் உள்ளதொரு வைப்புத் தலம். அதில், மாசாத்தனர் கோயில் ஒன்று உண்டு. அவர் பெயரே இப் பாட்டுடைத் தலேவனுக்கு அமைந்துள்ளது போலும்.'

இவ்வாறு டாக்டர் ஐயர் அவர்கள் கொண்டதற்கு மூலமான சான்றுக் குறிப்புப் பெரியபுராணத்தில் உள்ளது. அதனேயும் அவர்கள் உடன் தந்துள்ளார்கள். பெரிய புராணத்திலே கழறிற்றறிவாராகிய சேரமான்பெருமாள் நாயனர் புராணத்தில் பிடவூர் மாசாத்தனர் என்னும் தெய்வம் சுட்டப்பட்டுள்ளார்.

சேரமான்பெருமாள் திருக்கயிலாயத்தில் இறைவன் திருமுன்னே தாம் பாடிய திருவுலாப்புறத்தை அரங்கேற்றியபோது உடனிருந்து கேட்டறிந்து வந்த மாசாத்தனர், அந் நூலே உலகத்துக்கு வெளிப்படுத்தியது பிடவூரிலேயே என்கின்ருர் தெய்வச் சேக்கிழார்.

'சேரர் காவலர் விண்ணப்பம் செய்தவத்
திருவுலாப் புறமன்று
சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா
சாத்தனர் தரித்திந்தப்
பாரில் வேதியர் திருப்பிட வூர்தனில்
வெளிப்படப் பகர்ந்தெங்கும்
நார வேலைசூ முலகினில் விளங்கிட
நாட்டினர் நலத்தாலே.'

(பெரிய புரா. வெள்ளானை, 52)

ஆகவே, பிடவூர் மாசாத்தனர் உலகமறிந்த தெய்வமாகவும், சிவ சம்பந்தமுடையவராகவும் சேக்கிழார் காலத்திற்கு முன்பே கருதப் பட்டார் என்பது தெரியவரும்.

## சிலப்பதிகாரத்தில் சாத்தன்

சாத்தன் கோயில்பற்றிய செய்திகள் சிலப்பதிகாரத்திலும் காணப்படுகின்றன. 'கனத்திறம் உரைத்த காதை'யிலும், 'வரந்தரு காதை'யிலும் சாத்தனின் தெய்விகத் திருவிளையாடல்கள் குறிக்கப் பட்டுள்ளன.

கண்ணகியின் உயிர்த்தோழியாகிய தேவந்திக்குக் கணவனைச் சாத்தனே மனித உருவில் எட்டு ஆண்டுகள் வாழ்ந்து, பின் தன் தெய்வ நலம் காட்டிப் பிரிந்த செய்தி உள்ளது. சாத்தன் பிரிந்தபின் தேவந்தி அத் தெய்வக் கோட்டத்தில் வழிபாடு செய்து வாழ்ந்து வரலாயினள் என்பது வரலாறு.

மாலதி என்பாள் மாற்றாள் குழந்தைக்குப் பால் கொடுத்தபோது, பால் விக்கி அந்தப் பாலகன் இறந்தான். மாலதியோ தன் கணவனும் இளையாளும் தன்மேல் பழிசுமத்துவரே என்று அஞ்சி, இறந்த குழந்தை யைக் கையில் ஏந்திக்கொண்டு, கோயில்கள்தோறும் சென்று வரம் வேண்டி அலைந்தாளாம். தன் கோயிலில் வரம் வேண்டிக் கிடந்த அவளுக்கு இரங்கிய சாத்தனே குழந்தையாய் மாறிவந்த செய்தி களும் பிறவும் பின்வரும் பாடற் பகுதியால் தெரியவரும்.

'பால்விக்கிப் பாலகன் தான்சோர மாலதியும்
பார்ப்பா னொடுமனையாள் என்மேற் படாதனவிட்டு
ஏற்பன கூறுரேன் றேங்கி மகக்கொண்டு
அமரர்தருக் கோட்டம் வெள்ளானைக் கோட்டம்
புகர்வெள்ளை நாகர்தங் கோட்டம் பகல்வாயில்
உச்சிக் கிழான்கோட்டம் ஊர்க்கோட்டம் வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம் புறம்பணையான் வாழ்கோட்டம்
நிக்கந்தக் கோட்டம் நிலாக்கோட்டம் புக்கெங்கும்
தேவிர்காள் எம்முறுநோய் தீர்மென்று மேவியோர்
பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந் தாளுக்கு
ஏசும் படியோர் இளங்கொடியாய் ஆசிலாய்

செய்தவ மில்லோர்க்குத் தேவர்வரங் கொடார்
பொய்யுரை யேயன்று பொருளுரையே கையிற்
படுபிணம் தாவென்று பறித்தவள் கைக்கொண்டு
சுடுகாட்டுக் கோட்டத்துத் தூங்கிருளிற் சென்றுங்கு
இடுபிணம் தின்னும் இடாகினிப் பேய்வாங்கி
மடியகத் திட்டாள் மகவை இடியுண்ட
மஞ்ஞைபோல் ஏங்கி அழுதாளுக் கச்சாத்தன்
அஞ்ஞைநீ ஏங்கி அழலென்று முன்னை
உயிர்க்குழவி காணுயென் றக்குழவி யாய்ஓர்
குயிற்பொதும்பர் நீழல் குறுக, அயிர்ப்பின்றி
மாயக் குழவி யெடுத்து மடித்திரைத்துத்
தாய்கைக் கொடுத்தாள் அத் தையலாள். தூய
மறையோன்பின் மாணியாய் வான்பொருட் கேள்வித்
துறைபோய் அவர்முடிந்த பின்னர் இறையோனும்
தாயத்தா ரோடும் வழக்குரைத்துத் தந்தைக்கும்
தாயர்க்கும் வேண்டும் கடன்கழித்து மேயநாள்
தேவந்தி என்பாள் மனைவி அவளுக்குப்
பூவந்த உண்கண் பொறுக்கென்று மேவித்தன்
மூவா இளநலம் காட்டியெம் கோட்டத்து
நீவா எனவுரைத்து நீங்குதலும் தூமொழி
ஆர்த்த கணவன் அகன்றனன் போயெங்கும்
தீர்த்தத் துறைபடிவேன் என்றவனைப் பேர்த்திங்ஙன்
மீட்டுத் தருவாய் எனஒன்றன் மேலிட்டுக்
கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள்—'

(சிலப். கனாத். 5-40)

தேவந்தி யார், அவளுக்கும் தெய்வச் சாத்தனுக்கும் உள்ள தொடர்பு என்ன என்பவற்றை இக் கனாத்திறம் உரைத்த காதைப் பகுதி விளக்குகிறது.

மாலதி சென்று வரம் வேண்டிய கோயில்களுள் ஒன்று புறம்பணை யான் வாழ்கோட்டம். புறம்பணையான் என்பது நகர்ப்புறத்தே வைத்து வணங்கப்படும் மாசாத்தன் ஆவன். தான் சென்ற இடங்களிலே தெய்வங்கள் இரங்காதொழிய அவள் பாசண்டச் சாத்தனின்கோயிலில் துயர் தீர்க்கவேண்டி வரம் கிடந்தாள் என்று உள்ளது. அப்படியாயின், முன்னர் அவள் சென்ற புறம்பணையான் வாழ் கோட்டமும் பாசண்டச் சாத்தன் கோட்டமும் வேறு வேறு என ஓர் ஐயம் நிகழ்கிறது. இங்கு இளங்கோவடிகள் சொல்லிச் செல்லுகின்ற முறைமையைப் பார்க்கும் போது புறம்பணையானும் பாசண்டச் சாத்தனும் இருவேறு தெய்வங் கள் என்றே கொள்ள இடமுள்ளது.

முதலில் அமரர்தருக் கோட்டம் முதலாக நிலாக்கோட்டம் ஈறாக அவள் சென்ற பத்துக் கோயில்களுள் எட்டாவதாகப் புறம்பணையான்

வாழ் கோட்டம் சுட்டப்பட்டுள்ளது. 'புறம்பணையான்' என்பதற்கு 'மாசாத்தன்' எனச் சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் விளக்கம் தருகிறுர். அடியார்க்கு நல்லார் 'சாதவாகனன் கோயில்' என்று குறிப்பிடுகின்றுர். இத் தெய்வங்கள் தன் துயர்தீராமையால் பின்னர் மாலதி பாசண்டச் சாத்தன் கோயிலில் வரம் வேண்டிக் கிடந்தாள். பாசண்டச் சாத்தன் என்பதற்குச் 'சாத்தன் என்கிற ஐயன் கோயிலிலே' என்று அரும்பதவுரையாசிரியரும், 'தொண்ணூற்ருறு வகைச் சமயசாத்திரங்களைப் பயின்ற சாத்தன்' என அடியார்க்கு நல்லாரும் விளக்கம் தருகின்றனர்.

புறம்பணையானுகிய மாசாத்தன் கோயிலையடுத்து அருகர் கோயிலான நிக்கந்தக் கோட்டம் சொல்லப்பட்டுள்ளது. அருக தேவரின் அறங்காக்கும் காவல் தெய்வமாகச் சாத்தனுர் சொல்லப்படுகிறுர். எனவே, அவள் முற்படச் சென்ற மாசாத்தன் அருகசமயத்தார் வழிபட்ட சாத்தன் கோயிலாதல் வேண்டும்.

பின்னர், மாலதி வரம் வேண்டிக் கிடந்த கோயிலாகிய பாசண்டச் சாத்தன் கோயில் பிற சமயத்தார்—வைதிக சமயத்தார் வழிபட்ட சாத்தன் கோயிலாதல் வேண்டும். பாசண்டன் என்ருல் புறச்சமயத்தான் என்றும், பாசண்டி மூடம் என்ருல் புறச்சமயத்தினரைப் போற்றும் மடமை என்றும் (அறநெறிச். 16) சமணர்கள் கொள்வார்கள். ஆகவே, பாசண்டச் சாத்தன் சமணசமயத்தாரல்லாத பிறசமயத்தவர் வழிபட்ட தெய்வமாதல் வேண்டும்.

தேவந்தி என்பாள் சோமகுண்டச் சூரியகுண்டத் தீர்த்தத்துறை படிந்து காமவேள் கோட்டம் தொழுதால் கணவனெடு பிரிவின்றி வாழ்வார் என்று கண்ணகிக்குக் கூறி, அவளை நீராட அழைத்தபோது, சமண மதச்சார்பினளாகிய கண்ணகி, தனக்கு அது பெருமை தருவதன்று என மறுத்துவிடுகிறுள். சிலப்பதிகாரத்தில் வரும் மாடலமறையோனும் வைதிகச் சமயச் சார்பினனுகவே உள்ளான். ஆதலால், இவர்கள் போற்றிய பாசண்டச் சாத்தன் வைதிக சமயத்தார் வணங்கிய கடவுளாவான். இவ்வாருகச் சாத்தன் சமணராலும் பிறராலும் வழிபட்ட கடவுளாய் இருத்தலினுல் இத் தெய்வம் பற்றிய செய்திகளில் சில குழப்பங்களும் கால அடைவில் சேர்ந்து வந்துள்ளன.

பாசண்டச் சாத்தன் கோயில் பௌத்தமதத்தார் வழிபட்ட கோயிலாக இருக்கலாம் எனக் கருதுகிறுர் திரு. பி. எல். சாமி அவர்கள். மேலும், அவர்கள் சங்ககாலத்தில் இருந்த சாத்தன் தெய்வம் பௌத்தரின் தெய்வமாகவே இருந்திருக்கலாம், அல்லது சமணரின் தெய்வமாகவும் இருந்திருக்கலாம். வைதிக மதத்தினரின் தெய்வமாக இருந்திருக்க இயலாது என்றும் துணிகிறுர்.[1] இது மேலும் சிந்திக்கத்தக்கது.

1. ஆராய்ச்சி: மலர் 4, இதழ் 2. ஜனவரி 74, சாத்தன் வழிபாடு—பி.எல் சாமி, பக். 154.

தேவந்தி, மாங்காட்டு மறையோன், மாடல மறையோன் ஆகியோர் வைதிக சமயச்சார்புடையராய், அம் மதக்கோட்பாடுகளை வலியுறுத்துவோராய்ச் சிலப்பதிகாரத்தில் இடம் பெறுகின்றமையால், வைதிக சமயத்தாரின் எழுச்சியும் அந்நாளில் இருந்தமை தெரியவருகிறது. ஆதலால், வைதிகச் சமயச் சார்பிலும் சாத்தன் வழிபாடு வளர்தல் இயல்பே. சமண-புத்தர் கோட்பாடுகள், தெய்வங்கள், வழிபாட்டு முறைகள் சிலவற்றை வைதிக சமயத்தாரும் தம் மதத்துள் ஏற்றுக் கொண்டுள்ளனர் என்பது வரலாற்று உண்மையாகும்.

சிலர் புறம்பணையானாகிய மாசாத்தனும் பாசண்டச் சாத்தனும் ஒருவரே என்றும் கொள்கின்றனர். இவர்கள், மாலதி மீண்டும் முன்னர்ச்சென்ற புறம்பணையானாகிய பாசண்டச் சாத்தன் கோயிலுக்கே சென்று வரம் வேண்டிக் கிடந்தாள் என்று உரைக்கின்றார்கள்.[2] பாடற்போக்கு இவ்வாறு கொள்வதற்கு ஏற்றபடி இருப்பதாகத் தோன்றவில்லை.

வரந்தரு காதையில் கண்ணகிக்குக் கடவுள் - மங்கலம் செய்து செங்குட்டுவன் எடுத்த விழாக் காணச் சென்றிருந்த தேவந்தி தெய்வாவேசமுற்று மாடல மறையோனிடம் செப்பிய மொழிகளும் நிகழ்த்துவித்த அற்புத நிகழ்ச்சிகளும் பற்றிக் கூறப்பட்டுள்ளன :

'தெய்வமுற் றெழுந்த தேவந் திகைதான்
... ... ... .
பாசண் டன்யான் பார்ப்பனி தன்மேல்
மாடல மறையோய் வந்தேன் என்றலும்'

(சிலப். வரந்தரு. 45-69)

என்று உள்ளது. சாத்தனை வழிபட்டுவந்தவளும் தனக்கு மனைவியாய் எட்டாண்டு இருந்தவளுமான தேவந்திமேல் பாசண்டச் சாத்தன் ஆவேசித்துப் பேசினான் என்பது சுட்டப்படுகிறது. சாத்தன் மக்களின் மேல் ஆவேசித்து அருள்மொழி வழங்குவான் என்பதும் அற்றைநாள் மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை ஆகும் என்பது வரந்தரு காதை நிகழ்ச்சிகளால் புலனாகின்றது.

## பக்தி இயக்கக் காலத்தில் சாத்தன்

சிலப்பதிகார காலத்திலே சமணர், பௌத்தர் வழிபடு தெய்வமாயிருந்த சாத்தன் ஏனைய வைதிக சமயத்தாராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டிருந்த செய்தியைத் தேவந்தி முதலியோர் வரலாற்றுள் கண்டோம். தேவாரம் பாடிய மூவர் காலத்தில் சாத்தனைச் சிவனுடைய மகனாகச் சொல்லுகின்ற வரலாறு நாட்டில் பரவிவிட்டது. சைவர்களும் சிவகுமாரனாகிய முருகனை வழிபடுவதுபோலச் சாத்தனையும் வழிபடத்

2. சிலப்பதிகாரம் : பெருமழைப்புலவர் பொ. வே. சோமசுந்தரனார் புத்துரை.

தொடங்கினர். சிவன் கோயில்களில் இடம்பெறும் தெய்வங்களுள் ஒருவராகவும் இச் சாத்தன் இடம் பெற்றிருத்தல் கூடும்.

### திருநாவுக்கரசர் தரும் செய்தி

திருநாவுக்கரசர் தாம் பாடிய திருப்பயற்றூர்த் திருப்பதிகத்திலே,

'பார்த்தனுக் கருளும் வைத்தார் பாம்பரை யாட வைத்தார்
சாத்தனை மகனா வைத்தார் சாமுண்டி சாம வேதம்
கூத்தொடும் பாட வைத்தார் கோளரா மதியம் நல்ல
தீர்த்தமும் சடைமேல் வைத்தார் திருப்பயற் றூர னாரே''

(தேவார. 4 : 32 : 5)

என்னும் பாடலில் சிவபெருமான் சாத்தனை மகனாகக் கொண்டார் என்னும் செய்தியைத் தெரிவித்துள்ளார்.

### ஆழ்வார்களின் அருளிச்செயல்கள்

திருமங்கையாழ்வார் தாம் பாடிய சிறிய திருமடலில் சாத்தனைச் சிறு தெய்வமாகச் சுட்டுகின்றார். திருமாலின் பேரழகில் ஈடுபட்டு மயங்கி உடல் நலம் இழந்த பெண்ணுக்காக அவளுடைய அன்னை சாத்தன் என்னும் தெய்வத்திற்கு நேர்ந்தாளாம். ஆனால், அவளுடைய மகளின் நோயோ சற்றும் குறையவில்லை. அது குறித்துக் காதல் கொண்ட மகளே பேசுவதுபோலத் திருமங்கைமன்னன்,

'ஆரானும் சொல்லிற்றும் கொள்ளேன்—அறிவழிந்து
தீரா வுடம்பொடு பேதுறுவேன் கண்டிரங்கி
ஏரார் கிளிக்கிளவி எம்மனைதான் வந்தென்னைச்
சீரார் செழும்புழுதிக் காப்பிட்டுச்—செங்குறிஞ்சித்
தாரார் நிறமாலைச் சாத்தற்குத் தான்பின்னும்
நேரா தனஒன்று நேர்ந்தாள் அதனாலும்
தீராதென் சிந்தைநோய் தீராதென் பேதுறவு!'

(சிறிய திருமடல் : 14-18)

என்று பாடுகின்றார். இங்கே சாத்தனுக்கு நேர்ந்தும் தலைவியின் நோய் தணியவில்லை என்பதனால் அச் சாத்தனுக்கு மேம்பட்டவன் திருமால் ஒருவனே என்பதும், அவனே நோய் தீர்க்கவல்ல பெரியோன் என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளமை காணலாம். பக்தி இயக்கக் காலத்தில் சைவம், வைணவம் முதலிய மதத்தைச் சார்ந்த மக்களும் சாத்தனைச் சிறு தெய்வங்களுள் ஒன்றாகக் கொண்டு வழிபட்டு வரலாயினர் என்று கொள்ளலாம்.

திருமாலிடம் மோகமுற்ற ஒரு பெண்ணினுடைய மயக்க நோயின் உண்மையறியாது, அவளுக்குற்றதனைச் சிறுதெய்வத்தின் அணங்

காக எண்ணித் தாய்மார் வழிபாடு செய்யத் தொடங்க அதனைத் தோழி விலக்குகிற முறையில்,

'திசைக்கின்ற தேயிவள் நோயிது மிக்க பெருந்தெய்வம்
இசைப்பின்றி நீரணங் காடும் இளந்தெய்வம் மன்றிது'

என்னும் திருவாய்மொழிப் பாசுரம் அமைந்துள்ளது (4-6-2). பேருரையான ஈடு இதற்கு விளக்கம் தரும்பொழுது, பகவத் சம்பந்தம் பெற்றவர்களிடம் வேறு இளந்தெய்வங்கள் எதுவும் செய்யாது என்று விளக்க வந்த இடத்தில், குடிமகன் ஒருவனுக்கு ஐயனாரேறி வந்து நலிந்த கதை ஒன்றை எடுத்துக்கூறுகிறது. நம்மாழ்வார் உரைத்தபடி ஐயனார் ஓர் இளந்தெய்வமாகக் கருதப்பட்டார் என்பது விளக்கமாகும்.

## சாத்தன் அவதாரக் கதை

திருமால் பத்து அவதாரம் எடுத்துவந்து உலகில் தீமை களைந்து நல்லோர்க்கு உறுதுணையாய் அறம்நிலை நிறுத்திய கதைகள் பல உள. மச்சாவதாரம் தொடங்கிக் கற்கி அவதாரம் வரை கூறப்படும் இப் பத்து அவதாரங்களையே யன்றி அவர் பக்தர்களின் பொருட்டாக வந்து நிகழ்த்திய லீலைகளை, 'பக்த மான்மியம்' போன்ற நூல்களில் காணலாம். தேவர் துயர் தீர்க்க முருகன் அவதாரம் செய்தது போலவே சாத்தனாரின் அவதாரக் கதையும் உள்ளது. சாத்தனாரை உலகைக் காக்கும் காவல் தொழிலில் சிவபெருமான் வைத்தார் என்று புராணங்கள் பேசுகின்றன.

## பாற்கடல் கடைந்த கதை

தேவர்களும் அசுரர்களும் ஒன்றுகூடிப் பாற்கடல் கடைந்த காலத்து அமுதம் பிறந்தது. அதனை, உடல் வலிமை வாய்ந்த அசுரர்கள் கைப்பற்றிக்கொண்ட நிலையில், திருமால் எல்லாரும் கண்டு காமுறும் ஓர் அழகிய மோகினிப் பெண்ணாக வந்தார். தேவருக்கும் அசுரருக்கும் தானே அமுதத்தைப் பகிர்ந்தளிப்பதாக அவர்களை இருகூறாய் அமர்த்தி, மால்மோகினி அமுதம் வழங்கலாயினாள். மோகினியின் அழகில் உள்ளம் பறிகொடுத்திருந்த அசுரர்களின் கண்முன்னேயே தேவர்களுக்கு அமுதம் வழங்கி, அவர்களை ஏமாற்றிச் சென்றனள் மோகினி.

பின், திருமால் கயிலாய மலைக்குச் சென்றபோது சிவபெருமான் நிகழ்ந்தது கேட்டுத் திருமாலின் மோகினி உருவத்தைக் காட்டச் சொன்னாராம். திருமாலும் முன்னைய மோகினி உருவெடுக்க அது கண்டு சிவனும் மோகமுற்றவராய் அம்மோகினியைச் சேரவே சாத்தன் பிறந்தான் என்று புராணக் கதை உள்ளது. சிவனுக்கும் திருமாலுக்கும் பிறந்த புத்திரராதலால், 'அரிகரபுத்திரர்' என்றும் பெயர் பெற்றார் என்பர். 'மோகினிசுதன்' என்றும் இவரைக் குறிப்பிடுகின்றனர்.

'பெண்ணாகி யின்னமுதம் வஞ்சித் தானை
பிறையெயிற்றன் றடலரியாய்ப் பெருகி னானை'

என்று தொடங்கும் பெரிய திருமொழிப் பாசுரத்தில் (2-5-8) திருமங்கை மன்னனும் மோகினி அவதார நிகழ்ச்சிக் குறித்துப் பாடியுள்ளமை காணலாம்.

திருமால் சிவபெருமானுடைய சத்தியாகிய தேவியே என்னும் கருத்துத் தேவார காலத்திற்கு முற்பட்டே வழங்கி வந்திருக்க வேண்டும்.

'அரியலால் தேவி இல்லை
ஐயன் ஐயாற னார்க்கே'

என்கிறார் திருநாவுக்கரசர்.

## பஸ்மாசுரன் கதை

ஐயனாரின் அவதாரம் குறித்து மற்றொரு புராணக் கதையும் உள்ளது. சுகன் என்னும் அசுரனின் குமாரனாகிய விருகாசுரன் சிவபெருமானை நோக்கிப் பெருந்தவம் இயற்றினான். இவனுடைய பக்திநிலைக் கண்டு சிவபெருமான் அவனுக்குக் காட்சிக்கொடுத்து அவன் வேண்டும் வரம்பற்றி வினாவினாராம். அப்பொழுது, அவன் தான் எவருடைய தலையில் கைவைத்தாலும் அவர்கள் இறக்கவேண்டும் என்று கேட்கச் சிவனும் அவ்வாறே ஆகுக என வரம் தந்தார். வரத்தினை மெய்ப்பித்து அறிய அந்த அசுரன் சிவபெருமான் தலையிலேயே கைவைக்க எத்தனிக்கவே சிவபெருமான் மறைந்தார். உடன்தானே, திருமால் அசுரன்முன் அழகிய பெண் வடிவாய்த் தோன்றினார். அசுரன் அப் பெண்ணை விரும்பிப் பின்செல்ல அவள் நீராடி வருக எனக் கூறினளாம். அசுரன் நீராடும்போது அறியாது தன் கையைத் தன் தலையிலே வைத்துக்கொண்டு இறந்தான். வேறு சில புராணங்களில் அசுரன்முன் தோன்றிய பெண் தன்னோடு நடனமாட அழைத்தாள் என்றும், தான் ஆடுவதுபோல் எல்லாம் ஆடவேண்டும் என்று உரைத்தாள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு ஒருப்பட்ட அசுரன் தன்னை மறந்து மோகினிப் பெண் ஆடுவதுபோலெல்லாம் ஆடினனாம். அவள் தன் தலைமேல் கைகவித்து ஆட, அதுபோலவே அசுரனும் தன் கையைத் தலைமேல் வைக்கவே இறந்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அசுரனைப் பஸ்மாசுரன் என்று குறிப்பிடுவர்.

இந்தச் சந்தர்ப்பத்தில் சிவபெருமான் பெண்ணுருக் கொண்ட திருமாலாம் மோகினியுடன்கூடி அரிகரபுத்திரனைத் தந்தார் என்று சொல்லப்படுகிறது.

## தாருகாவனத்து இருடி கதை

தாருகாவனத்து இருடிகளின் செருக்கையும் அவர்களுடைய மனைவியரின் ஆணவத்தையும் அடக்கும் பொருட்டாகச் சிவன் பிச்சாடனத்

திருக்கோலமும், திருமால் மோகினித் திருக்கோலமும் பூண்டுவந்தனர். திருமால் முனிவரிடம் செல்ல, அவர்கள் எல்லோரும் மால்மோகினியைக் கண்டு மயங்கி அவர் பின்னல் சென்றனர். அதுபோலவே, முனிவரின் தேவியரிடம் பிச்சாடனக் கோலத்தில் சென்ற சிவமூர்த்தியைக் கண்டு அவள் மனம் நெகிழ்ந்து, அத் தேவியர் தம் கற்பினை இழந்தனர். இந்தச் சந்தர்ப்பத்தில் பிச்சாடனரும் மோகினியும் ஒருங்கு சேர ஐயனர் பிறந்தனர் என்றும் புராண வரலாறு ஒன்று உண்டு.

தமிழ்க் கலைக்களஞ்சியம், 'தாருகாவனத்து இருடிகளின் ஆணவ மாதி இறுமாப்புக்களை அடக்குவதற்கு அரியும் அரனும் எழுந்தருளிய காலத்து மோகினியாகி நின்ற மகாவிஷ்ணுவின்பால் அரனுக்கு மகனகத் தோன்றியவர்' என்று இந்தக் கதையை மட்டுமே சிறப்பாக எடுத்துக்காட்டியுள்ளது.

இவ்வாருக, எல்லாப் புராணக் கதைகளும் அரனும் அரியும் கூடிய காலத்து ஐயனர் பிறந்தார் என்பதுபற்றிப் பின்னல் புனையப்பட்டன என்பது வெளிப்படை.

## புராணங்களில் சாத்தன் கதை

திருமால் மோகினி வடிவில் வெளிப்பட்ட காலத்துச் சிவன் அணைய அவரித்த மைந்தனே சாத்தனகிய ஐயனர் எனப் பேசப்படும் அவதாரக் கதையைப் புராணங்களும் போற்றி உரைக்கின்றன. 'சிவனணைஞ்ச பெருமாள்' என ஒரு பெயரும் பெருமாளுக்குப் பிறந்துவிட்டது. சிவன் சேர்க்கையால் பிறந்த பெருமாள் என்று கொண்டால் இப் பெயர் ஐயனரைக் குறிப்பதாகும். சிவன் திருமால் சேர்க்கையால் பிறந்த ஐயனருக்கு, 'அரிகரபுத்திரன்' என்னும் காரணப் பெயரும் ஏற்படலாயிற்று. அரி - திருமால். அரன் - சிவன். சிவனும் திருமாலும் ஒருசேரப் பெற்ற தேவப் பிறவி ஐயனர். இவருடைய பிறப்பினையும் இவர் காவல் தெய்வமாய் விளங்கும் பாங்கினையும் கந்தபுராணம் முதலிய பல நூல்கள் விளக்கமாய் எடுத்துரைக்கின்றன.

## கந்தபுராணம்

கந்தபுராணத்தில் இரண்டாவதான அசுர காண்டத்திலே 32ஆம் படலமாக, 'மகாசாத்தாப் படலம்' அமைக்கப்பட்டுள்ளது. இப் படலத்தில் ஐயனர் அவதார நிகழ்ச்சிகளும், அவர்தம் மேன்மையும் சிறப்புறப் பேசப்படுதல் காணலாம். தமிழிலுள்ள புராண வரலாறுகளுள், சாத்தன் கதை விரிவாக முதலில் பேசப்படுவது இந்தப் புராணத்தில்தான். எனவே, இக் கந்தபுராணத்தில் கச்சியப்ப சிவாசாரியர் தரும் கதைச் சித்திரத்தை நோக்குவோம்.

தேவர்களும் அசுரர்களும் இணைந்து அமுதம் பெறவேண்டிப் பாற்கடலைக் கடைந்தனர். இடையூறுகளைத் தூண்டிப் பெரிதும் முயன்று

அமுதம் எழச் செய்தனர். அங்நிலையில், அவர்களிடையே நேர்ந்த மாறுபாட்டைக் கண்டு திருமால் மோகினி வடிவாய் வந்து, அசுரர் மனத்தை மாற்றி அமரர்க்கு அமுதம் வழங்கினர்.

அதன்பின், அந்த மோகினி வடிவு கண்டு, அமலனுகிய சிவபெருமான், அத் திருமாலும் தன் சக்தியே என்பதனைக் காட்டும் வகையில் அவளைச் சார்ந்தனன். அங்நிலையில், தோன்றினர் ஐயனர். இச் செய்தினை,

‘இந்த வண்ணம் இருக்க முராரியும்
அந்தி வண்ணத் தமலனும் ஆகியே
முந்து கூடி முயங்கிய எல்லையில்
வந்த னன்னெமை வாழ்விக்கும் ஐயனே.

மைக்க ருங்கடல் மேனியும் வானுலாம்
செக்கர் வேணியும் செண்டுறு கையுமாய்
உக்கி ரத்துடன் ஓர்மகன் சேர்தலும்
முக்கண் எந்தை முயக்கினை நீக்கினன்.’

(கந்தபுரா. மாசாத்தாப். 48 - 49)

ஐயனரைத் தந்த சிவபெருமான் அவருக்குப் பெயர்சூட்டி, உருத்திரரோடு ஒக்கவைத்து உலகைக் காக்கும் தொழிலை அவருக்குத் தந்தார். அவ்வாறே, ஐயனர் காவல் தொழில்புரிந்து வரலானர் :

‘அத்த குந்திரு மைந்தற் கரிகர
புத்தி ரன்எனும் நாமம் புனைந்துபின்
ஒத்த பான்மை உருத்திரர் தம்மொடும்
வைத்து மிக்க வரம்பல நல்கியே.’

‘புவனம் ஈந்து புவனத் திறையென
அவனை நல்கி அமரரும் மாதவர்
எவரும் ஏத்திடும் ஏற்றமும் நல்கினன்
சிவன தின்னருள் செப்புதற் பாலதோ?’

‘அங்கண் மேவி அரிகர புத்திரன்
சங்கை யில்பெருஞ் சாரதர் தம்மொடும்
எங்கு மாகி யிருந்தெவ் வுலகையும்
கங்கு லும்பகல் எல்லையுங் காப்பனல்.’

(கந்தபுரா. மாசாத்தாப். 50, 51, 54)

பின்னர்ச் சூரபதுமனல் துன்புற்ற இந்திரன் தான் கயிலைக்குச் சென்றபோது தன் மனைவி இந்திராணியைக் காக்குமாறு ஐயனரை வேண்டினன் :

'இந்திரன் மங்கை இசைந்தது காணு
நந்தமர் கையனும் நம்பனும் நல்கு
மைந்தனை உள்ளி வழுத்துத லோடும்
அந்த மிலாவெம தையன் அறிந்தான்.'

(கந்தபுரா. மாசாத்தாப். 57)

இந்திரனுடைய வேண்டுதலை அறிந்து வந்த ஐயனுர் தம் கூட்டத்துள் ஒருவராகிய, 'மாகாளன்' என்பவனை ஏவி இந்திரன் மனைவியாகிய இந்திராணியைக் காத்துவரச் செய்தார் என்பர்.

இத்தகைய காவல் தெய்வமாகிய ஐயனுருக்கு ஊர்தோறும் வழிபடு கோயில்கள் ஏற்படலாயின. பண்டைப் பெருஞ்சிறப்புப் பெற்றதும் பரதகண்டத்துள்ள முத்திதரும் நகரேழில் ஒன்ருய்த் தென்னகத்து விளங்குவதுமாகிய காஞ்சிமாநகரத்தில் உள்ள சாத்தன் கோயில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. காஞ்சிநகரில் கோயில் கொண்டுள்ள சாத்தனின் கோட்டம் பற்றிய செய்திகள் புராணங்களிலும் பிற நூல்களிலும் காணப்படுகின்றன.

## காஞ்சிப் புராணம்

காஞ்சிப் புராணத்தில், 'மாசாத்தன் தளிப்படலம்' என ஒரு படலம் உள்ளது. காஞ்சியிலே மாசாத்தனின் கோயில் குமரகோட்டத்திற்குத் தென்திசையில் உள்ளது என்பதும் சாத்தனுர் அவதரித்துக் காஞ்சியில் கோயில் கொண்ட வரலாறும் இப் படலத்தில் தரப்பட்டுள்ளன.

'நறைகொப் புளிக்கும் நறும்பொகுட்டு
　　நளின வாழ்க்கைப் புத்தேளைச்
சிறையிற் புகுத்தும் பெருமானுர்
　　குமர கோட்டச் சிறப்புரைத்தாம்
நிறையப் பூத்த மலர்ப்பொதும்பர்
　　நீடும் அதற்குத் தென்திசைக்கண்
முறையின் திகழு மாசாத்த
　　முதல்வன் தானம் எடுத்துரைப்பாம்'

(காஞ்சிப்புரா. மாசாத். 1)

எனச் சிவஞான முனிவர் மாசாத்தன் கோயில் சிறப்பினைப் பேசத் தொடங்குகிருர். இங்கே சாத்தனுரின் அவதாரக் கதை கந்தப் புராணத்தை அடியொற்றியே உள்ளது. இறைவன் ஆணையால் சாத்தனுர் காஞ்சிமாநகர் வந்து சிவபெருமானை அருச்சனைபுரிந்து வழிபட்டனர் என்றும், இறைவன் அவருக்குக் காட்சி தந்து பூதகணத் தலைமையை நல்கினுரென்றும், அவர் காமாட்சி அம்மையாருக்கு

மகிழ்ச்சி பொங்கும்படி சிறப்பு மிகுகின்ற பிலத்தின் பக்கத்தே மகிழ்ந்து தங்கினுரென்றும் இப் புராணம் குறிப்பிடுகிறது :

'மறைமுதல் விடைமிசைத் தோன்றி மற்றவற்
கறைகழல் இமையவர் அருகு சூழ்தர
முறைகெழு பூதங்கள் முழுதுங் காப்புறும்
இறைமையின் மணிமுடி இனிது சூட்டினன்.

'பல்கரி வீரர்தேர் பரிகள் தம்முடன்
நல்கிய தலைமைபெற் றனைய சாத்தனும்
ஒல்கிடை மலைமகள் உவகை மீக்கொள
மல்குசீர் பிலத்தயல் மகிழ்ந்து வைகினன்.'

(காஞ்சிப்புரா. மாசாத்தன் தளி, 31, 32)

## காஞ்சிச் சாத்தனின் மகிமை

கரிகாற்பெருவளத்தான் மேருமலையைச் செண்டு கொண்டு மறியச் செய்து, மீளவும் அதனை முன்புபோலவே இருக்குமாறு செய்தானும். மேருமலையைத் திரிக்கும் பேராற்றல் அம் மன்னனுக்கு வாய்த்தது காஞ்சிச் சாத்தனுர் கொடுத்த செண்டாயுதத்தினுல்தான்.

காஞ்சிமாநகரில் காமக்கோட்டத்திலே வீற்றிருக்கும் காமாட்சி யின் திருக்கோயிலில் காவல் காத்துவரும் சாத்தனுல் அருளப் பெற்றது அந்தச் செண்டாயுதம். இச் செய்தி அடியார்க்கு நல்லார் தம் உரையுள் எடுத்துக்காட்டியிருக்கும் ஒரு வெண்பாவினுல் தெரிய வரும் :

'கச்சி வளைக்கைச்சி காமக்கோட் டங்காவல்
மெச்சி யினிதிரிக்கு மெய்ச்சாத்தன் —கைச்செண்டு
கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான்
செம்பொற் கிரிதிரித்த செண்டு.' (சிலப். 5 : 95 - 8)

இந் நிகழ்ச்சியைக் கலிங்கத்துப்பரணி பாடிய செயங்கொண் டாரும்,

'செண்டுகொண்டு கரிகால னெருகாலி லிமையச்
சிமய மால்வரை திருத்தருளி மீளவதனைப்
பண்டு நின்றபடி நிற்கவிது வென்றுமுதுகிற்
பாய்புலிப் பொறி குறித்தது மறித்தபொழுதே'

(கலிங்கத். இராச. 1)

என்று பாடியுள்ளார்.

## தனிப்பாடலில் சாத்தன் கதை

தண்டியலங்கார உரை மேற்கோள் - செய்யுள் ஒன்று திருமால், முருகன், ஐயனுர் மூவரையும் இணைத்துப் புகழ்கிறது.

'பொற்றூணில் வந்தசுடர் பொய்கை பயந்தவண்ணல்
சிற்றுயன் முன்வனிதை யாகி யளித்தசெம்மல்
மற்றியார்கொல் என்னில் மலர்தூவி வணங்கினாளும்
கற்றூர் பரவும் கநகாரி நகாரி காரி.' (தண்டியலங். 95 உரை)

இங்கே பொற்றூணில் வந்தசுடர் என்றது நரசிங்கமூர்த்தியை. பொய்கை பயந்த அண்ணல் ஆவார் முருகன். சிற்றுயன் முன் வனிதை யாகி யளித்த செம்மல் ஆவார் ஐயனர். இவருள் முதலில் சுட்டிய நரசிங்கமூர்த்தி கநகாரி ஆவார். கநகாரி என்றால், கனகன் என்னும் இரணியனை அழித்தவன் என்பது பொருள். நகாரி என்பது மலைக்குப் பகைவன்; கிரவுஞ்ச கிரியைப் பிளந்த முருகன். காரி என்பது கரிய வடிவுடைய ஐயனரைக் குறிக்கும். இப் பாட்டு அக்கரச்சுதகம் என்னும் அமைப்பிற்கு எடுத்துக்காட்டாகும். ஒரு சொல்லின் எழுத்துகளை ஒவ்வொன்றாக நீக்க, அது வேறு ஒரு பொருள் பயந்து தனிச் சொல்லாய் நிற்பதாம். இந்த வகையில் கநகாரி, நகாரி, காரி ஆகிய மூவரும் இப் பாடலில் பிணைத்துக் கூறப்பட்டுள்ளனர். காரியாகிய ஐயனரைக் குறிப்பிடும்பொழுது, 'சிற்றுயன்முன் வனிதை யாகி அளித்த செம்மல்' என்று அவருடைய தோற்றம் மிக முற்பட்டது என்று குறிப்பிடுதல் காணலாம்.

சிலப்பதிகாரத்திற்கு முற்பட்டும் பக்தி இயக்க காலத்திற்கு முற்பட்டும் சமணச் சார்பாக இருந்த ஐயனரைப் பிறரும் வழிபட்டுத் தங்கள் தங்கள் சமயச் சார்பில் பிணைத்துவரத் தொடங்கியுள்ளனர் என்று ஊகிக்கலாம்.

## சாதவாகனன் வரலாறு

சாத்தனுருக்கு உரிய பெயர்களுள் ஒன்று 'சாதவாகனன்' என்பது முன்னர்க் குறிக்கப்பட்டது. இதற்குக் 'குதிரைவாகனன்' என்பது பொருளாம். முண்டா மொழியில் இச் சொல் குதிரையின் மைந்தன் எனப் பொருள்படும் என்றும், அசுவமேத யாகம் செய்த ஒருவனுக்குப் பிறந்த பிள்ளை என்றும் பிருஸ்லுஸ்கி என்ற மேனுட்டு அறிஞர் கருதுகிறாராம். சாதவாகனன் என்ற பெயரே சாத்தன் என்று தமிழில் பிராகிருதத்தின் வழியாக வந்திருக்கலாம் எனச் சிலர் ஊகிக்கின்றனர்.

கி.பி. 2-ஆம் நூற்றுண்டிலே இந்தியாவில் ஆண்ட மன்னர்களுள் சாதவாகனர் என்பாரும் ஒரு பிரிவினர். இவர்கள் தென்னுர்க்காடு மாவட்டத்தில் உள்ள கடலூர் வரையில் ஆட்சி செலுத்தினர் என்பதற் கான ஆதாரங்கள் கிடைத்துள்ளனவாம்.

சாதவாகன அரசர்களைக் குறித்து விக்கிரமாதித்தன் கதையில் ஒரு குறிப்பு உள்ளது. உச்சயினியில் ஆண்ட விக்கிரமாதித்தனுக்குப்

பிரதிஷ்டானபுரத்தில் வாழ்ந்த ஒரு குயவன் வீட்டில் தங்கியிருந்த சாதவாகனன் என்னும் குழந்தையால் பதவி இழப்பு நேரும் என்னும் முன்னறிவிப்பு நிகழ்ந்ததாம்.

சாதவாகனக் குழந்தை குயவன் வீட்டில் தங்கியிருந்த பருவம் வாராத பிராமணப் பெண்ணுக்கும் பாப்பரசன் ஆதிசேடனுக்கும் பிறந்ததாம். இந்தக் குழந்தை பலவகையான மண் பொம்மைகளை வைத்து விளையாடுவது கண்டு வேதாளம் விக்கிரமாதித்தனுக்கு அறிவித்ததாம். அப்பொழுது விக்கிரமாதித்தன் படை கொண்டுவர, இக் குழந்தை தம் தந்தையான ஆதிசேடன் சொன்ன மந்திர முறைப்படி பொம்மைகளின்மேல் நீர் தெளித்ததும் அவையெல்லாம் உயிர்பெற்று எழுந்து விக்கிரமாதித்தனைத் தோல்வியுறச் செய்தன. இந்த வெற்றிக்கு அறிகுறியாகத்தான் சாதவாகன சகாப்தம் அல்லது சாலிவாகன சகாப்தம் தோன்றியது என்பர்.*

சாதவாகனன் கதை விக்கிரமாதித்தனுடைய சிம்மாசனத்தின் 32 ஆம் படிக்குக் காவலாகிய ஞானப்பிரகாசவல்லிப் பதுமை சொன்ன கதையாகும். இந்தக் கதை சாலிவாகன் பிறப்பும் விக்கிர மாதித்தனின் இறப்பும் பற்றிக் கூறுவதாகும்.

## ஐயனர் வழிபாடு

தென்னிந்தியச் சமய வரலாற்றுய்வாளர் சிலர் திராவிடர்கள் ஐயன், அம்மன் என இறைவனைப் போற்றி வழிபட்டனர் எனவும், ஐயன் வழிபாடே ஐயப்பன், ஐயனர் வழிபாடாக வளர்ந்தது என்றும் கருதுகின்றனர். பின்வரும், திரு. பி. எல். சாமி அவர்களின் கருத்தும் ஈண்டுச் சிந்தித்தற்குரியது.

> 'பழைய வடமொழி வேதங்களிலேயோ புராணங்களிலேயோ சாத்தனைப்பற்றி யாதொரு செய்தியும் இல்லை. வட நாட்டிலும் சாத்தன் வழிபாடு காணப்படவில்லை; ஆதலின், சாத்தன் வைதிக வேதத்திற்குப் புறம்பானவன் என்பது தெளிவாகின்றது...திகம்பர சமணர்களும் பத்தாம் தீர்த்தங்கரரின் பரிவார யட்சனைகச் சாத்தனைக் கொண்டனர். சமணரின் சாஸ்தாவை பிரமசாஸ்தா என்று சொல்வதுண்டு. தற்போது கிராமங்களில் ஐயனரை பிரமசாஸ்தா, பரமன் என்று சொல்வதும், நம்பிரான் என்று சொல்வதும் பிரம சாஸ்தாவைக் குறித்ததாகும். காஞ்சிப் புராணம் மாசாத்தன் தளியைப் பற்றிக் கூறியுள்ளது. பூதங்களின் கணநாதனைகச் சைவர்கள் மாசாத்தனை மாற்றினர்.'
>
> (ஆராய்ச்சி, மலர் 4, இதழ் 2, பக். 155, 156)

---

* ஆராய்ச்சி, மலர் 4, இதழ் 2, பக். 157 - 1974.

ஐயப்ப வழிபாட்டிற்கும், புத்தர் வழிபாட்டிற்கும் பெரிதும் தொடர்புண்டு என்றும் கருதுகின்றனர். 'ஐயப்ப சரணம், சுவாமியே சரணம், சரணம் ஐயப்பா' என ஐயப்ப பக்தர்கள் முழங்குவது புத்தர்கள் கூறும் புத்த தர்ம சங்கம் என்னும் முச்சரணம் போலவே அமைந்தது என்கின்றனர். கேரளத்தில் உள்ள பல ஐயப்பசாமி உருவங்கள் புத்தர் உருவத்தைப் போலுள்ளன என்றும் கூறுகின்றனர்.

இதனுல் திராவிடக் கடவுளாயும் சமணரின் தெய்வமாகவும் இருந்த சாத்தனைச் சைவரும் பிறரும் தத்தம் கடவுளாகப் பின்னர் மாற்றினர் என்பது தெரியவரும். அதற்கேற்பப் புராணக் கதைகளும் பின்னர்ப் புனையப்பட்டிருக்கவேண்டும்.

## ஐயன் கோயில்

காஞ்சிமாநகரில் போலவே தமிழகத்திலுள்ள வேறு பல ஊர்களிலும் பரவலாகச் சாத்தன், சாஸ்தா எனப்படும் ஐயனுர் கோயில்கள் உள்ளன. சிவன் கோயில்களிலே பரிவார தெய்வங்களுள் ஒன்ருகச் சில இடங்களில் சாத்தாவும் இடம்பெற்றுள்ளனர். என்ருலும், ஊருக்கு வெளிப்புறத்திலேயே இவருக்குத் தனிக்கோயில் அமைத்துப் பண்டை நாள்தொட்டு வழிபட்டு வந்துள்ளனர் என்பது வரலாற்று உண்மையாகும். இன்றும் ஐயனுர் கோயில் பல ஊர்களிலும் ஊருக்கு வெளியே தனிப்பட இருப்பது காணலாம். பிள்ளைத் தமிழில் காப்புக் கடவுளாகப் பாடப்படுவோரில் சாத்தனையும் பன்னிரு பாட்டியல் உளப்படுத்திக் கூறுகிறது.

## ஐயனுர் கோயிலில் யானை, குதிரை உருவங்கள்

ஐயனுர் கோயில்களில் குதிரை, யானை, வீரர் முதலிய உருவங்களை மண்ணுல் செய்து சுட்டு, வண்ணம் தீட்டிவைப்பது உண்டு. 'பவளக் கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலிலும் இல்லை' என்று மயிலைநாதர் நன்னூல் உரையுள் குறிப்பிட்டுள்ளார். இது சாதக வாகனன் எனப்படும். ஐயனுர் கோயிலில் வைக்கப்படும் யானை, குதிரை முதலிய உருவங்களையே குறித்துக் கூறப்பட்டதாகும்.

குளக்கரையிலிருந்த ஐயனுர் கோயிலில் உள்ள குதிரையின் உருவத்தைப் பின்னணியாக வைத்துப் 'பரமார்த்த குரு' கதை எழுதிய வீரமாமுனிவர் ஒரு கதை புனைந்துள்ளார். பரமார்த்த குருவின் சீடர்கள் குளக்கரையில் இருந்த ஐயனுர் கோயிலின் குதிரையின் நீர்படி நிழலைக் குதிரை என மயங்கித் தம் குருவுக்காகக் குதிரை பிடிக்கத் தூண்டில் போட்டதுபற்றிய நிகழ்ச்சியே அப் புனைகதை.

'ஐயன் பாழியிலானை' பற்றித் திருவாய்மொழி ஈடும் (1-1-5) குறிப்பிடுகிறது.

## கேரளநாட்டில் சாத்தா வழிபாடு

தமிழ்நாட்டிலே பரவலாகக் காணப்படும் ஐயனார் கோயில்கள் கேரளநாட்டில் மிகுந்து காணப்படுகின்றன. அந் நாட்டில் 'சாத்தாங் கோயில்' இல்லாத ஊரே இல்லை என்னும்படி இவருடைய வழிபாடு மிகுதியாய் உள்ளது. ஆதிசங்கரர் வாழ்ந்த 'காலடி' ஊரில் உள்ள சாத்தாவைப் பற்றி அறிமுகப்படுத்தும் பொழுது திரு. பரணீதரன் அவர்கள் கேரளத்தில் சாத்தா வழிபாடுபற்றியும் நன்கு விவரித்துள்ளார். அவர்தரும் செய்திகள் வருமாறு:

"ஸ்ரீ கிருஷ்ணன் கோயிலின் தெற்கு வெளிப்பிராகாரத்தில் சாஸ்தா கோயில் ஒன்றிருக்கிறது. கேரளநம்பூத்ரி இல்லங்களில் நாகப்பிரதிஷ்டையும் பகவதி வழிபாடும் சாஸ்தா சந்நிதியும் இருந்து வருவது தொன்றுதொட்டு ஏற்பட்ட பழக்கமாகும். அம் முறையில் இந்த சாஸ்தா கோயில் ஸ்ரீ ஆதிசங்கரரின் இல்லத்தில் இருந்ததாகக் கருதக் காரணம் உண்டு. சிவகுருவும் ஆர்யாம்பாவும் ஸ்ரீ சங்கரரும் தொழுத மூர்த்தியாக இருக்கலாம் என்று எண்ணிக் கொண்டே நாம் அதைத் தரிசித்து வணங்கியபோது, தொன்மையும் தொடர்பும் ஒருங்கு இணைந்த உணர்வு ஒன்று உள்ளத்தில் பொங்கிற்று.

கேரள பூமியில் சாஸ்தாவழிபாடு தனிச்சிறப்புப் பெற்று விளங்குவதைக் கண்டேன். அங்கு சாஸ்தாவுக்கு ஒரு தனிச் சந்நிதி இல்லாத ஆலயத்தைக் காண்பது அரிது. உருவ வழிபாடு தோன்றுவதற்கு முன்பு, வடிவமற்ற கற்பாறையில் அருவமாக சாஸ்தாவை எழுந்தருளச் செய்து வழிபட்டு வந்திருக்கிறார்கள். உருவ வழிபாடு தோன்றியது முதல் ஒவ்வொரு விதமாக சாஸ்தா மூர்த்தியை உருவகப்படுத்தித் தொழுது வந்திருக்கிறார்கள். பல்வேறு நிலையில் கண்டு களித்திருக்கிறார்கள்.

காலடியில் எழுந்தருளியிருக்கும் இந்த சாஸ்தா இடக் காலை மடித்து, வலக்காலைக் குத்திட்டுக் கம்பீரமாக அமர்ந்திருக்கிறார். இடக்கை இடது தொடையின்மீது இருக்கிறது. வலக்கை வலக்கால் முட்டியின் மீது படிந்து கீழே தொங்க விடப்பட்டிருகிறது.

வயிற்றையும் வலக்காலையும் சுற்றி யோக பட்டயம் கட்டப்பட்டிருக்கிறது. தலையில் ஜடாமுடி விரிந்திருக்கிறது."

(ஆனந்தவிகடன் 9-3-75, பக். 74)

திரு. பரணீதரனின் சித்திரம் கேரளத்தில் சாத்தா வழிபாட்டின் சிறப்பு நிலையை நன்கு விளக்குதல் காணலாம்.

## கன்னியாகுமரி மாவட்டதில் சாத்தன் வழிபாடு

கேரளத்தை ஒட்டிய கன்னியாகுமரி, திருநெல்வேலி மாவட்டங்களிலும் ஊர்காவல் தெய்வமாகச் சாத்தா ஆலயங்கள் பெரும்பாலான ஊர்களிலும் உண்டு.

சில ஊர்களில் சாத்தாவுக்கே முதன்மை தந்தும் ஆலயம் எடுத்துள்ளனர். கன்னியாகுமரி மாவட்டத்தில் ஆரல்வாய்மொழி, வீரநாராயணமங்கலம் முதலிய ஊர்களில் தனிச்சிறப்புடன் சாத்தாங் கோயில் அமைந்துள்ளமை காணலாம். ஆரல்வாய்மொழி ஆலயத்தில் சாத்தாவை முதன்மையாகவைத்து, மீனுட்சிசுந்தரேசுவரர் முதலிய தெய்வங்கள் பின்னல் சேர்த்துக் கொள்ளப்பட்ட வழிபடு தெய்வங்களாகக் காணப்படுகின்றன.

## நம்பிரான் விளையாட்டு

பங்குனித் திங்கள் உத்தரநாளில் சாத்தாவுக்குச் சிறப்புச் செய்து பெருவிழா எடுப்பர். அன்றுமாலை சாத்தாவைக் குதிரை வாகனத்தில் எழுந்தருளுவித்து வீதிஉலாச் செய்விப்பர். இவ் விழாவை 'நம்பிரான் விளையாட்டு' என்றும் கூறுவர். விளையாட்டு என்பதற்கு ஏற்ப வீதியில் வாகனத்தைச் சுழற்றியும் குதிரைமேல் சாத்தா ஆடி வருகின்றவகையில் அமைத்தும் குதிரை ஏறி நடத்தும் பாவனையாய் வீதியுலா நிகழ்த்துவிப்பர். ஆரல்வாய் மொழியில் இவ் விழாச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. வேறுசில ஊர்களிலும் நம்பிரான் விளையாட்டு நடைபெற்று வருகிறது. விழா எடுக்காத ஊர்களிலும் பங்குனி உத்தரத்தில் சாத்தவுக்குச் சிறப்பு வழிபாடு நிகழ்த்துவது அப் பகுதியில் வழக்கமாய் இருந்துவருகிறது.

## முக்கூடல் சாத்தா

சாத்தாவுக்கு உயிர்ப்பலி இடுவதில்லை. ஆனல், ஐயனரின் பரிவாங்களாகிய மதுரைவீரன், மாடன் முதலியோருக்கு ஆடு கோழி முதலிய உயிர்ப்பலியும் முன்பு அதிகமாகக் கொடுத்துவந்தனர். முக்கூடற்பள்ளில் பள்ளர் வழிபட்ட சாத்தாவுக்கு உயிர்ப்பலியிட்டு வழிபட்டதாகக் குறிப்புக் காணப்படுகிறது. சிறப்பாகப் பள்ளர் மழை வேண்டித் தெய்வங்களுக்குச் சிறப்புச் செய்த நிகழ்ச்சிகளைச் சுட்டும் பொழுது, பள்ளர் வாய்மொழியாய் இச் செய்தியை ஆசிரியர் வெளிப்படுத்துகிருர்:

' திங்கள்மும் மாரிஉல கெங்கும் பெய்யவே
    தெய்வத்தைப் போற்றிவந்து கைதொழுங்காண்
பொங்கலு மிட்டுத்தேங் காயும் கரும்பும்
    பூலா வுடையாருக்குச் சாலவே கொடும்

குங்குமத் தோடுசந் தனங் கலந்து
குமுக்கா வுடையா ரய்யர் தமக்குச் சாத்தும்
கங்கணங் கட்டிஏழு செங்க டாயும்
கரையடிச் சாத்தா முன்னே விரைய வெட்டும்'

(முக்கூடற். 32)

இப் பாட்டில் அய்யர், சாத்தா என இரு தெய்வங்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. இங்கே அய்யர் என்பது ஐயனாரைக் குறிக்கும். கரையடிச் சாத்தா என்பது நீர்த்துறைக் கரையிலே வழிபடப் பெற்ற கிராமத் தெய்வம். ஆகவே, 'சாத்தா' என்னும் பெயரொப்புமை கொண்டு ஐயனாராக இத் தெய்வத்தைக் கருதுவதற்கில்லை. இப் பள்ளர் பலியிட விரும்பியது ஐயனார் ஒழிந்த வேறு ஒரு சிறு தெய்வம் என்றே கொள்ளவேண்டும்.

## குற்றாலக் குறவஞ்சி தரும் குறிப்புகள்

குறவர் முதலியோரும் சாத்தாவைப் போற்றுகின்றனர். குற்றாலக் குறவஞ்சியில் வரும் குறத்தி தான் குறிசொல்லும்போது தனக்கு உதவத் தெய்வங்களை அழைக்கிறாள். இவள் விநாயகர் தொடக்க மாகத் துர்க்கை பிடாரி வரையில் துணைவேண்டுகிறாள்:

'குழல்மொழி யிடத்தார் குறும்பலா வுடையார்
அழகுசந் நிதிவாழ் அம்பல விநாயகா!
செந்தில்வாழ் முருகா, செங்கண் மால் மருகா!
கந்தனே யிலஞ்சிக் கடவுளே சரணம்!
புள்ளிமா னீன்ற பூவையே குறக்குல
வள்ளிநா யகியே வந் தெனக் குதவாய்!
அப்பனே மேலை வாசலி லரசே!
செப்பரு மலைமேல் தெய்வகன் னியர்காள்!
ஆரியங் காவா! அருட்சொரி முத்தே!
நேரிய குளத்தூர் நின்ற சேவகனே!
கோலமா காளி! குற்றால நங்காய்!
கால வைரவா! கன துடிக் கறுப்பா!
முன்னடி முருகா! வன்னிய ராயா!
மன்னிய புலிபோல் வரும்பன்றி மாடா!
எக்கலா தேவி! துர்க்கை பிடாரி!
மிக்கதோர் குறிக்கா வேண்டினே னுங்களை
... ... ... ... ...
வைத்ததோர் குறியை வகுத்தருள் வீரே?

(குற்றாலக். 62)

இப் பாடலில் குற்றாலக் கோவிலின் மேலை வாயிலிலுள்ள அப்பனாகிய ஐயனாரையும், குற்றாலத்தை அடுத்துள்ள ஆரியங்காவிலும்

குளத்தூரிலும் கோயில் கொண்டு விளங்கும் சாத்தாவையும் போற்றுதல் காணலாம்.

## நாட்டுப் புறப் பாடலில் ஐயனர் புகழ்

நாட்டுப்புறப் பாடலாக மக்களிடையே வழங்கிவரும் பாடல் களிலும் ஐயனரைப்பற்றிய குறிப்புகள் சில காணப்படுகின்றன:

'வந்தமழை போகுதில்லோ
மந்தை யாத்தா கண்பார்
அடுத்த மழை போகுதில்லோ
ஐயனரே கண்பார்'

(ஏட்டில் எழுதாக்கவிதை-46)

என்னும் பாடல் ஐயனரிடம் மழை வேண்டிப் பாடுவதாக உள்ளது.

'ஊருக்கு நேர்கிழக்கே
உறுதியுள்ள ஐயனரே
சத்தத்தை நீகொடய்யா
சரளிவிட்டு நான்படிக்க' (தமிழர் நாட்டுப் பாடல். 50)

என்பது உடுக்கடிக்காரன் தன் பாட்டு வளம்பெற ஐயனரை வேண்டுவ தாய் அமைந்துள்ளது. இப் பாட்டு ஊருக்கு நேர்கிழக்காக உள்ள ஐயனரைப் போற்றுகிறது. இது, 'கிராமத்தைப் பாதுகாக்க ஊரின் வடபால் (ஐயனர்) கோயில் கொண்டருளுவார்' என்னும் தமிழ்க் கலைக் களஞ்சியச் செய்திக்கு மாறுபடுகிறது. பெரும்பாலும் ஊரின் வடபால் கோயில் கொண்டு அருளும் தெய்வமாக வடக்குவாசற் செல்வி எனப் போற்றப்படும் காளிதேவியையே போற்றுவர். காளி கோயில் ஊரின் வடபாலில்தான் பெரும்பாலான ஊர்களிலும் உள்ளன. ஐயனர் கோயில் சில ஊர்களில் ஊரின் மேல்பாலும் காணப்படுகிறது. ஆகவே, ஐயனர் கோவிலுக்கு ஒரு திசையை மட்டும் குறிப்பது பொருத்தமாகத் தோன்றவில்லை.

## சாத்தாவுக்குப் பூசைபுரிவோர்

ஊர்காவல் தெய்வமான சாத்தாவுக்குப் பிராமணரல்லாதாரும் பூசை செய்கின்றனர் என்பது தெரியவருகிறது. பெரிய கோயில்களாக அமைந்த இடங்களில் பிராமணர் பூசை செய்கின்றனர். மருமக்கள் வழி மான்மியத்தில் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள், 'சாஸ்தாங் கோயில் சாந்தி ஐயரைப்'பற்றிக் குறிப்பிட்டுள்ளார். பொதுவாகக் கன்னியாகுமரி மாவட்டத்தில் சாத்தாவுக்குப் பூசை செய்வோர் பிராமணராகவே உள்ளனர்.

## சபரிமலைச் சாத்தா வழிபாடு

சபரிமலைச் சாத்தா வழிபாடு இப்பொழுது மிகவும் புகழடைந்து வருகிறது. கேரள நாட்டிலிருந்து மட்டுமன்றித் தமிழ்நாடு முதலிய பிற மாநிலங்களிலிருந்தும் பக்தர்கள் திரள்திரளாகச் சபரிமலைக்கு வந்து வழிபடுகின்றனர். தைமாதப் பிறப்பன்று நிகழும் மகர விளக்குத் திருவிழா இங்குப் பிரசித்தமானது. இதனை ஒட்டி இதற்கு முன் ஒரு மண்டலம், அதாவது 41 நாள்கள் விரதமிருந்து, நியமத்துடன் புலன்களை அடக்கி வழிபாடு செய்து, சபரிமலை யாத்திரையைத் தொடங்குகின்றனர். தலைமைக் குருசாமி ஒருவரின் தலைமையில் பலர் கட்டுக்கட்டித் தலையில் சுமந்துகொண்டு ஐயப்பன் புகழ்பாடிக் கூட்டம் கூட்டமாகச் செல்லும் காட்சி பக்தி உணர்வை ஊட்டவல்லதாகும்.

## சபரிமலை ஐயப்பன் வரலாறு

சபரிமலை ஐயப்பனையும் சிவன்-திருமால் இருவரின் வழிவந்த அவதாரமூர்த்தியாகத்தான் கொள்ளுகின்றனர். இவர் பந்தள இராச்சியத்தின் இளவரசனுயிருந்ததும், அப்பொழுது நிகழ்ந்த பல அரசியல் நிகழ்ச்சிகளும், அவர் இலங்கைக்கும் பாண்டி நாட்டுக்கும் சென்று நிகழ்த்திய சில அற்புதங்களும், தாயின் வேண்டுகோளால் புலிப்பாலுக்காகப் புலிகளைக் குட்டிகளுடன் திரட்டிவந்ததும், இறுதியில் சபரிமலையில் கோயில் கொண்டதும் பற்றிய பல செய்திகளை, 'ஐயப்பன் பாட்டு' எனவழங்கும் மலையாள நாட்டுப் பாடல்கள் தெரிவிக்கின்றன. இப் பாடல்கள் மலையாள நாட்டுப்புறமொழி வழக்காயிருப்பதோடு தமிழ் - மலையாளம் கலந்த மொழி நடையிலும் காணப்படுகின்றன. இப் பாடல்களை விரலால் தட்டி ஒலி எழுப்பும் இசைக்கருவிகளான உடுக்கை, தக்கை போன்றவைகளை இசைத்துக்கொண்டு பாடுவர்.

வட கேரளத்தில், 'ஐயப்பன் தியாட்டு' என்றொரு விழாக் கொண்டாடப்படுகிறதாம். அப்பொழுது ஐயப்பன் பாட்டும் துதிகளும் பாடுவது வழக்கமாயிருந்து வருகிறது. 'ஐயப்பன் விளக்கு' என்னும் பூசை கார்த்திகை மாதம் தொடங்கி ஒரு மண்டலம்வரை நடைபெறும். இந்தப் பூசையின்போதும் ஐயப்பன் பாட்டுகள் பாடுவது பிரசித்தமாகும். இப் பாடல்களின்வழி தெரியவரும். ஐயப்பன் கதைகளை ஈண்டுக் காண்போம்.[1]

## தத்தா—லீலா கதை

தத்தா என்னும் முனிவர் தம் மனைவி லீலாவுடன் காட்டில் உறைந்து தவம் மேற்கொண்டிருந்தார். அவருடைய தவநெறியைத் தடுத்து அவருடன் சிற்றின்பத்தில் ஈடுபட லீலா விரும்பினுள். அவள்தன்

1. திரு. எஸ். கே. நாயர் கீழைத்திசை ஆய்விதழில் எழுதிய (Ayyappa Cult) என்னும் ஆய்வுரையிலிருந்து எடுக்கப்பட்டவை.

வேண்டுகோளினல் சினமுற்ற தத்தன் அவளை மகிஷி என்னும் எருமை யாகப் போகுமாறு சாபம் கொடுத்தார். இது கேட்டுச் சினமுற்ற லீலாவும் அவரை எருமைக்கடாவாகப் போகுமாறு எதிர் சாபமிட் டனள். இருவருமிட்ட சாபத்தின் விளைவாக இருவரும் எருமையாய்க் காடுகளில் அலைந்தனர். இந் நிலையில், மகிஷி தன் சகோதரன் மகிஷாசுரனைக் 'கண்டிகா' என்னும் காளி கொன்றுவிட்டதாக அறி கிருள். இதற்குப் பழிவாங்குவதற்காக மகிஷி அசுர குருவான சுக்கிராச்சாரியாரிடம் யோசனைக் கேட்டாள். அவர் பிரமனை வழி பட்டு வரம் வேண்டுமாறு அவளுக்கு அறிவுறுத்தினர்.

முனிவர் சொற்படி கடுந்தவம் புரிந்த மகிஷியின்முன் பிரமன் தோன்றி, 'என்ன வரம் வேண்டும்?' என்று உசாவினன். அவள் சற்றுச் சிந்தித்து, இறப்பிலிருந்து தான் விடுதலை பெறுவதோடு அரிக்கும் அரனுக்கும் மகனுகப் பிறந்து 12 ஆண்டுகள் பூமியில் மன்னனுய் ஆட்சி புரியும் ஒருவனுலல்லது ஏனையோரால் தனக்கு இறுதி நேரக்கூடாது என்று வரம் வேண்டினள். பிரமனும் அவள் கேட்டவாறே அந்த வரத்தை அளித்தான்.

வரம் பெற்ற மகிஷி தேவர்கள் முனிவர்கள் முதலிய நல்லோரை எல்லாம் நலிவுறத் தாக்கிவரலானுள். தேவர்கள் செய்வதறியாது திகைத்தனர். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் பாற்கடல் கடையும் நிகழ்ச்சி நடைபெற்றது. அமிர்தம் மகிழ்ந்தளித்த திருமாலாகிய மோகினிக்கும் சிவனுக்கும் ஐயனர் அவதாரம் செய்தார்.

## பந்தள அரசகுமாரன்

ஐயப்பன் தாம் பிறந்த குறிக்கோளை நிறைவேற்றுவதற்காகத் தந்தை சிவபெருமான் கட்டளையின்வண்ணம் பந்தள நாட்டு அரசகுடும் பத்திற்கு வந்து சிலகாலம் வாழ்ந்துவரத் திட்டமிட்டார்.

ஐயப்பன் சின்னஞ்சிறு குழவியாய்ச் சபரிமலையின் அடிவாரத் துள்ள பம்பையாற்றின் கரையிலே கிடந்தனர். அப்பொழுது வேட்டைக்காகக் காட்டிற்கு வந்த பந்தளராசன் தனக்குக் குழந்தை யில்லாததால் ஐயப்பனுகிய தெய்வக் குழந்தையின் பேரொளி கண்டு பெருவிருப்புடன் எடுத்து அரண்மனைக்குக் கொண்டுசென்றுன். ஐயப்பக்குழவிக்கு 'மணிகண்டன்' என்று நாமம் சூட்டப்பட்டது. அரச குமாரனுக்குரிய சிறப்புடன் எல்லாக்கலைகளும் எவ்வித சிரமமுமின்றிக் கற்றுச் சிறந்த வீரராய் விளங்கினர்.

## வாவரைப் பணிகொண்டது

இவ்வாறு ஐயப்பன் இருக்கும் நாளில் காயங்குளம் கடற்கரையில் துருக்கியிலிருந்து வியாபாரநிமித்தமாக வந்த கப்பல் தலைவன் வாவர் என்னும் இஸ்லாமியருடன் போரிடும் சூழல் ஏற்பட்டது. பந்தள மன்னன் ஆணைப்படி சென்று அவரோடு பொருது, வெற்றி தோல்வி

யற்ற நிலையில் இருவரும் நட்பாளராயினர். வாவர் எப்பொழுதும் ஐயப்பன் ஏவிய பணி செய்து அவருடன் இருந்து பெருமை பெற்றார். இவருக்கு இப்பொழுது சபரிமலையில் தனி வழிபாட்டிடம் அமைக்கப்பட்டுள்ளது என்பதும் மனங்கொள்ளத்தகும்.

### புலிப்பால் நிகழ்ச்சி

மணிகண்டன் வந்தபின் பிள்ளையில்லாப் பந்தள மன்னனுக்கும் ஓர் ஆண் மகவு பிறந்தது. பந்தள மன்னனுடைய அமைச்சனுக்கு ஐயப்பனைப் பிடிக்கவில்லை. இதனால் மணிகண்டனுக்கு எதிரான செயல்களில் ஈடுபடலாயினன்.

கடைசியாக அமைச்சன் பந்தளநட்டு அரசியின் மனத்தை மாற்றி மணிகண்டன்மேல் வெறுப்புக்கொள்ளச் செய்யலானன். இராணிக்கு வயிற்றுவலி என்று பாசாங்கு செய்யச் செய்து, அவளுக்கு மருத்துவம் செய்ய ஒரு மருத்துவனையும் சூழ்ச்சியுடன் அனுப்பிவைத்தான். அந்த வயித்தியன் அரசியின் நோய்க்குச் சிறுத்தைப்புலியின் பால் கொண்டு வரவேண்டும் என்று கூறினன். மேலும், புலியுடன் குட்டியையும் கொண்டுவந்தால்தான் தூய்மையான பாலாகக் கறந்து பயன் படுத்தலாம் என்றும் கட்டுரைத்தான்.

அப்பொழுது அங்கு வந்த மணிகண்டன் எத்தனை புலிகள் வேண்டுமானலும் கொண்டுவருகிறேன் என்று காட்டிற்குப் புறப்பட்டான். அமைச்சன், அரசி முதலிய பொறாமையாளர் புலியினல் மணிகண்டன் மரணமெய்துவான் என எதிர்பார்த்தனர்.

மணிகண்டன் காட்டிற்குச் சென்ற போது அங்கே சாபத்தால் மகிஷியாய்த் திரிந்த எருமையோடு சண்டையிட்டான். ஏற்கெனவே மகிஷி கேட்ட வரத்தின்படி சிவனுக்கும் திருமாலுக்கும் பிறந்த மணிகண்டனல் அவள் மடிந்தாள். பின்னர், மணிகண்டன் புலியின் மேல் ஏறிக்கொண்டு பால் கொடுக்கும் சிறுத்தைகளைக் குட்டிகளுடன் உடன்கொண்டு பந்தள அரண்மனைக்கு வந்தனர். வஞ்சக அமைச்சன் புலியால் தாக்கப்பட்டு இறந்தான். மருத்துவனை மன்னித்து அனுப்பினர். எல்லாரும் மணிகண்டனின் தெய்விக ஆற்றலைக் கண்டு அஞ்சிப் போற்றி வணங்கினர்; பந்தள அரசனை விட்டுவிலகிச் சபரிமலையில் கோயில் கொள்ளும் தம் விருப்பம் உரைத்து, சபரிமலையில் ஐயப்பனய் அமர்ந்து அடியாருக்கு அருள்புரிந்து வரலானர்.

### மணிகண்டன் திருவிளையாடல்

மணிகண்டன் இலங்கைக்குக் கப்பல் வழியாய்ச் சென்று திரும்பினர் என்றும், புண்ணிய கோடி என்னும் பாண்டி நாட்டு மன்னன் மகளைக் கூடிக் கலந்து பிரிந்தார் என்றும் பல கதைகள் வழங்குகின்றன. ஆரியநாட்டு மங்கையை மணந்து கொண்டதாகவும் மற்றெரு வரலாறு கூறுகிறது.

சபரிமலைக்குப் பக்கத்தில் உள்ள கரிமலைப் பகுதியில் வாழ்ந்த கொள்ளைக் கூட்டத் தலைவனன உதயன் பந்தள நாட்டின்மேல்

படையெடுக்கத் திட்டமிட்டான். அந் நாட்டைக் கீழ்ப்படுத்துவதும், சபரிமலைக் கோவிலை அழிப்பதும் அவனுடைய நோக்கமாயிருந்தது. பந்தள நாட்டின்மேல் உதயன் படையெடுத்துச் செல்ல, ஐயப்பன் ஒரு சிறு குழந்தையாய்ப் பந்தள அரசனின்முன் சென்று, தான் உதயனை அழித்து வெற்றி கொள்வதாகவும், அதற்குக் கைம்மாருகச் சபரிமலையில் மகர விளக்குத் திருவிழாவை மன்னன் ஆண்டுதோறும் நடத்தவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டான். மன்னனும் மகிழ்வுடன் ஒப்புக்கொண்டான்.

பின், ஐயப்பன் உதயனையும் அவனுடைய படைகளையும் அழித்து வெற்றி கொண்டார். அது முதலாகப் பந்தள நாட்டு அரசன் ஆண்டு தோறும் சபரிமலையில் 'மகரவிளக்குத் திருவிழா'வைச் செய்து வரலாயினன். இன்றும் அம் மரபு போற்றப்படுகிறது. 'மகரவிளக்கு விழா' இன்று பக்தர்களின் வழிபாட்டிற்குரிய பெருவிழாவாகத் திகழ்ந்து வருகிறது.

## ஐயப்பன் துதிமாலை

ஐயப்பன் பாட்டுகள், துதிகள் மலையாளத்தில் மட்டுமன்றித் தமிழிலும் சில உள்ளன. வில்லுப் பாட்டாகவும் தமிழில் ஐயனுர் கதை உள்ளது. ஐயப்பன் தோத்திரப் பாக்களும் சில உள்ளன. பதிகமாய் அமைந்த 'ஐயப்பன் தோத்திரம்' என்னும் சிறு சுவடி ஒன்று டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகத்தில் காணப்படுகிறது. இது அத்தம் புலிக்கோடு என்னும் ஊரில் கோயில் கொண்டுள்ள ஐயப்பன் துதியாகும். இத் தோத்திரப் பதிகத்தின் தொடக்கப்பாடல் வருமாறு:

'நீதி யறியேன் நெறியறியேன்
நினதுபஞ்சாட் சரத்தை நித்தம்
ஓதி யறியேன் சிறியேனை
யுவந்தே காப்ப தெந்நாளோ
சோதிப் பொருளே சுட ரொளியே
துரியா தீதத் துட்பொருளே
ஆதி முதலே அரியானே ஐ-
யப்பா என்னை ஆள்வாயே.

பதிகத்தை முடிக்கும்போது வேண்டுதலாய்க் கவிஞர் பாடியுள்ள பாடல் வருமாறு:

'நித்த முன்றன் பாதமதை
நினைவில் கனவில் மறவாமல்
பத்தும் பதிகம் யான்பாடப்
பவுசு பாக்கியம் தந்தருள்வாய்
முத்தே பவள மரகதமே
மூலா தார முழுமுதலே
அத்தம் புலிக்கோட் டினில்வளரும்
ஐயப்பா வென்னை ஆள்வாயே!

பிற்சேர்க்கை: 2

## 1. மகாசாத்தய்யா பதிகம்

திருவழகு முடிதனில் அருகனைத் தரித்ததோர்
சிங்கார மான முகமும்
திலதமும் நவரத்ன மாணிக்க வொளியுமுன்
செவியும் வெண்முல்லை நகையும்
கருணையுடன் மார்புதனில் முத்துமா லைகளுடன்
கத்தூரி பரிம ளிப்பும்
கனகமய மானதோர் அரையிற் பீதாம்பரம்
கச்சைபொன் குச்சி தொங்கல்
அருளுடனே யென்றனிட மனமகிழ வேதினம்
அளித்திடுங் கரத்திற் சென்று
அலங்கார மாகவே சிலம்புடன் சதங்கையிட்
டாடிவரு பாத மழகும்
திருவடியும் வெள்ளானை மீதிலென் கண்முன்வரும்
திருநறுங் கொண்டை மலைவாழ்
தேவனே அறங்காக்கும் ஐயனே மெய்யனே
செல்வந் தந்தருள் தேவனே. 1

ஆகாச மாகப் பறந்திடும் புரவிகள்
அனேகங்கள் முன்னே நிற்க
ஆனையும் ஒட்டையும் நூறு நூறுயிரம்
அஞ்சலாய் வந்து நிற்க
ஏராள மாகவே படைமன்னர் ஒருகோடி
விருதுகள் பிடித்து நிற்க
வெற்றிபெறு மாலைகள் யுத்தரண வீரர்கள்
வெதும்பியொரு கோடி நிற்க
ஏகாந்த மாகவே தேவதுந் துபிகளும்
இன்பசங் கீத மோங்க
ஈரமதி யிரவியும் தீவர்த்தி போலவே
இருபக் கமும்மி லங்க
தேவனென வெள்ளானை மீதிலென் கண்முன்வரும்
திருநறுங் கொண்டை மலைவாழ்
தேவனே அறங்காக்கும் ஐயனே மெய்யனே
செல்வந் தந்தருள் தேவனே. 2

மத்தளங் கொட்டிவரும் பத்தர்கள் ஒருகோடி
மல்யுத் தவர்கள் கோடி,
வல்லயங் கத்திகள் பிடிமன்னர் ஒருகோடி
மகுடவர்த் தனர்கள் கோடி
பத்தியுடன் வேதபா ராயணம் பாடிவரும்
பரிவோர் கள்ஒரு கோடியாம்
பட்டாணி ராவுத்தர் புரவிமேல் ஒருகோடி
பணிவிடைகள் செய்வர் கோடி
எத்தனை வீணைகள் தும்புரு நாரதர்
எடுத்துவா சித்து வரவே
இரவினிற் பவனிவரும் உன்றனிட மகிமையை
என்றனுற் சொல்ல வசமோ
சித்ரமணி வெள்ளானை மீதிலென் கண்முன்வரும்
திருநறுங் கொண்டை மலைவாழ்
தேவனே அறங்காக்கும் ஐயனே மெய்யனே
செல்வந் தந்தருள் தேவனே. 3

சிங்கார மாயுனது குன்றதிர நித்தமும்
திருப்ப ணிகளே செய்யவும்
தெய்வபரி மளமான பாரிசா தம்மலர்
சிரசினில் தரித்து வரவும்
ஐங்காத மாகிலுங் கடுகிவந் தபிடேகம்
அர்ச்சனை புரிந்து வரவும்
அன்பினுல் நைவேத்தியஞ் செய்துனது பாதத்தை
அனுதினம் புகழ வைப்பாய்
கண்காண என்றன்முன் வந்துப்ர சன்னமாய்க்
கவலை நோய்தனை விலக்கிக்
கருணையா லென்மனது வேண்டும்வர மேயருள்
கர்த்தனே யரியர குமரனே
தெம்பான வெள்ளானை மீதிலென் கண்முன்வரும்
திருநறுங் கொண்டை மலைவாழ்
தேவனே அறங்காக்கும் ஐயனே மெய்யனே
செல்வந் தந்தருள் தேவனே. 4

மல்லிகை மாலைகொண் டுன்னுடைய பாதமே
மறவாமல் பூசை செய்வேன்
வஞ்சனை பில்லிமுதல் சூனிய மவையெலாம்
அகன்றி டவடித் தோட்டுவாய்
சொல்லரிய பாவங்கள் செய்திடினு மேயொரு
திரண மாய்ப்பறக் கடிப்பாய்
தொலையாத மாயையில் அலையாமல் உன்பாதம்
எனக்கு வரமே யருளுவாய்

கல்லுமன தாய்வரும் அடியவர்கள் நெஞ்சம்
கரைத்தடிமை கொள்ளுகின்ற
கர்த்தனே இப்பூமி லோகங்கள் தேசங்கள்
காவல் காத்தருளையனே
செல்வனெனும் வெள்ளானை மீதிலென் கண்முன்வரும்
திருநறுங் கொண்டை மலைவாழ்
தேவனே அறங்காக்கும் ஐயனே மெய்யனே
செல்வந் தந்தருள் தேவனே. 5

நித்தமை சுவர்யமாய் சுகமான வாழ்வதாய்
நீதியாய்த் தர்ம மீவாய்
நெஞ்சினில் யாவர்க்கும் உபகார குணமதாய்
நிசமான மொழி யுள்ளதாய்ப்
புத்தியு மீந்தென்னை இப்பூமி தன்னிலென்
பிறவி தனைவே ரறுத்துப்
பெருமையுட னேயிருந் தருளுனது பாதமே
போற்ற வேவர மருளுவாய்
பத்தியுட னடியவர்கள் வல்பிணி தொலைத்திடும்
பாத பூங்கடல் வண்ணனே
பாவங்க ளானவை அணுகாம லென்றனைப்
பட்சமாய்க் காத்த ருளுவாய்
சித்திரவெள் ளானை மீதிலென் கண்முன்வரும்
திருநறுங் கொண்டை மலைவாழ்
தேவனே அறங்காக்கும் ஐயனே மெய்யனே
செல்வந் தந்தருள் தேவனே. 6

தந்தைநீ தாயும்நீ சற்குரு தெய்வம்நீ
தானென்று நானிருக்கத்
தயவுவைத் தென்மனத் துயர்தீர்ப்ப தில்லையோ
சம்பத் தளிப்ப திலையோ
முந்தியசென் மத்தில்யான் பாவங்கள் செய்தேனோ
மூட னென்செய் தேனோ
மோசங்க ளானகொலை பாதகம் செய்தேனோ
மூடனுன் வதைசெய் தேனோ
எந்தவினை செய்யினும் தீர்த்துரட் சித்தென்னை
ஈடே றவர மருளுவாய்
எத்தேச காலமு மழியாத பதவியை
ஈந்தென் னையாட் கொள்ளுவாய்
சிந்தைமகிழ் வெள்ளானை மீதிலென் கண்முன்வரும்
திருநறுங் கொண்டை மலைவாழ்
தேவனே அறங்காக்கும் ஐயனே மெய்யனே
செல்வந் தந்தருள் தேவனே. 7

கடல்தனில் வாழ்கின்ற மச்சமதை யெண்ணினும்
கரை தனில் மணல் எண்ணினும்
கார்மேக மேபொழியும் மழைத்துளிகள் எண்ணினும்
கன்னி யர்மனங் காணினும்
நடமாடுங் காயம்விட் டுயிர்புவியில் பிறவிதனை
நானிருந் தெண்ண மாட்டேன்
நாதனே யென்பிறவி வேரறுத் துன்பாதம்
நல்கி டவர மருளுவாய்
படநாக மாமணிகள் ஆபரண மாகவே
பண்புடன் பூண்டிருக்கும்
பரமனே வரதனே சத்துருசங் காரனே
பராபர மகா தேவனே
திடமான வெள்ளானை மீதிலென் கண்முன்வரும்
திருநறுங் கொண்டை மலைவாழ்
தேவனே அறங்காக்கும் ஐயனே மெய்யனே
செல்வந் தந்தருள் தேவனே. 8

கையினு லுன்றனைத் தரிசனம் செய்யவே
கருமங் கள்விட் டோடுமே
கண்ணிலா மனிதர்கள் உன்னுடைய சன்னிதி
காண வேகண் விளங்கும்
பொய்யனுய்க் கால்கை யில்லாத மூடனுய்
வாழ்ந்துபின் னந்தி யத்தில்
புண்ணிய மவனுக்குவந் தெய்தியுன் பாதமலர்
புகழால் நிறைந்த வரமே
அய்யனே மெய்யனே ஆதியே நீதியே
அனுதினந் துதிசெய் வித்து
அன்பினு லுன்றனிட கிருபையால் சொர்க்கத்தில்
அன்பர்க்கு வாழ்வ ளித்தாய்
செய்யனே வெள்ளானை மீதிலென் கண்முன்வரும்
திருநறுங் கொண்டை மலைவாழ்
தேவனே அறங்காக்கும் ஐயனே மெய்யனே
செல்வந் தந்தருள் தேவனே. 9

என்னுடைய மனத்தினில் நீயிருந் தருள்கின்ற
இசையான பாடல் பத்தும்
இன்பமுட னேயிரு யேமசா மத்திலும்
எதிராளி வந்த போதும்
பின்னுமொரு நித்திரைகள் தன்னிலும் இப்பாடல்
போற்றித் துதித்த வர்க்குப்
பில்லிமுதல் சூனியம் அணுகாமல் விட்டோடிப்
பெரியவர்க ளாகி வாழ்வார்

பன்னுதமி ழாலுனைப் பாடிடும் அடியவர்கள்
பாவங் கள்தனை விலக்கிப்
பதவிதனில் மேலான நற்கதி யாகவே
பண்புட னளித்த ருளுவீர்
தென்னல்தனில் வெள்ளானை மீதிலென் கண்முன்வரும்
திருநறுங் கொண்டை மலைவாழ்
தேவனே அறங்காக்கும் ஐயனே மெய்யனே
செல்வந் தந்தருள் தேவனே. 10

## 2. மகாசாத்தய்யா கட்டளைக் கலித்துறை

அடியார்க் கெளியன் அறங்காத்த தீர னருகனிட
படிகாவ லாதிபா வுன்னைநா னிப்போதன் பாய்மனத்தால்
வடிவான தீரனை கோலா கலனை வழித்துணைக்குத்
தடியா யுதனை அனுப்புமை யாமகா சாத்தையனே 1

அண்டாத பூத பிசாசுகள் சூன்ய மநேக மெல்லாம்
துண்டாடி ஓட்டி அடித்துத் துரத்தியனல் சுட்டெரிக்கக்
கொண்டாட மானிடர் செல்வந் தழைக்க வரங்கொடுக்குஞ்
செண்டாயுதா திருநறுங் கொண்டை மேவிய சேவகனே. 2

---

குறிப்பு: பிற்சேர்க்கை 2-ல் தரப்பட்டுள்ள 'மகா சாத்தய்யா பதிகம்,' 'மகா சாத்தய்யா கட்டளைக் கலித்துறை என்னும் இரண்டும், சென்னையில் உள்ள 'ஜைன கிரந்த நிலையம்' வெளியிட்டுள்ள, 'திருநறுங்கொண்டைத் தோத்திரத் திரட்டி'லிருந்து எடுக்கப்பட்டனவாகும்.

# VOCABULARY AND DIALOGUE*

## (English and Malabar)

*Edited by :*

Dr. N. SANJEEVI, M.A., M.Litt., Ph.D.,
Dip. in Anthropology, Dip. in Pol. & Pub. Admn.,
Professor of Tamil, University of Madras.

&

V. JAYADEVAN, B.Sc., M.A., Certificate in Linguistics,
Lecturer in Tamil, University of Madras.

## CRITICAL NOTES

* In the previous issue, Vocabulary and Dialogue were published. Comprehensive critical notes on this work are included in this issue.

## ஆராய்ச்சிக் குறிப்புகள்

1. எட்டின் தலைப்பில் தமிழைக் குறிக்க 'மலபார்' என்னும் பெயர் பயன்படுத்தப்பட்டுள்ளது. எனவே, இது ஐரோப்பியர் வருகையினை அடுத்துத் தோன்றியது எனத் துணியலாம்.

2. இது, ஆங்கிலேயர் தமிழரோடு வாழ நேர்ந்த சூழலில் அன்றாட வாழ்க்கை நடைமுறைகளுக்கு உறுதுணையாக உருவாக்கப்பட்ட சொல்/சொற்றொடர் பொருள் விளக்கம் ஆகும்; அகராதியன்று.

3. இதன் தொடக்கத்தே உள்ள ஆங்கில நெடுங்கணக்கு 'கதையின் வரலாறு' எனக் குறிக்கப்பட்டுள்ளது. 'கதை' என்பதற்கு ஆசிரியர் 'நெடுங்கணக்கு' என்னும் பொருளை நினைத்திருப்பது கருதத்தக்கது.

4. ஆங்கில நெடுங்கணக்கின் இருவகை வடிவங்கள் மட்டும் சுட்டப்பட்டு, ஒவ்வோர் எழுத்தின் கீழும் ஆங்கில ஒலிகட்கு நிகரான தமிழொலிகளைத் தர முயலப்பட்டுள்ள முயற்சி கருதத்தக்கது.

## CRITICAL NOTES

1. Tamil has been denoted by the word 'Malabar' in the title of this work and it suggests to the conclusion that it might have been compiled sometime after the advent of Europeans.

2. It is not a dictionary, but a vocabulorum compiled in the circumstances in which the English had to live along with the Tamils in order to be of help in the daily life.

3. It is to be noted that the English alphabet in the beginning of this work is termed as *kataiyiṉ varalāṟū* 'history of the story', where *katai* means the alphabet.

4. The English alphabet has been given in two forms and it is noteworthy that an attempt has been made to give equivalent sounds in Tamil script to every English letter.

5. ஆங்கில நெடுங்கணக்கை ஒட்டி ஏட்டின் வலப்புறத்தே பின்வருமாறு சிதைவுண்ட பாடலொன்று உள்ளது.

"......................
வகண்டி தானந்தமெனு....
வெள்ள மெனக் கையா...
வெளிப்படுத்த வேண்டா..."

இக்குறைப் பாடல் குறைவிலா நிறைவுக்கு நிகழ்த்திய கடவுள் வாழ்த்து போலும்!

5. At the beginning of this work, there is an incomplete, ant-eaten poem by the side of the alphabet, which reads as follows: "...................... vakaṇṭi tāṉantameṉu......... veḷḷa meṉak kaiyā......veḷippaṭutta vēṇṭā........." This incomplete poem seems to be the invocation to the Muse.

6. இதன் முற்பகுதி (1—874) சொற்றொகைப் பகுதியாகும்; பிற்பகுதி (875—1250) உரையாடல் பகுதியாகும்.

6. The first part (1—874) of this work is of vocabulary and the latter (875—1250) is of dialogue.

7. பேச்சுத் தமிழ்/ஐரோப்பியக் கிறித்தவர் ஆங்கிலம் குறித்த மொழியியல் ஆய்வுக்கு இந்நூல் பயன்படத் தக்கது. ஆதலின், இப்பதிப்பில் இரு மொழிகளிலும் மலிந்துள்ள பிழைகள் களையப்படாமல் மூலத்தில் உள்ளவாறே பதிப்பிக்கப்பட்டுள்ளன.

7. It is useful for the linguistic analysis of the spoken Tamil/European Christian English/Anglo Tamilian dialects and hence it has been edited without correcting the errors in both the languages and published as found in the manuscript.

8. பொருள் சுட்டல் ஒன்றைத் தவிர இது அகராதிக் கூறுகள் எவற்றையும் பெறவில்லை.

8. It does not possess the lexicographical features other than the citation of meaning.

9. சொற்கள் அமைப்பு முறைக்குப் பெரிதும் பொருளியையே அடிப்படையாய் உள்ளது.

9. The arrangement of words is mainly based on the subject matter.

10. இதன்கண் வானம் (1-16, 41), திக்குகள் (17-24), நீர் (25, 28-35), நெருப்பு (26, 59-60), மலை (36-37), மண் (38-40), மழை (42-50), காற்று (27-58), மனிதன் (61-72), உடலுறுப்புகள் (73-114), நோய்கள் (115-121), உறவு முறைப்

10. The first part, vocabulary includes sky (1-16, 41), directions (17-24), water (25, 28-35), fire (26,59-60), mountain (36-37), mud (38-40), rain (42-50), wind (27-58), man (61-72), physical parts (73-114), diseases (115-121),

பெயர்கள் (122-163), பிறப்பு (183), இறப்பு (184-185), ஐரோப்பிய உணவு வகை (186-256), குடி வகை (257-269; 537-539), உடை வகை (270-296), அணி வகை (297-333), புனைவுக்குரிய பொருள்கள் (335-341), வீடு (352), வீட்டுப் பொருள்கள் (334, 342-472), நகரம் (473-479; 520-529), மாதாக்கோயில் (480-505), வணிகம் (506-519 ; 679-690), வழக்கு மன்றம் (530-535), ஆட்சித்துறை (543-571), பல்வகைத் தொழில்கள் (572-606), கலை (607-615), வண்ணங்கள் (616-624), கல்வி (625-659), கருவிகள் (660-678), காய்கனிகள் (691-693; 698-709), பூ (694-697), விலங்கு (710-741; 762-786), பறவை (742-761), மணிகள் (787-792), உலோகங்கள் (793-802), காலம் (803-815), நாள் (817-823), மாதம் (816, 824-836), எண்கள் (837-874) ஆகிய பொருள்கள் சொற்றொகைப் பகுதியில் உள்ளன. முதலாளி—பணியாளர் (875-930; 985-1250), முதலாளி—வணிகர் (931-969), பணியாளர்—வணிகர் (970-984) உரையாடல்கள் உரையாடல் பகுதியில் உள்ளன.

Kinship terms (122-163), birth (183), death (184-185), Europeon food (186-256), drinks (257-269 ; 537-539), dress (270 296), jewels (297-333),, things used for dressing (335-341), house (352), household articles (334, 342-472), city (473-479, 520—529), Church (480-505), business (506-519, 679-690), court of law (530-535), administrative terms (543-571), professions (572-606), art (607-615), colours (616-624), education (625-659), instruments (660-678), vegetables and fruits (691-693, 698-709), flora (694-697), fauna (710-741, 762-786), gems (787-792), metals (793-802), time (803-815), days (817-823), months (816, 824-836), and numerals (837-874). The second part, diologue includes conversation between the master—servant (875-930, 985-1250), master—merchant (931-969) and servant—master 970-984).

11. கிறித்தவச் சொற்கள் சிறப்பாக இடம் பெற்றுள்ளன.

11. Words related to Christianity are conspicuous.

(164-167, 480—482, 488, 489, 491, 492, 505, 899, 1116)

12. வடமொழிச் செல்வாக்கு மிகுதியும் உள்ளது.

12. Sanskrit influence is also very conspicuous.

(4-9, 13-16, 41, 44, 45, 66, 73, 74, 77, 95, 110, 131, 132, 145, 159, 172-174, 182, 183, 188, 191, 226, 228, 286, 311, 339,

357, 494-498, 503-505, 518, 543, 602, 616, 626, 627, 651, 652, 774, 815, 1107, 1146).

13. சில சொற்களுக்குத் தமிழில் ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்கள் விளக்கத்திற்காகத் தரப்பட்டுள்ளன.

13. For some words, more than one meaning has been given in Tamil for the sake of clarity.

(25, 37, 38, 46, 49, 74, 77, 88, 95, 116, 168, 172, 174, 176, 245, 248, 280, 328, 331, 336, 365, 369, 397, 406, 413, 427, 429, 440, 481, 496, 497, 501, 504, 505, 521, 533, 536, 540, 627, 631, 639, 682, 686, 695, 701, 718, 762, 803)

14. விளக்கத்திற்காகச் சில இடங்களில் ஒரு பொருளைக் குறிக்க ஒன்றுக்கும் மேற் பட்ட ஆங்கிலப் பொருள்கள் ஆளப்பட்டுள்ளன.

14. More than one meaning in English has also been given in explanation for the sake of clarity.

(36, 38, 48, 59, 88, 113, 116, 158, 164, 182, 186, 222, 224, 271, 278, 314, 419, 439, 606, 629, 657, 712, 724, 734, 786, 799)

15. சில ஆங்கிலச் சொற்களுக்கு உரிய தமிழ்ப் பொருளைச் சுட்டாமல் ஆங்கிலச் சொல்லை அப்படியே தமிழாக்கிக் குறிக் கப் பட்டுள்ளமை கருதத்தக் கது.

15. It is noteworthy that for some English words, equivalents in Tamil are not given, but they are Tamilised.

(263, 300, 301, 303, 336, 421, 422, 424, 425, 436, 462, 464, 465, 472, 531, 532, 595-597, 632, 636, 643, 692, 1263)

16. ஆங்கிலக் கூட்டுச் சொற்கள் சிலவும் இடம் பெற்றுள்ளன.

16. There are also found some compound words in English.

(43, 78, 95, 96, 156, 204-206, 211, 212, 218, 236, 237, 256, 320, 321, 359, 360, 423, 425)

17. ஆங்கிலத் தொழிற் பெயர் கள் சில விளக்கம் பெற்றுள் ளன.

17. Some verbal noun forms in English have also been explained.

(116, 164, 609-613, 627)

18. ஆங்கிலப் பன்மைப் பெயர்கள் தேவையின்றித் தரப்பட்டுள்ளன.

18. English plurals have been explained unnecessarily.

(5, 33, 65, 82, 93, 96, 98, 107, 109, 113, 179, 189, 201, 231, 232, 254, 271, 282, 302, 330, 331, 361, 376, 686, 696, 698, 824)

19. ஆங்கிலத்திலும் எழுத்துப் பிழைகள் மலிந்துள்ளன.

19. Spelling errors in English are plenty.

(31, 69, 116, 199, 232, 246, 256, 262, 285, 286, 294, 295, 315, 324, 361, 395, 399, 401, 414, 445, 535, 604, 616, 673, 734, 769, 776, 856, 864, 903, 928, 1000, 1016, 1020, 1045, 1058, 1089, 1153, 1165, 1195, 1214, 1224, 1229, 1236, 1238, 1240)

20. தமிழிலும் எழுத்துப் பிழைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

20. In Tamil also plenty of spelling errors are noticed.

(67, 174, 175, 191, 193-196, 210, 231, 239, 240, 244, 247 248, 250, 261, 264, 265, 278, 302, 322, 324, 334, 348, 377, 378, 389, 391, 401, 407, 413, 445, 475, 486, 489, 490, 513, 529, 530, 544, 545, 576, 586, 640, 644, 684, 800, 888, 890, 902, 917, 929, 941, 951, 963, 973, 974, 977, 991, 993, 1015, 1042, 1055-1077, 1087, 1088, 1126, 1155, 1159, 1168, 1180, 1189, 1191, 1233)

21. உரையாடல் பகுதி முழுமையும் பேச்சுவழக்கே உள்ளது. மற்ற பகுதியிலும் பேச்சுவழக்கு / கொச்சைவழக்கு நடையே இடம்பெற்றுள்ளன.

21. In the whole of 'dialogue', the spoken form is noticed and also in the rest, thespoken/colloquial style is present.

(14-16, 46, 57, 59, 67, 70, 81, 82, 88, 90, 94, 96, 107, 109, 114, 116, 146, 149, 154, 155, 158-161, 163, 169, 185, 186, 193, 194, 200, 202, 214, 215, 218, 220, 234, 242, 243, 257, 270-273, 276, 277, 279, 280, 283, 295, 299, 302, 303, 306, 311, 319, 327, 336, 341, 348, 351, 363, 365, 388, 389, 391, 393, 397, 399, 426, 428, 440-442, 448, 450, 460, 464-466, 473, 503, 516, 523, 530, 536, 541, 545, 559, 557-550, 569, 570, 582, 590, 594, 595, 602, 616, 628, 629, 637, 654, 655, 659, 669, 672-674, 684, 688, 601, 734, 758, 783, 784, 787, 807, 810, 816, 817, 829, 834, 851, 899, 1205)

22. தவறான பொருள்களும் தரப்பட்டுள்ளன.

22. Wrong meanings have also, been given.

(31, 34, 49, 53, 119, 157, 159, 170, 173, 176, 213, 231, 233, 245, 250, 259, 260, 378, 387, 398, 436, 455, 457, 458, 468, 533, 623, 643, 659, 685, 686, 698, 714, 805, 809, 961, 1248)

23. பொருள்கள் போதுமான அளவு சுட்டப்படவில்லை.

23. Explanation of meaning is inadequate.

(10, 27, 36, 44, 48, 63, 66, 67, 116, 121, 134-137, 141, 149, 181-184, 196-199, 223, 224, 255, 258, 263, 265, 269, 288, 290, 327, 339, 377, 379, 396, 407, 418, 442, 457, 458, 460, 485, 502, 515, 516, 525, 526, 530, 538, 715-719, 1100, 1105, 1111, 1134)

24. சில பகுதிகளில் உள்ள பொருளை நோக்கிச் சிறு தலைப்புகள் போலத் தரப்பட்டுள்ளன.

24. Based on the subject matter in some places, small headings have been given.

(1, 61, 270, 473, 875, 904, 931)

25. 'காரன்' என்னும் சொல் விகுதியைக் கொண்டு இறும் சொற்கள் பல இடம் பெற்றுள்ளன ; சில இயல்பாயும் சில புதுமையாய் ஆக்கப் பெற்றனவாயும் உள்ளன.

25. Many words with 'kāra<u>n</u>' suffix have been given, of which a few are natural and a few are novel being coined newly.

(181, 554, 560, 561, 563, 572, 580, 590, 592-594, 1092)

26. ஆங்கில மாதங்களுக்கு இணையாகத் தமிழ் மாதங்கள் தர முயலப்பட்டுள்ள முயற்சி பாராட்டத் தக்கது

26. An attempt is made to give the names of Tamil months equivalent to that of English and it is worth praising.

(825—836)

27. வாரத்தின் நாள்களைக் குறிக்கும் பெயர்களுள் 'Saturday- சனிக்கிழமை' விடுபட்டுள்ளது.

27. Among the week days mentioned in this work, Saturday is found to be missing.

(818—823)

இலக்கணத்தே வருமிரட்டைக் கிளவி போல
இணைந்திருந்தோம்! பிரிந்திருந்தால் பொருளே இல்லை!
(பக். 91)

கவிஞர் தமிழன்பன் கவிதைகள் ஒவ்வொரு தமிழ் மகனும் படித்துச் சுவைக்க வேண்டியவை; பிறமொழிகளிலும் மொழியாக்கம் செய்யப்படவேண்டியவை.

[தமிழன்பன் கவிதைகள்: ஆசிரியர், கவிஞர் தமிழன்பன், தொகுத்தவர்: சு. செல்லப்பன், மங்கள நூலகம், சென்னை-34; முதற் பதிப்பு 1970, பக். 32+192, ரூ. 6-00.]

## புதுத்தமிழ் முதல்வர்கள்

பல துறைகளில் மேன்மேலும் வளர்ந்துவரும் நாம், அவ்வப் பொழுது கடந்த கால இலக்கியங்களைத் தெரிந்துகொள்வது நலம். இத் துறையில் டாக்டர் சாலை இளந்திரையன் அவர்கள் உழைத்து வருவது பாராட்டத்தக்கது. முன்னே (1969) 'புதுத்தமிழ் முன்னோடிகள்' என்னும் நூலில், தமிழ் முதல் நாவலாகிய பிரதாப முதலியார் சரித்திரம் (1876) எழுதிய மாயூரம் ச. வேதநாயம் பிள்ளையையும், முதன்முதல் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தை நிலைபெறச் செய்த 'மங்கையர்க்கரசியின் காதல்' (1927) சிறுகதைத் தொகுதியைத் தந்த தேசபக்தர் வ. வே. சு. ஐயரையும், முதன்முதல் முறையான வாழ்க்கை வரலாற்றை—மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரத்தை (1933, 1934) வழங்கிய டாக்டர் உ. வே. சாமிநாதையரையும், தமிழ்ப் பத்திரிகை முதல்வராகிய திரு. வி. கலியாணசுந்தரரையும் அறிமுகப்படுத்தினர் டாக்டர் சாலை. பின்னே 'புதுத்தமிழ் முதல்வர்கள்' (1972) என்னும் நூலில், முதல் கட்டுரை இலக்கியமாகிய விநோத ரச மஞ்சரி (1876) எழுதிய அட்டாவதானம் வீராசாமி செட்டியாரையும், முதல் நாடகமாகிய பிரதாபசந்திர விலாசம் (1877) தந்த ப.வ. இராமசாமி ராஜுவையும், முதல் கலைக்களஞ்சியமாகிய அபிதான சிந்தாமணியை (1910) வழங்கிய ஆ. சிங்காரவேலு முதலியாரையும், முதல் திறனாய்வாளராக விளங்கிய திருமணம் செல்வக்கேசவராய முதலியாரையும் அறிமுகப்படுத்துவதைக் காணலாம்.

'புதுத்தமிழ் முதல்வர்கள்' என்னும் நூலில், நூலாசிரியர் தாம் மேற்கூறிய இரு நூல்களை வெளியிட்டதற்கான சூழலை 'வயிரச் சுரங்கம்' என்பதில் எடுத்துரைக்கிறார். நூலில் காணப்படும் கட்டுரைகள், கட்டுரைக்கலை, நாடகக்கலை, கலைக்களஞ்சியம், திறனாய்வுக் கலை ஆகிய நான்கு. இத்துறை அறிஞர்களைப் பற்றி அவ்வக் கால

அறிஞர்களோடு ஒப்புநோக்கி இந்தத் துறை அறிஞர் எங்ஙிலையில் சிறந்து விளங்குகிருர் என்பது ஒவ்வொரு கட்டுரையிலும் சுட்டப் பட்டுள்ளது. பின்னர் இவருடைய தலைமைப் படைப்பாக விளங்கும் நூலின் தோற்றத்தையும் நுவலும் செய்திகளை எடுத்துக்காட்டுவதும் நூலின் உயர்வைச் சுட்டுவதும் ஆங்காங்கே தம் கருத்துகளை எடுத் துரைப்பதும் டாக்டர் சாலையின் இயல்புகளாம். அவ்வக் கட்டுரை இறுதியில் இங்குக் கட்டுரைகளாக விளங்கும் நூலின் தரத்தை விருப்பு வெறுப்பின்றி மதிப்பிடுவதும் காணத்தக்கது.

இந் நூலைப் படிப்பதன் மூலம் இதில் கூறப்பட்ட நூல்களைப் படிப்ப தற்கு ஒரு வாய்ப்பு ஏற்படுகிறது. ஏனெனில், எந்த நூலையும் தாமே எடுத்துப் படிப்பது என்பது முயற்கொம்புதான். பிறர் வாயிலாகக் கேள்விப்பட்டோ, நூல்கள் வாயிலாக அறிந்தோ நூல்களைப் படிப்பது தான் இலக்கிய உலகில் பெரும்பான்மை ஆகும். எனவே, டாக்டர் சாலை இளந்திரையனின் முயற்சி ஓங்குக!

[புதுத்தமிழ் முதல்வர்கள், டாக்டர் சாலை இளந்திரையன், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5; முதற் பதிப்பு 1972, பக். 176, ரூ. 3-50.]

—டாக்டர் அ. நாகலிங்கம்.

## கலைக்கூத்தன் கவிதைகள்

கவிதையில், அழகுணர்ச்சியும் சொல்லாழமும் கருத்தின் நுண்மை யும் தேர்ந்த பட்டறிவும் கவிஞனின் புலமையும் ஒருசேர மிளிர வேண்டும். இவற்றையே சங்க இலக்கியச் சான்றோர் தம் இலக்கியக் கொள்கைகளில் அடிப்படையானவைகளாகக் கொண்டிருந்தனர் என்பதை,

"அம் சொல் நுண் தேர்ச்சிப் புலவர்" (புறம். 235)

என்னும் தொடரால் அறிகின்றோம். இவையனைத்தும் கவிஞர் கலைக்கூத்தன் அவர்களின் கவிதைகளில் ஒருசேர விளங்கவில்லை யாயினும், ஆங்காங்கே மிளிர்கின்ற பாங்கைக் காணலாம்.

"மண்ணுள அனைவ ருக்கும்
மானமும் மறைப்ப தற்கு
எண்ணிலாத் துணிகள் ஈந்த
எழிற்பஞ் சாலைக் கூட்டம்
விண்ணுள நிர்வா ணத்தை
விரைந்துயர் பார்த்து நாணித்
தன்னுள புகையால் ஆடை
தருதல் பார்! விண் வெளிக்கே!" (பக். 181)

39. பின்வரும் ஊர்ப்பெயர்கள் உரையாடல் பகுதியில் இடம் பெற்றுள்ளன :
1.சாந்தோம்-மயிலாப்பூர் ; 2. செட்ருஸ் - சதுரங்கப்பட்டணம். இதனால் ஆசிரியர் சென்னைத் தொடர்பு அதிகமுடையவராய் இருத்தல் கூடும் என்று தெரிகிறது.

39. The following place names have been mentioned in the part of ' dialogue ' :
1. Santhome ;
2. Sadras.
This suggests that the author may be one who has much contact with Madras.

40. உரையாடல் பகுதியில் வேலைக்காரர் பற்றிய செய்திகள் அதிகம் இருப்பது கவனிக்கத்தக்கது; இவ்வேடு ஐரோப்பியர், தமிழர்களிடம் தமிழில் பேசப் பயன்படுவதற்காக உருவாக்கப் பட்டிருக்கக் கூடும்.

40. In the part of dialogue, major part deals with the servant. Hence this work might have been compiled to enable Europeans to move with the Tamils using the Tamil medium.

## பொருளடக்கம்

# புனிதநெறி

மனித வாழ்வு பயனுற அமையப் புனிதநெறி ஒன்றே புகலிட மாகும். எல்லா நிலையிலும் அமைதி வாழ்வை ஒருவனுக்கு அளிக்க ஏதுவாக இருப்பது இறைநெறி. எனவே, 'பரமனைப் போற்றி வழி படுவதே புனிதநெறி' என்பதனை மையமாகக் கொண்டு அமைந்த திருவருள் விளக்க நூலே தவத்திரு குன்றக்குடி அடிகளார் தொகுத் தளித்துள்ள புனிதநெறி.

இப் புனிதநெறித் தொகுதியில் 'உழுத சாலிலே உழுதல்' முதல் 'துணையின் இலக்கணம்' வரை 34 பொருள்கள் விளக்கப்பட்டுள்ளன. இவற்றுள், நடுநாயகமாக வைக்கப்பெற்ற புனிதநெறி என்னும் சிறப்புரையே இந் நூலின் பெயராகத் தரப்பட்டுள்ளது. இதன் இருதலையும் உள்ள உரைகளும் புனிதநெறி காட்டுவனவே என்பது இதன் குறிப்பாகும்.

இறைப்பற்று வளர, செம்மை நெறி தழைக்க, தொண்டுள்ளம் மலர ஏற்ற பல அறிவுரைக் கருத்துகளும் தத்துவ விளக்கங்களும் இதில் இடம்பெற்றுள்ளன. இக்கால இளைஞரும் புரிந்துகொள்ளும் வகையில் இனிய எளிய செந்தமிழ் நடையிலே அடிகளாரின் உரைகள் அழகுற அமைந்துள்ளன.

இன்றைய திருக்கோயில் நடைமுறைகளையும், சமயமும் பக்தி நெறியும் தளர்ந்து காணும் போக்குகளையும் அடிகளார் நயமுறச் சுட்டி யுள்ளார்கள். மற்றும் கற்பார் வீறுகொண்டு எழுவதற்கான அறிவுரைகள், ஊக்கவுரைகள் பல தந்துள்ளமையால் இப் புனிதநெறி அறிவுரைக் களஞ்சியமாகவும் திகழ்கிறது எனலாம்.

இப் புனிதநெறித் தொகுப்பில் உய்யும் நெறி, வாழ்க்கை நெறி, அருள்நெறி, இனிய நெறிகளையும் தனித்தனிப் பகுதிகளில் தெளிவு படுத்தியுள்ளார்கள். 'கடமை செய், கடவுளை வழிபடு' என்பதே இந் நூற் கட்டுரைகளின் உயிர்நிலையாய் அமைந்த பொருளாகும்.

திருமூலர் திருமந்திரம், தேவாரத் திருமுறைப் பாடல்கள் சில வற்றை இன்றைய சமூகத்திற்கு எழுச்சியூட்டும் வகையில் எடுத்து விளக்கம் தரும் பாங்கு எல்லாருடைய சிந்தனைக்கும் நல்விருந்தாகும். சமுதாயம் சிறக்கவும், மக்களின் வாழ்வு இறைவாழ்வாய், கடமை

தவரு வாழ்வாய் அமையவும் இந்நூலை ஒவ்வொருவரும் படித்தல் பயன்பாடுடையதாகும். இந்த வகையில் இன்றைய உலகத்திற்குப் புதுநெறி வகுத்துத் தந்துள்ள அடிகளாரின் கருணை உள்ளத்தைப் போற்றுவோம். அடிகளாரின் உரைகளைத் தொகுத்துத் தந்துள்ள கலைவாணி புத்தகாலயத்தாரின் தொண்டு பாராட்டற்பாலது. கவி யோகி சுத்தானந்த பாரதியார் அவர்களும், டாக்டர் மெ. சுந்தரம் அவர்களும் முறையே இந் நூலுக்கு மதிப்புரையும், அணிந்துரையும் எழுதியுள்ளார்கள்.

[புனிதநெறி : தவத்திரு குன்றக்குடி அடிகளார், கலைவாணி பதிப்பகம், சென்னை-17; பக்கம் 120, விலை ரூ. 3-50.]

—மு. சண்முகம் பிள்ளை

## குலோத்துங்கன் கவிதைகள்

டாக்டர் வா. செ. குழந்தைசாமி அவர்கள் தாம் அவ்வப்பொழுது, 'குலோத்துங்கன்' என்ற புனைபெயரில் பல இதழ்களில் கவிதைகள் எழுதினர். அவற்றைத் தொகுத்ததுடன் மேலும் சில கவிதைகளைப் புதியதாகச் சேர்த்து, 'குலோத்துங்கன் கவிதைகள்' என்னும் பெயரில் நூலாக வெளியிட்டுள்ளார். இக் கவிதைத் தொகுப்பு எண்ணங்கள், தமிழ், காதல் என்னும் மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது. நூலின் தொடக்கத்தில் 'அறிமுக'மும், 'படைய'லும் படைத்துள்ளார் கவிஞர் குழந்தைசாமி. இத்தொகுப்பில் 47 தலைப்புகளில் 127 கவிதைகள் உள்ளன. இவற்றில் அறிஞர் அண்ணா பெரியார் ஈ. வே. ரா., புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் ஆகியவர்களைப் பற்றிய கவிதைகளையும் காணலாம்.

எந்திரங்களோடு வாழும் பொறியியல் வல்லுநருக்கும் கவி பாடும் ஆற்றல் உள்ளது என்பதைக் காட்டுகிறது இந்நூல். வாயில் திறக்கட்டும், பொம்மையா நான், கோடி கலைகள் பிதற்றுகிருய், வாழ்ந்தறியோம், செந்தமிழங்கில்லையெனில் திரும்புவாயோ, பெரியார் ஏன் சிலையாய் நின்ருர், வழிசெய்தீரோ, சிதைவதுண்டோ, விடு கண்டோம் போன்ற கவிதைத் தலைப்புகளே கவிதையைப் படிக்க நம்மைத் தூண்டுகின்றன. சின்ன வரங்கேட்கத் தெரியாத என் நெஞ்சு (பக். 11), வரம்பெனும் சிறு சொல்லில் மானிடம் தோல்வி ஒப்புமோ (பக். 18), நின் செந்தமிழங்கில்லையெனில் திரும்புவாயோ (பக். 43) போன்ற பகுதிகள் நம்மைப் பெரிதும் கவர்கின்றன. கவிதைகளில் ஆங்காங்கே உணர்ச்சிக் குறியீடுகள் இல்லாதது குறையாகவே தெரிகிறது. கவிஞரின் சிந்தனை ஆற்றலே இந்நூலில் மேலோங்கி, சிறந்த கவிதைத் தொகுப்பாக விளங்குகிறது. பாடுபட்டுழைக்கும் பாட்டாளி அவ்வுழைப்பின் பயனைப் பெறவில்லை என்னும் பகுதி நம்மைச் சிந்திக்க வைக்கிறது (பக். 37).

'வீடுகட்டி நகரெடுத்தோம் குடிசை யில்லை;
விளைத்திட்டோம் கூழில்லை; வியர்வை சிந்திக்
காடுவெட்டிப் பருத்திதந்தோம் கந்தை யில்லை;
கைசலிக்கக் கல்லுடைத்து மெய்யும் நோவப்
பாடுபட்டுப் பள்ளிசெய்தோம் எங்கள் மக்கள்
பயின்றதில்லை; வாழ்நாளில் ஒருநா ளேனும்
ஏடுதொட்டுக் கண்டதில்லை; எல்லாம் செய்தோம்
ஏதுமற்றோம்; வாழ்ந்தறியோம்; ஏழை நாங்கள்!'

இதற்குச் சிலம்புச்செல்வர் ம. பொ. சி. அணிந்துரை நல்கியுள்ளார்.

[குலோத்துங்கன் கவிதைகள், கலைவாணி புத்தகாலயம், சென்னை-17; முதற் பதிப்பு 1970, பக். 92, ரூ. 2-50]

## தற்காலத் தமிழ் இலக்கியம்

தமிழ்நாட்டில் கல்வி கற்று, அயல்நாடுகளுக்குச் சென்று தமிழ்ப் பணி புரிந்து வருவோர் சிலர். அவர்களுள் ஒருவர் மலேசியப் பல்கலைக் கழக இந்தியப் பகுதியில் பணியாற்றும் டாக்டர் இரா. தண்டாயுதம். இவர் எழுதிய நூலே 'தற்காலத் தமிழ் இலக்கியம்.'

இவர் மலேசிய வானொலியில், 'இன்றைய தமிழிலக்கியம்' என்னும் உரைத்தொடரில் ஆற்றிய உரைகளை மையமாகக் கொண்டு தமிழ் உரைநடை வளர்ச்சி, தமிழ் நாவல்கள், தமிழ்ச் சிறுகதைகள், தமிழ்க் கவிதை, தமிழ் நாடகங்கள், தமிழில் திறனாய்வு ஆகிய ஆறு கட்டுரைகளை எழுதியுள்ளார். மேலும், மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கக் கருத்தரங்கில் படித்த 'மலேசியத் தமிழிலக்கியம்' என்பதுடன் தாமே இந்நூலுக்கெனத் தனியே 'இலங்கைத் தமிழிலக்கியம்' என்னும் கட்டுரையையும் இணைத்துள்ளார். இவை யாவும் தற்காலத் தமிழ் இலக்கிய நூலின் முதற் பகுதியில் உள்ளன. இரண்டாம் பகுதியில் காணப்படும் 'நூல் உலக'க் கட்டுரைகள் மலேசிய வானொலியில், 'நூல் உலகம்' உரைத்தொடரில் ஆற்றிய 12 உரைகளின் அடிப்படையில் எழுதப்பட்ட திறனாய்வு ஆகும்.

முதற் பகுதியில், தமிழ் உரைநடை வளர்ச்சி, தமிழ் நாவல்கள், தமிழ்ச் சிறுகதைகள், தமிழ்க் கவிதை, தமிழ் நாடகங்கள், தமிழில் திறனாய்வு என்னும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சி நிலைகளைச் சுருங்கக்கூறி விளங்க வைக்கின்றன. இலங்கை, மலேசியத் தமிழிலக்கியக் கட்டுரைகள், அந்தந்தப் பகுதியில் தமிழிலக்கியம் கவிதை, சிறுகதை, நாவல், நாடகம் முதலிய துறைகளில் பெற்று வரும் வளர்நிலைகளைக் கோடிட்டுக்காட்டுகின்றன. இம் முதற் பகுதி இலக்கிய வரலாறாகக் காட்சியளிக்கிறது.

இரண்டாம் பகுதியாகிய 'நூல் உலகம்,' தமிழ்நாடு, இலங்கை, மலேசியா நாடுகளிலிருந்து வெளிவந்த சிறுகதை, நாவல், கவிதை, நாடகம், கட்டுரை, பயண நூல்களைப்பற்றிய திறனாய்வு ஆகும். இதில் அவ்வத் துறையை முதலில் விளக்கிப் பின்னர் அந்தந்த நூல்கள் உரைப்பனவற்றைக் கூறி, இறுதில் தம் கருத்தை எடுத்துரைக்கிறார். இங்குப் பிறநாட்டுத் தமிழ் நூல்களை அறிமுகப்படுத்தியது ஆசிரியரின் ஆராய்ச்சி ஆர்வத்தைக் காட்டுகிறது.

முதற் பகுதியில் இலங்கை, மலேசியத் தமிழிலக்கிய வரலாறு களைத் தந்த டாக்டர் தண்டாயுதம், இரண்டாம் பகுதியில் அந் நாட்டுச் சிறுகதை, நாவல், கவிதை இலக்கியங்களை நமக்கு அறிமுகம் செய் துள்ளார். அடுத்த நிலையாக இந் நூலாசிரியரே முன்னின்று இந்நாட்டு இலக்கியங்களைத் தமிழ்நாட்டு இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆராய் வார் என நம்புகிறோம்.

'தற்காலத் தமிழ் இலக்கியம்,' தமிழ்நாடு, இலங்கை, மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறுகளை அறிந்துகொள்ளவும் அந்நாட்டு இலக்கி யங்களை மேலும் ஆராயவும் மிகுந்த துணைபுரியும்.

[தற்காலத் தமிழ் இலக்கியம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5; முதற் பதிப்பு 1973, பக். 240, ரூ. 4-50.]

## தமிழன்பன் கவிதைகள்

'தமிழன்பன் கவிதைகள்' என்னும் நூல், கவிஞர் தமிழன்பன் பல்வேறு இடங்களில் நடைபெற்ற கவியரங்குகள் பலவற்றில் 1966—1971 வரை பாடியுள்ள பாடல்களைக்கொண்டது. இவற்றுள் சில கவியரங்கக் கவிதைகளைத் தொகுத்து நூலாக வழங்கியுள்ளார் சிலம்பொலி செல்லப்பன். தமிழ்நாடு முதல் அமைச்சரும் கவியரங்கத் தலைவருள் ஒருவருமாகிய டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களே இதற்குத் தமக்கேயுரிய கவிதை நடையில் ஒரு 'நுதலுரை' நல்கி யுள்ளார். இதனை அடுத்துவரும் 'முகவரி'யில் நூலாசிரியரின் உரை இடம்பெறுகிறது. தொடர்ந்து தொகுப்பாளர் சு. செல்லப்பன் அவர் களின் 'சுவையுரை' 'தமிழன்பன் கவிதை'களின் சுவைகளை வாசகர் களுக்குச் சுட்டிக்காட்டுகிறது. இதன் பின்னர் 15 கவியரங்குகளில் தமிழன்பனால் பாடப்பெற்ற கவிதைகள் காணப்படுகின்றன.

நூலில் ஒவ்வொரு கவியரங்கப் பாடலும் தொடங்குமிடத்து, பாடல் பொருளுக்கேற்ப வண்ண ஓவியம் ஒன்று ஒரு பக்கத்தில் அமைந்து நம் கண்ணையும் கருத்தையும் கவர்கிறது. இதன் மறுபக்கத் தில் கவியரங்கப் பொருளும், கவியரங்கப் பொதுத்தலைப்பும், தலைமை

பூண்டோர், கவியரங்கம் நடைபெற்ற இடம், நாள் ஆகியவையும் பொறிக்கப்பட்டிருப்பது சிறப்பு மிக்க கூறுகும். இவற்றின் வாயிலாக இக் கவியரங்குகளில் பங்குகொண்ட பிற கவிஞர்களையும் அவர்களின் பாடற் பொருள்களையும், பாடல்களையும் படிக்கவேண்டும் என்னும் வேட்கை உண்டாகின்றது. இத் தொகுப்பில் மழை, நெருப்பு, சூழ், மீன், மயில், மூக்கு, மனைவி, கண்ணகி, கலைஞர், காந்தி, அண்ணு, பாவேந்தர் பாரதிதாசன், கருப்பு, அவலம், மானம் என்னும் 15 பொருள்களில் கவிதைகள் உள்ளன.

'தமிழன்பன் கவிதைகள்' படிக்கப்படிக்கத் தெவிட்டாத கவிதைகளைக் கொண்டது. இக் கவிதைகள் கருத்து விளக்கமும் கற்பனை நயமும் உணர்ச்சியோட்டமும் கொண்டு படிப்போரைப் பெரிதும் கவர்கின்றன. கவிதைகள் பல யாப்பு வகையில் அமைந்துள்ளன. கவிதைக்குரிய எல்லா இயல்புகளும் இவர் கவிதைகளில் காணப்படுகின்றன. இக் கவிதைகள் "வாசிப்பவர்களுடைய நாவிற்கு நயமும், செவிக்கு இன்பமும், மனத்துக்கு மகிழ்ச்சியும், அறிவுக்கு விருத்தியும், பொழுதுபோக்கிற்கு உல்லாசமும்" தருகின்றன. எனவேதான், இந்நூல் தமிழ்நாடு அரசின் பரிசுத் திட்டத்தில் 1966 முதல் 1970 வரையான கவிதைத் துறையில் முதல் பரிசைப் பெற்றுள்ளது எனலாம்.

கவிஞர் தமிழன்பனின் 'மழை'பற்றிய பாடல்களுள் ஒன்று படித்தின்புறத்தக்கது :

*நீர்க்குடும்பத் தின்அன்னை ! வானச் சோலை*
*நீந்திவரும் முகில்பெற்ற பிள்ளை ! இந்தப்*
*பாரினையோர் பொழிலாக்கும் சிற்பி ! தன்னைப்*
*பரிவோடு பொதுவுடைமை ஆக்கி விட்ட*
*சீருயர்ந்த பெருந்தொண்டன் ! தரைப்ப ரப்பைச்*
*சித்திரமாய்ச் செய்ஓவி யன்!பா நான்கில்*
*ஏர்பெற்ற வெண்பாப்போல் தலைமை ஏற்கும்*
*இருவானப் புனற்பொங்கல் மழையே யன்றோ !* (பக்.

மாணவர்கள் இலக்கண வகுப்பைக் கசப்பாகக் கருதல்கூடும். அவர்களுக்குத் தமிழன்பன் கவிதைகள் மூலம் இலக்கணத்தைப் போதிக்கலாம். இவருடைய கவிதைகளைப் படிக்கும்போது இத்தகைய எண்ணமே உள்ளத்தில் ஓங்குகிறது. இலக்கணம் இவரோடு ஒன்றியுள்ள தன்மை படித்தின்புறற்பாலது :

*அன்பே! பகாப்பதம்நாம்! ஆர்பிரிப் பாரிங்கே !*
*தென்றமிழ்ச் சொல்லில் உரிச்சொல் திகழ்கவிதை*
*ஒன்றற்கே சொந்தமெனச் சொல்வார்! உவக்கின்ற*
*என்றனுக்கே நீயொருத்தி என்றும் உரியள் !* (பக். 38-39)

இலக்கணத்தே வருமிரட்டைக் கிளவி போல
இணைந்திருந்தோம்! பிரிந்திருந்தால் பொருளே இல்லை!
(பக். 91)

கவிஞர் தமிழன்பன் கவிதைகள் ஒவ்வொரு தமிழ் மகனும் படித்துச் சுவைக்க வேண்டியவை; பிறமொழிகளிலும் மொழியாக்கம் செய்யப்படவேண்டியவை.

[தமிழன்பன் கவிதைகள்: ஆசிரியர், கவிஞர் தமிழன்பன், தொகுத்தவர்: சு. செல்லப்பன், மங்கள நூலகம், சென்னை-34; முதற் பதிப்பு 1970, பக். 32+192, ரூ. 6-00.]

## புதுத்தமிழ் முதல்வர்கள்

பல துறைகளில் மேன்மேலும் வளர்ந்துவரும் நாம், அவ்வப் பொழுது கடந்த கால இலக்கியங்களைத் தெரிந்துகொள்வது நலம். இத் துறையில் டாக்டர் சாலை இளந்திரையன் அவர்கள் உழைத்து வருவது பாராட்டத்தக்கது. முன்னே (1969) 'புதுத்தமிழ் முன்னோடிகள்' என்னும் நூலில், தமிழ் முதல் நாவலாகிய பிரதாப முதலியார் சரித்திரம் (1876) எழுதிய மாயூரம் ச. வேதநாயம் பிள்ளையையும், முதன்முதல் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தை நிலைபெறச் செய்த 'மங்கையர்க்கரசியின் காதல்' (1927) சிறுகதைத் தொகுதியைத் தந்த தேசபக்தர் வ. வே. சு. ஐயரையும், முதன்முதல் முறையான வாழ்க்கை வரலாற்றை—மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரத்தை (1933, 1934) வழங்கிய டாக்டர் உ. வே. சாமிநாதையரையும், தமிழ்ப் பத்திரிகை முதல்வராகிய திரு. வி. கலியாணசுந்தரரையும் அறிமுகப்படுத்தினார் டாக்டர் சாலை. பின்னே 'புதுத்தமிழ் முதல்வர்கள்' (1972) என்னும் நூலில், முதல் கட்டுரை இலக்கியமாகிய விநோத ரச மஞ்சரி (1876) எழுதிய அட்டாவதானம் வீராசாமி செட்டியாரையும், முதல் நாடகமாகிய பிரதாபசந்திர விலாசம் (1877) தந்த ப.வ. இராமசாமி ராஜுவையும், முதல் கலைக்களஞ்சியமாகிய அபிதான சிந்தாமணியை (1910) வழங்கிய ஆ. சிங்காரவேலு முதலியாரையும், முதல் திறனாய்வாளராக விளங்கிய திருமணம் செல்வக்கேசவராய முதலியாரையும் அறிமுகப்படுத்துவதைக் காணலாம்.

'புதுத்தமிழ் முதல்வர்கள்' என்னும் நூலில், நூலாசிரியர் தாம் மேற்கூறிய இரு நூல்களை வெளியிட்டதற்கான சூழலை 'வயிரச் சரங்கம்' என்பதில் எடுத்துரைக்கிறார். நூலில் காணப்படும் கட்டுரைகள், கட்டுரைக்கலை, நாடகக்கலை, கலைக்களஞ்சியம், திறனாய்வுக் கலை ஆகிய நான்கு. இத்துறை அறிஞர்களைப் பற்றி அவ்வக் கால

அறிஞர்களோடு ஒப்புநோக்கி இந்தத் துறை அறிஞர் எந்நிலையில் சிறந்து விளங்குகிறார் என்பது ஒவ்வொரு கட்டுரையிலும் சுட்டப் பட்டுள்ளது. பின்னர் இவருடைய தலைமைப் படைப்பாக விளங்கும் நூலின் தோற்றத்தையும் நுவலும் செய்திகளை எடுத்துக்காட்டுவதும் நூலின் உயர்வைச் சுட்டுவதும் ஆங்காங்கே தம் கருத்துகளை எடுத் துரைப்பதும் டாக்டர் சாலையின் இயல்புகளாம். அவ்வக் கட்டுரை இறுதியில் இங்குக் கட்டுரைகளாக விளங்கும் நூலின் தரத்தை விருப்பு வெறுப்பின்றி மதிப்பிடுவதும் காணத்தக்கது.

இந் நூலைப் படிப்பதன் மூலம் இதில் கூறப்பட்ட நூல்களைப் படிப்ப தற்கு ஒரு வாய்ப்பு ஏற்படுகிறது. ஏனெனில், எந்த நூலையும் தாமே எடுத்துப் படிப்பது என்பது முயற்கொம்புதான். பிறர் வாயிலாகக் கேள்விப்பட்டோ, நூல்கள் வாயிலாக அறிந்தோ நூல்களைப் படிப்பது தான் இலக்கிய உலகில் பெரும்பான்மை ஆகும். எனவே, டாக்டர் சாலை இளந்திரையனின் முயற்சி ஓங்குக!

[புதுத்தமிழ் முதல்வர்கள், டாக்டர் சாலை இளந்திரையன், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5; முதற் பதிப்பு 1972, பக். 176, ரூ. 3-50.]

—டாக்டர் அ. நாகலிங்கம்.

## கலைக்கூத்தன் கவிதைகள்

கவிதையில், அழகுணர்ச்சியும் சொல்லாழமும் கருத்தின் நுண்மை யும் தேர்ந்த பட்டறிவும் கவிஞனின் புலமையும் ஒருசேர மிளிர வேண்டும். இவற்றையே சங்க இலக்கியச் சான்றோர் தம் இலக்கியக் கொள்கைகளில் அடிப்படையானவைகளாகக் கொண்டிருந்தனர் என்பதை,

"அம் சொல் நுண் தேர்ச்சிப் புலவர்" (புறம். 235)

என்னும் தொடரால் அறிகின்றோம். இவையனைத்தும் கவிஞர் கலைக்கூத்தன் அவர்களின் கவிதைகளில் ஒருசேர விளங்கவில்லை யாயினும், ஆங்காங்கே மிளிர்கின்ற பாங்கைக் காணலாம்.

"மண்ணுள அனைவ ருக்கும்
மானமும் மறைப்ப தற்கு
எண்ணிலாத் துணிகள் ஈந்த
எழிற்பஞ் சாலைக் கூட்டம்
விண்ணுள நிர்வா ணத்தை
விரைந்துயர் பார்த்து நாணித்
தன்னுள புகையால் ஆடை
தருதல் பார்! விண் வெளிக்கே!" (பக். 181)

என்னுமிடத்து அழகுணர்ச்சியையும்,

“இந்தியாவின் பழக்குலே” (பக். 185)

என்று பம்பாயைக் கூறுமிடத்தும்,

“இறக்குமதி நாகரிகத் தாகம்” (பக். 187)

என்று கூறுமிடத்தும், சொல்லாழத்தையும்,

“புனிதமாகச் சிலர்பிழைக்க
புதுமையாகப் பலர்நினைக்கப்
புராணஇதி காசமென்று
புனைந்து சிரித்தான்—மனக்
கணிதத்திலே பிறந்ததென்றும்
கற்பனையில் வளர்ந்ததென்றும்
கண்டுகொண்டோன்
அதைப்பிடுங்கி எரித்தான்” (பக். 87)

என்று கூறுமிடத்துக் கருத்தின் நுண்மையையும்,

“நின்றிடா வாகனங்கள்
நினைவெனப் பறக்கும்” (பக். 184)

“பந்தயக் குதிரைப் போல
பாய்வரே தொழில்மேன் மக்கள்” (பக். 180)

என்ற இடங்களில் கவிஞனின் புலமையையும் காண்கின்றோம்.

கவிஞர் அவர்களின் கவிதைகளினூடே மின்னி மிளிரும் அடிப்படைகள் மூன்று — (1) தமிழ்மொழி உணர்வு (2) குறள்நெறி (3) சமுதாய உணர்வு.

“இம்மா ஞாலம்
வெல்தமிழின் சிறப்புணரக் கேட்ட பின்பு
எனைக்கொன்று விடுபடைப்பே! புலமை மூத்தோன்
என்சிதைக்குத் தமிழ்ப்பாடித் தீமூட் டட்டும்” (பக். 19)

“ஊனுருகத் தமிழ்ப்பாட்டுப் பாட, பூமி
உருண்டையுந்தான் சுழலுவதை நிறுத்திக் கேட்கும்”
(பக். 21)

“தமிழ்
உணர்ச்சி தன்மானத்தைக் காக்கின்ற ஆடை” (பக். 24)

“தமிழ்ப்
பண்புதான் அவனியோர் களைப்பாறும் தோப்பு” (பக். 24)

" தமிழ்ப்
பகைவென்று வளர்க்கவே நான்" (பக். 24)

இவை, கவிஞரின் தமிழுணர்ச்சிக்குச் சில சான்றுகள்.

"வள்ளுவம் இந்நாட்டின் மறையே !—அவனி
வாழ்வுக்கே வழிகாட்டும் அதுநீதி முறையே !
அள்ளத்தான் குறையாத அறிவே !—ஆழ்ந்து
அள்ளினால் பொலிகின்ற நெறியதன் செறிவே!" (பக். 32)

"உலகிற்கே வழிகாட்ட குறளும்" (பக். 33)

" தூங்கிடப் போகுமுன் முப்பாலில் ஓர்பாலைத்
துய்த்ததின் பாடலிதோ" (பக். 40)

இவ்வாறு ஒல்லும் வகையெல்லாம் குறளின் புகழை எடுத்து உரைப்பதோடு, பல்வேறு இடங்களில் குறள்களின் கருத்துகளையும் அப்படியே கையாண்டுள்ளார்.

சமுதாய உணர்வைப் பொறுத்தவரை, இச் சமுதாயத்தின் பல்வேறு நிலைகளை—புரையோடி நிற்கும் நிலைகளை—இழிதகைமைகளைப் பல்வேறு கோணங்களில் நின்றுத் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டுகின்றார். ஒரு சில இதோ :

"நம்பிநட்புக் கொண்டவரை ஏய்த்துப் பொய்ம்மை
நாடகத்தை நடத்துதற்கோ அன்பு கொண்டு
கும்பிட்டுத் தோளில்கை போட்டு ஆழக்
குழிபார்த்துத் தள்ளிவிட்டு மேலே நின்று
தம்பிக்குத் திறனில்லை பதவி யைத்தான்
தகுந்தபடி நடத்துதற்கு என்று பேசும்
வம்பிக்கு எதுசொந்தம்? உழைத்து மக்கள்
வறுமைபெற சொந்தமெது? புரியவில்லை!" (பக். 86)

"உழைப்பவனும் ஊரூராய்ச் சுற்றிப் பொய்மை
உபதேசம் செய்பவனும், பிறரை ஏய்த்துப்
பிழைப்பவனும், பெரியோன்போல் நடிக்கக் கற்றுப்
பிறர்பொருளைக் கவர்வோனும், செல்வம் சேர்த்துத்
தழைப்பவனும் சுயநலத்தின் தன்மை மீறித்
தடுமாறின் அவனைத்தன் வலைக்குள் வீழ்த்த
அழைப்பவனும், சமுதாயச் சீர்தி ருத்தம்
அழகாகப் பேசுகின்றார் தடுப்பார் யாரே? (பக். 123)

65 கவிதைகள் கொண்ட இக்கவிதை நூல்: (1) நாடும் மொழியும் (10 கவிதைகள்), (2) கன்னியும் காதலனும் (21 கவிதைகள்), (3) வித்தகமும் தத்துவமும் (11 கவிதைகள்), (4) பாக்களும் பல

கோணங்களும் (16 கவிதைகள்), (5) கவியரங்கமும் கவிதையும் (4 கவிதைகள்), (6) வரலாறும்—கற்பனையும் (3 கவிதைகள்) என்னும் ஆறு பிரிவுகளைக் கொண்டது.

ஆங்காங்கே, புதிய சிந்தனைகளும் புதிய உவமைகளும் மிளிர் கின்றன. பல்வேறு சந்தங்கள் நடம் பயில்கின்றன. எனினும், சில இடங்களில் யாப்பமைப்பில் தடுமாற்றமும், ஒற்றுப் பிழைகளும் காணப்படுவதைக் கவிஞர் அவர்கள் தவிர்த்திருக்கலாம்.

மொத்தத்தில், தமிழன்னைக்கு அணிவிக்கத்தக்க அணிகலன்களுள் இதுவும் ஒன்று எனலாம்.

[கலைக்கூத்தன் கவிதைகள்—கவிஞர் வெ. கலைக்கூத்தன், வெளியீடு: தமிழ்ப்படைப்பு மேம்பாட்டு மன்றம், பம்பாய்-19; முதற் பதிப்பு 1973, விலை ரூ. 6.]

—கு. மோகனராசு

## ஒரு நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை

இலக்கிய ஆராய்ச்சி போற்றிப் பரப்புதற்குரிய ஒரு கலை. நூலின் திறன் உணர்ந்த நுண்ணறிவாளர் நுவலும் கலை. இலக்கிய ஆராய்ச்சி என்பது இலக்கிய அயர்ச்சியாக இருத்தல் கூடாது. ஆராய்ச்சி எதைப் பற்றியதோ அதைப் படிக்கத் தூண்டுவதாக அமைந்திட வேண்டும். தாம் கற்றதையெல்லாம் காட்டி மருட்டுவதாக ஆராய்ச்சி அமையுமானால் ஆர்வலர்களும் அஞ்சி ஓடுவார்கள். உற்ற துணையாக அமையும் ஆராய்ச்சி ஒருவகையில் உயர்ந்தது என்றும் கூறலாம். புதிய உண்மைகளைக் கிளத்துவதுதான் ஆராய்ச்சி என்றும் புரியாமல் இல்லை. ஆனால், மக்களாட்சிக் காலத்தில் எதுவும் பயனளிக்கும் பொதுவுடைமை ஆதல்வேண்டும். எனவேதான், ஆராய்ச்சியைச் சொற்பொழிவாக நிகழ்த்தவும் பல்கலைக் கழகங்கள் இசைவளிக் கின்றன.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் கல்கி அறக்கட்டளையின் சார்பில் பேராசிரியர் அ. சினிவாசராகவனால் நிகழ்த்தப் பெற்ற மூன்று நாள் சொற்பொழிவுகளின் தொகுப்பு, 'ஒரு நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை' என்னும் இந்நூல்! ஆனால், ஒரு பொருள் பற்றியது. இராமலிங்கர் பிறப்பிலிருந்து பாரதியார் மறைவு வரையிலான கால எல்லை ஒரு நூற்றாண்டாகக் கொள்ளப்படுகிறது. எனவே, பேச்சு 19, 20ஆம் நூற்றாண்டுகளை அளாவிநிற்கிறது. தளிர், அரும்பு, மலர் என ஒவ்வொரு நாள் சொற்பொழிவுக்கும் ஒரு தலைப்புத் தரப்பட்டுள்ளது. தமிழ்க் கவிதையின் வளர்ச்சியை இத் தலைப்புகள் சுட்டுவதாகச் சொற்பொழிவாளர் நம்மை உணரவைக்கிறார்:

"பழைய மரபை ஒட்டிப் பாடிய புலவர்களை அவர்கள் எவ்வளவு சிறந்தவர்களாக இருந்தாலும், இந்த மூன்று பேச்சுக்களில் நான் கருதப்போவதில்லை. இன்றைய தமிழ்க் கவிதையை நோக்கி, சென்ற நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து தமிழைத் திருப்பிய ஒரு சில கவிஞர்களைப் பற்றிச் சில சொல்லுவதே என்னுடைய நோக்கம்"

எனத் தமது கருப்பொருளைப் பேச்சின் தொடரிலேயே தெளிவுபடுத்தி விடுகிறார்.

நந்தனார் சரித்திரக் கீர்த்தனை பாடிய கோபால கிருட்டிண பாரதியாரையும் அருட்பா பாடிய இராமலிங்க அடிகளையும் தளிராகவும், இரட்சணிய யாத்திரிகம் பாடிய கிருட்டிணப் பிள்ளை, நீதிநூல் பாடிய மாயூரம் வேதநாயகம் பிள்ளை, மனோன்மணீயம் பாடிய பேராசிரியர் சுந்தரம்பிள்ளை ஆகியோரை அரும்பாகவும், பாரதியாரை மலராகவும் காண்கிறார் சொற்பொழிவாளர். இன்றைய தமிழ்க் கவிதையை நோக்கித் தமிழைத் திருப்பிடச் சென்ற நூற்றாண்டில் கிருட்டிணப் பிள்ளை எந்த வகையில் காரணமாக இருந்தார் என்பது விளங்கவில்லை. இன்றைக்கும் அவருடைய பாடல்கள் பெரும்பாலும் உரை விளக்கம் இல்லாமல் படித்தால் விளங்காது என்ற நிலை.

கோபால கிருட்டிண பாரதியார் உண்மையில் ஒரு மக்கள் கவிஞர். தாழ்த்தப்பட்ட சமுதாயத்தில் அழுத்தப்பட்ட நந்தனின் உள்ளத்துணர்ச்சி வாயிலாக அன்றைய சமுதாய நிலையைக் காட்டுகிறார் பாரதியார். சமுதாய நிலையைக் காட்டுவது அவர் நோக்கமல்ல ; சமயத்தின் வழிப்பட்ட பக்தியே அவருடைய குறிக்கோள்! என்றாலும் அவர் ஆண்டான் அடிமைப் போராட்டத்தைப் பல இடங்களில் உணர்ச்சியோடு காட்டுகிறார். இதனைச் சொற்பொழிவாளர் நன்கு எடுத்துக்காட்டுகிறார்.

இராமலிங்கர் உலகம் போற்றக்கூடிய ஒரு சமரச நெறியாளர். சைவ சமயத் திருமுறைகளுக்கும் அருட்பாவுக்கும் கருத்தொற்றுமையும் சொல்லொற்றுமையும் இருப்பது இலக்கிய அருமையை எவ்விதத்திலும் குறைவுபடுத்தாது என்றே கருதலாம். அதற்காக மேற்குநாட்டு எக்கார்டுக்கும் இராமலிங்கருக்கும் இருக்கும் ஒப்புமையைக்காட்டி அமைதிகூற வேண்டியதில்லை. இராமலிங்கர் தம்முடைய உணர்ச்சியை வெளிப்படுத்தியுள்ள உருக்கத்திற்காகவே அருட்பா படிக்கும் ஒவ்வொருவரும் உருக்கம் கொள்கின்றனர். இராமலிங்கரின் அருட்பா தோற்றுவித்த புதியதொரு நோக்கைச் சொற்பொழிவாளர் மிக நன்கு எடுத்துக்காட்டுகிறார்.

கிருட்டிணப் பிள்ளையின் காவிய ஆற்றல் காட்டப்படுகிறது. மேற்கோளாகத் தரப்பட்டுள்ள பாடல்கள் எளிமையாகப் பொருள் விளங்குகின்றன. வேதநாயகம்பிள்ளை புதிய தமிழுக்குப் பல வழிகளிலும் பொலிவு சேர்த்தவர். நையாண்டியும் இடித்துரையும் மிக்க கவிதை

களும், பொதுநோக்கில் அமைந்த சமயப் பாடல்களும் பற்றித் திறம் படக் காட்டியுள்ளார். தமிழ் உணர்வை ஊட்டிய சுந்தரம்பிள்ளையின் மனோன்மணீயம், நாடகப் புத்துலகத்தைத் தொடங்கி வைத்த நயத்தை எடுத்துக்காட்டுகிறார். தமிழ் வடமொழி என்ற வேறுபாடு வளர வித்திட்டவர் சுந்தரம்பிள்ளை என்று அவர்மீது குற்றம் சாட்டுவது உண்டு. அதனைச் சொற்பொழிவாளரும் மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறார். அ. சி. ராவின் வடமொழிக் காதலுக்குச் சான்றாக அமைகிறது அந்தப் பகுதி.

சுந்தரம்பிள்ளைக்குக் காலத்தால் பிற்பட்டவர் சுப்பிரமணிய பாரதியார். ஆனால்,

> ‘சுப்பிரமணிய பாரதியாரின், ‘புதுமைப் பெண்’ மனோன் மணீயத்தில் வாணியாகத் தோன்றிவிடுகிறாள்’

என்று கூறுவது ஆசிரியரின் ‘உள்ளத்தைக்’ காட்டுவதாகும். சுந்தரம் பிள்ளையின் ‘வாணி’ சுப்பிரமணிய பாரதியாரின் புதுமைப் பெண்ணாகத் தோன்றுகிறாள் என்று குறிப்பிட்டிருந்தால் தடம்புரளாத தகைமை ஏற்பட்டிருக்கும்.

பாரதியாரின் கவிதைபற்றி மிக விரிவாகப் பேசுகிறார். பல பகுதிகள் உணர்ச்சியோடு அமைந்துள்ளன. பாரதியின் கவிதை எளிமைக்குக் கோபால கிருட்டிண பாரதியாரும் இராமலிங்க அடிகளும் முன்னோடி என்பதை நன்கு காட்டியிருக்கலாம்.

ஆராய்ச்சியைச் சொற்பொழிவாக ஆற்றுவது உள்ளபடியே அருமை. உணர்ச்சி கலந்துவிடும் என்பதுதான் சிலருக்கு உறுத்தலாக இருக்கும். ஆனால், பேராசிரியர் அ. சீனிவாசராகவன் அவர்கள் மூன்று நாள் சொற்பொழிவுகளையும் ஒரு வடிவத்தோடு இயைத்துள்ளார் என்பதில் ஒரு தனிச்சிறப்புத் தோன்றுகிறது.

[ஒரு நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை—பேராசிரியர் அ. சீனிவாசன்; வெளியீடு: அ. சீ. ரா. இலக்கியக் காப்பு நிதி, தூத்துக்குடி; முதற் பதிப்பு 1970, பக். 101, விலை ரூ. 4]

— டாக்டர் மா. செல்வராசன்.

## பூங்குன்றன் கவிதைகள்

பாட்டரங்கம் என்பது பண்டித விளையாட்டு என்று அதன் பக்கம் நெருங்கவும் பயந்தனர் கவிஞர்கள் ஒரு காலத்தில்! கவிஞர் நிலையே இது என்றால், கல்வித் தேர்ச்சி இல்லாத எளிய மக்களைப்பற்றி என்னென்பது? பாமரரும் சுவைத்துத் திளைத்திடலாம், பாட்டரங்கை எனக் கட்டளை பிறப்பித்தல்ல, கவிதை எழுதிக் கவியரங்கில் கலந்து கொண்டு மெய்ப்பித்துக் காட்டினார் கலைஞர். பாட்டரங்கிற்குக் கூடுகிற கூட்டத்தைப் பார்த்தாலே மலைப்பாக இருக்கிறது. பேச்சைக் கேட்பதற்கு என மக்கள் கூட்டத்தைப் பெருக்கிக் காட்டியவர் பேரறிஞர் அண்ணா. அண்ணாவின் தம்பியாகிய கலைஞர், கவிதை கேட்டுக் களித்திட மக்களை மயக்கிக் கூட்டியவர். மக்களின் இலக்கிய வேட்கையை எவ்வளவோ வளர்த்தவர், தமது பாட்டரங்கப் பாடல்களால்! கவியரங்கம் களைக்கட்டியது கலைஞர்வரவால்தான் எனக் கண்டிப்பாகத் திறனாய்வு செய்யலாம். அவர் அணியைச் சார்ந்த அண்மைக்கால இலக்கிய வளர்ச்சியில் முளைத்த அருமையான படைப்பே,பச்சையப்ப வள்ளலுக்குப் படைக்கப்பட்டுள்ள 'பூங்குன்றன் கவிதைகள்' எனும் புத்தகம்.

கவிஞர் பூங்குன்றன் ஒரு கல்லூரி ஆசிரியர் என்றாலும், கவியரங்கேறி வெல்லும் காட்சியை இக் கவிதைகளில் காணமுடிகிறது. மேடையேறும் கவிதைகள், மெய்யான கவிதைகள் அல்ல என்னும் முணுமுணுப்பை முறியடித்துத் தரத்தோடு விளங்கும் இந் நூலுக்குத் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் தந்துள்ள அணிந்துரை கவிதைச் சிறப்புக்கே கட்டியம் கூறுகிறது.

உடைமைகள் பத்து
பாலைவனமெல்லாம் பட்டணமாக வேண்டும்
வள்ளுவன் — என் ஆசிரியன்
மறையாத மாமலை
மூவருலா
பெரியபுராணம்
அறிவியல் அழிவிற்கா
பாரதி பார்வையில் சிவாஜி
நெஞ்சின் உறுத்தல்கள்
கற்பியல்

என்ற பத்துத் தலைப்புக்களில் கவிதைகள் பாடப்பெற்றுள்ளன.

சிலேடை இன்றைய கவியரங்கில் சிலிர்த்து நிற்கிறது. ஆனால், இவர் சிலேடையில் நாட்டம் கொள்ளாமல் சிறந்த இலக்கியத் தரத்தோடு கவிதைகளைப் பாடியுள்ளார் என்று சிறப்பிக்கும்போது,

தந்தையின் பெயரென்ன? முத்துவேலர்;
தன்பகைவர் தமக்கிவரோ குத்தும்வேலர்!
தந்ததாயின் பெயரென்ன? அஞ்சுகம்தான்!
தமிழ்நாட்டுக்கு இவர்குரலோ அஞ்சுகம்தான்!

எனச் சொல் விளையாட்டில் மயங்கியிருப்பதைச் சுட்டிக்காட்டாமல் இருப்பதற்கில்லை. ஆனால் மிகவும் குறைவு!

எளிய மக்களின் எதிரே நின்று பாடும்போது கட்டளைக் கலித் துறையில் பாடினால் எடுபடுமா? கவிஞனின் ஆற்றலைப் பொறுத்தது எளிமை. இவர் விருத்தப்பாவை விளங்கும் பா எனக் கருதிக் கையாண்டுள்ளார். எளிமையான பாடல்கள் என்று கூறவேண்டிய தில்லை. இல்லையென்றால், மக்கள்முன் மன்றம் ஏறி நிற்கமுடியுமா?

பூங்குன்றனின் நடைப்பொலிவு போற்றத்தக்கது. சொற்கள் தாமாக வந்து இவருடைய பாடல்களில் இடந்தேடி அமர்கின்றன.

நெஞ்சத்தில் போராட்டம் கோடி; நாங்கள்
நினைவூட்ட வந்துள்ளோம் பாடிப்பாடி!
கொஞ்சத்தில் விடப்போவ தில்லை; நாங்கள்
கொஞ்சுதமிழ் அருவியினால் தருவோம் தொல்லை!
மஞ்சத்தில் மனைவிதரும் இன்பம், எங்கள்
மணிக்கவிதை கேட்டுவிட்டால் அதுவும் துன்பம்!

பாட்டில் நடையோட்டம் படையோட்டமாக நடக்கிறது.

தனக்கெனத் தனித்தன்மை உடையது தமிழ் இனம். மொழியும் பண்பாடும் காலங்களின் முரட்டுத்தனத்தால் முறிந்துபோகாமல் வெற்றிமுகம் காட்டிவந்துள்ளன. எனவே, இந்தி என்ற சிவப்பு விளக்கைத் தமிழகத்தில் இன்றைக்கு ஏற்றிட முயலுமா? பிறமொழி ஆதிக்கம் என்கிறபோது தமிழன் நெஞ்சில் பிரளயம் தோன்றி விடுகிறது. இவர் பாட்டில் இந்தி எதிர்ப்புணர்ச்சி பீறிட்டெழுகிறது.

தமிழகத்தில் விதைப்பதெல்லாம் விளையும் என்று
சரித்திரத்தை எழுதிடுவோம்; ஆனால் இன்பத்
தமிழகத்தில் இந்தியினை விதைத்தால் அந்தத்
தரித்திரத்தை அழித்திடுவோம்; வேரைக் கொல்வோம்;
தமிழகத்தில் நிலம்தோண்டி இரும்பைப் பொன்னைத்
தரமான நிலக்கரியை எடுப்போம்; ஆனால்
தமிழகத்தில் புதியமொழி வந்தால் ஆழத்
தரைதோண்டிப் புதைத்திடுவோம் தலைதூக் காமல்!

இதில் உள்ள முரண் நன்றாக உள்ளது. அன்பில்லாத நெஞ்சத்தைக் கவிஞர்,

விலைநெஞ்சம்; கொலைநெஞ்சம்; வரட்டு நெஞ்சம்;
விந்தியத்து வடக்குமொழி போன்ற நெஞ்சம்!

என்கிறார். ஆதிக்கமொழிமீது கொண்ட ஆத்திரம் எவ்வளவு அழகிய உவமையைத் தருகிறது.

போன வழியில் போவதிலே என்ன புதுமை இருக்கிறது. புரட்சி எண்ணம் இல்லாத பாட்டு இந்த நூற்றாண்டில் நமக்கு ஏன்? சாய்ந்து கிடந்து இன்பம் சலிக்கும் நிலையிலா இந்தச் சமுதாயம் இருக்கிறது?

கற்றவரே! பொய்க்கதைகள் நமக்கெதற்கு?
கவைக்குதவாப் புராணத்தைக் கொளுத்து வீரே!
இமயத்தில் வாழ்கின்றார் கடவுள் என்றார்;
இமயத்தைத் தொட்டவரோ காணோம் என்றார்!
சமயத்தார் கடலலையைக் காட்ட அங்கே,
சயனித்த கடவுளுமே இல்லை என்றார்!

எனப் புராணப் புளுகையும் கடவுள் புரட்டையும் எதிர்த்துப் புயல் குரல் கொடுக்கிறார் பூங்குன்றன்.

சமயம் பற்றி இரண்டு அணியில் உலகம் பிரிந்து நிற்கிறது. சமயம் மனிதனின் சறுக்கல் என்பதைச் சார்கின்றார் பூங்குன்றன்; எனவே, சைவர்களின் பிரிய புராணமாகிய பெரியபுராணத்தைச் சிறிய புராணமாக்கி எரியவிடுகிறார்.

சங்கநூலில் பார்க்கின்ற உவமை அன்றிச்
சேக்கிழானே புத்துவமை தந்தான் இல்லை!
தங்குமிசைத் திருக்குறளோ விளக்கும் வாழ்வை;
தரங்குறைந்த இந்நூலோ காட்டும் சாவை!
செங்கதிரைச் சிந்துகின்ற சுடரோன் முன்னே
சின்னவொளி அகல்விளக்கு என்ன செய்யும்?
பங்கமிலா முழுநிலவு சங்க நூல்கள்;
பேரிருட்டு அமாவாசை இந்த நூலே!

அஞ்சாமை மிக்க இந்தப் பாட்டு டாக்டர் மு. வ. அவர்கள் தலைமையில் அரங்கேற்றப்பட்டிருக்கிறது. ஆராய்ச்சியில் இப்படிப்பட்ட ஒப்பீடுகள் அபாயங்களைக் கிளப்பும் போலும்!

தமிழ்ச் சமுதாயம் தடுமாறித் தடுமாறித் தளிர்நடை தளர்நடையாகக் காரணம் என்ன என்பது தந்தை பெரியார் எழுப்பும் வினா? அறிவியல் பார்வை நம்மிடையே எதிலும் அறவே இல்லாததால் அழிவியல் எளிதாக வந்து சேருகிறது என்பது அவர் சுட்டிக்காட்டிய விளக்கம். 'அறிவியல் அழிவிற்கா' என்ற தலைப்பில் பாடப்பெற்றுள்ள பாடல்கள் அறவியல் என்று போற்றத்தக்கன.

புதுக்கவிதை என்பது இன்றைய புரட்சிக் கவிதை என்கின்றனர் ஒரு போக்கினர். மரபை மீறிய புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுக்கும் வடிவத்தைப் பொறுத்தவரையில் வந்த வழியே சொந்த வழியாகி விட்டது. கவிதை என்பது வெறும் உணர்ச்சி மட்டும் அன்று. எனவே, இலக்கணம் தேவை என அவர் கருதியிருக்கலாம். இலக்கணத் தண்ட வாளத்தைப் பெயர்ப்பதால் என்ன பயன்? தண்டவாளம் அல்ல தரையாகவே இருக்கட்டும். பயணத்திற்கு ஒரு விதி வேண்டும் அல்லவா? பாட்டிற்கும் ஒரு விதி வேண்டும் என்று இலக்கியப் புரட்சி யாளரும் எண்ணிடுகின்றனர். அவ் வழியினரான பூங்குன்றன் புதுக் கவிதையைத் தமது 'நெஞ்சின் உறுத்தலா'கக் கருதுகிறார்.

புதுக்கவிதை புதுக்கவிதை என்கின் றீரே!
புதுமையினை அதிலென்ன கண்டு விட்டீர்?
மதுக்கவிதை யாப்பினிலே தோல்வி யுற்று
மடமடெனக் குறுக்குவழிப் புகழைக் காணச்
சதுராடும் வேசியென விரைந்த தன்றித்
சரித்திரத்தில் அவர்கவிதை நிற்ப துண்டோ?

சரித்திரத்தில் நிற்பது இருக்கட்டும். நம்முடைய மனத்தில் நிற்க மறுக் கிறதே! புதுக்கவிதையைத் தருவது புகழ்பெற எனப் பூங்குன்றன் குறிப்பது நமது நெஞ்சை உறுத்துகிறது. புகழ்பெற அல்ல, விளம் பரம் பெற!

கவியரங்கப் பாட்டொன்றில், கவியரங்கத் தந்தை கலைஞர் உழவனைப்பற்றிய உயர்ந்த கற்பனையைக் காட்டுகிறார்.

உழவன் ஓர் தாமரை
சேற்றில் மலரும் அவன்வாழ்வு!
உழவன் ஓர் மன்னன்
நாற்றுமுடி இருக்கும் அவன்தலையில்!
உழவன் ஓர் வீரன்—என்றும்
போர் இருக்கும் அவன்களத்தில்!
(வைக்கோற் போர்)

உழவன் ஓர் ஓவியன்
வயல்கள் அனைத்தும் அவன்
வரைந்த சித்திரம்!
உழவன் ஓர் தெய்வம்
உயிர்களைக் காப்பதால்!

இந்த வரிகளைப் படித்த பிறகு,

கலைஞர் ஒரு கம்பர்
கற்பனை வளத்தினால்!

என இதயம் கவிதை பாடுகிறது. உழவனைத் தாமரையாகவும் மன்னனாகவும் வீரனாகவும் ஓவியனாகவும் தெய்வமாகவும் கண்டு காட்டியிருக்கும் கலைஞரின் அரிய கலைவளம், கவிஞர் பூங்குன்றனின் 'வள்ளுவன் - என் ஆசான்' என்ற பாட்டில்,

வள்ளுவன் ஓர் நெசவாளி
வள்ளுவன் ஓர் ஏருழவன்
வள்ளுவன் ஓர் மாமன்னன்
வள்ளுவன் ஓர் ஆசிரியன்

எனத் தாக்குரவு கொண்டுள்ளது.

கூறியது கூறல் குற்றம் என்பார் நன்னூலார். பூங்குன்றன் ஆசிரியர், ஒன்றுக்குப் பத்தாக உரைத்தால்தான் மாணவர்களுக்கு உறைக்கும் என்று கருதுபவர். பாடத்தில் குற்றமல்ல; ஆனல் பாட்டில் அது குற்றம் எவ்வளவு அழகியதாயினும்.

பூக்களிலே உயர்ந்ததெது? மல்லிப் பூதான்!
புனல்நீரில் உயர்ந்ததெது? பொன்னித் தண்ணீர்!
வாக்கினிலே உயர்ந்தவர்யார்? வாதவூரர்!
வறுமையிலும் உயர்ந்தவன்யார்? குமண வள்ளல்!
மாக்கதையில் உயர்ந்ததெது? சிலம்புச் செல்வம்!
மாந்தரிலே உயர்ந்தவர்யார்? காந்தி அண்ணல்!
ஊக்கத்தில் உயர்ந்தவர்யார்? அறிஞர் அண்ணு!
உயர்நெறிதந் துயர்ந்தவர்யார்? வள்ளுவர் தான்!

உடைமைகள் பத்து என்ற தலைப்பில் பாடப்பெற்ற இப் பாடல் மூவருலா என்ற தலைப்பிலும் பாரதி பார்வையில் சிவாஜி என்ற தலைப்பிலும் இடம் பெற்றுள்ளது.

வாழ்வளித்த சடையப்ப வள்ளலைக் கம்பர் தமது காப்பியத்தில் வாயாரப் பாடியுள்ளார் ஆங்காங்கு! படிக்க இடமளித்துப் படித்த பின் பணியளித்த பச்சையப்ப வள்ளலை (பூங்குன்றன் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்) ஒவ்வொரு பாட்டிலும் உயர்வாகப் போற்றுகிருர். பச்சையப்பன் வணக்கமே இவருக்குப் பரமனின் வாழ்த்து! மடமையைப் போற்றுவதினும் மனிதனைப் போற்றலாம்!

[பூங்குன்றன் கவிதைகள்—டாக்டர் இரா. குமாரவேலன், வெளியீடு: மல்லிகை நிலேயம், சென்னை-30; முதற் பதிப்பு 1973; பக்கம் 92, விலை ரூ. 2-50.]

—டாக்டர் மா. செல்வராசன்.

# தமிழக நாட்டுப் பாடல்கள்

'கேரளப் பல்கலைக் கழகத்து மொழியியல் துறையில் 1969-ம் ஆண்டு பிஎச். டி. பட்டத்திற்காக நான் ஆங்கிலத்தில் எழுதிக் கொடுத்த ஆய்வுரையின் சுருக்கத் தமிழாக்கமே இந்நூல்' என்று நூலாசிரியர் தமது முன்னுரையில் கூறியுள்ளார்.

இந்த ஆய்வுரையில் ஒப்பாரி, தாலாட்டு என்ற இருவகைப் பாடல்களின் அமைப்பைப் பற்றி இதுவரை தமிழில் எவருமே செய்யாத முறையில்-வகையில் இவர் முயற்சி செய்துள்ளார்; வெற்றியும் பெற்றுள்ளார்.

தொகுப்பு நூல்களாகவும் விளக்கவுரை நூல்களாகவும் வெளி வந்த நாட்டுப்புறப் பாடல் முயற்சியில் இது ஒரு புது முயற்சி; சிறந்த ஆய்வுப் பயிற்சி.

நாட்டுப்புறக் கலைகளின் ஆய்வை முதலில் விளக்கிய பின்னர், நாட்டுப்புறப் பாடல் தொகுப்பு நூல்களின் தன்மைகளையும் தரத்தையும் விளக்குகின்றார். தன் ஆய்வுக்காகக் களப்பணி செய்த இவர் அக் களப்பணியில் கண்டு கேட்ட அனுபவங்களைச் சிறப்பாக வெளிப்படுத்தியுள்ளார். ஒப்பாரி, தாலாட்டு ஆகிய இரு பாடல்களின் அமைப்பியல் கோட்பாட்டை நன்கு விளக்குகின்றார். பின்னர் இருவகைப் பாடல்களையும் ஒப்பிட்டுக் காண்கின்றார்.

சேகரித்த பாடல்களைச் சிறிதுகூடச் சொல்லிலோ வரியிலோ மாற்றம் செய்யாமல் உள்ளதுபோல் வெளியிட்டுத் தனது தனித் தன்மையைக் காட்டுகின்றார். பாடியவர் பெயர், ஊர் ஆகியவற்றையும் வெளியிடுகின்றார். புதிய கலைச் சொற்களையும் உருவாக்கியுள்ளார். நுணுக்க ஆய்வும் துணை ஆய்வும் நல்ல பகுப்புகள்.

வெளுக்கப் போகும் நாட்டுப்புற இயல் வானில் தோன்றும் விடிவெள்ளிதான் இந்நூல். இவர் நாட்டுப்புற இயல் பாட்டையில் ராசநடை போடுகிறார்.

[தமிழக நாட்டுப் பாடல்கள்: டாக்டர் ப. ரா. சுப்பிரமணியன், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை; பக்கம் 356, விலை ரூ. 8-00.]

—சு. சண்முகசுந்தரம்.

# தமிழ்த்துறைச் செய்திகள்
# 1975

## பொருளடக்கம்

## (அ) 1975-ஆம் ஆண்டு—சிறப்பு நிகழ்ச்சிகள்

| வரிசை எண். | நாள் | சொற்பொழிவாளர் | தலைப்பு |
|---|---|---|---|
| 1. | 2—1—75 | டாக்டர் ஈ. ச. விசுவநாதன் (ஆஸ்திரேலியப் பல்கலைக் கழகம்) | ஆராய்ச்சி நெறிமுறைகள் |
| 2. | 7—2—75 | திரு. கே. இலட்சுமணன் (கல்வித் துறை இயக்குநர்—இலங்கை) | இலங்கை—தமிழகக் கல்வி முறைகள் |
| 3. | 14—3—75 | திரு. வ. செயதேவன் | டாக்டர் அகத்தியலிங்கம் அவர்கள் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய மொழியியல் சொற்பொழிவுக் குறிப்புகள். |
| 4. | 14—3—75 | புலவர் மு. சண்முகம் பிள்ளை | தேசியக் கல்வி ஆராய்ச்சிப் பயிற்சி முகாமில் (அண்ணாமலை நகர்) நிகழ்ந்த தமிழ்ப் பாடப் புத்தக ஆய்வு பற்றிய குறிப்புகள். |
| 5. | 7—4—75 | டாக்டர் A. கந்தையா (இலங்கை) | ஆராய்ச்சி நெறிமுறைகள் |
| 6. | 11—4—75 | டாக்டர் ஹெல்கா ஆண்ட்டன் (ஹேம்பர்க் பல்கலைக் கழகம், மேற்கு செர்மனி) | பொது மக்களிடையே தமிழ் வழக்கு |
| 7. | 1—10—75 | திரு. க. ப. அறவாணன் | இலங்கையும் தமிழாராய்ச்சியும் |

| | | | |
|---|---|---|---|
| 8. | 2—11—75 | டாக்டர் ந. சஞ்சீவி | வள்ளுவர் : காந்தி : ஆர்னல்ட் : இராமலிங்கர் (தொடர் சொற்பொழிவு-1) |
| 9. | 26—11—75 | டாக்டர் டி. பி. சிங்கால் (ஆஸ்திரேலியா) | இந்திய நாகரிகம் |
| 10. | 29—11—75 (காலை) | டாக்டர் க. கைலாசபதி (இலங்கை) | சமூகப் பார்வையில் இலக்கியத் திறனாய்வு |
| 11. | 29—11—75 (மாலை) | சிசிர் குமார் கோஷ் (விசுவபாரதி) | அரவிந்தர்—ஒரு கவிஞர் |
| 12. | 2—12—75 | டாக்டர் ந. சஞ்சீவி | வள்ளுவர் : காந்தி : ஆர்னல்ட் : இராமலிங்கர் (தொடர் சொற்பொழிவு-2) |
| 13. | 18—12—75 | திரு. க. வேங்கடேசன் | மதுரைப் பல்கலைக் கழகம் நடத்திய 'ஆராய்ச்சி நெறிமுறைகள்' கருத்தரங்கப் பயிற்சி பற்றிய தொகுப்புச் செய்திகள். |

குறிப்பு : (1) ஹங்கேரி நாட்டைச் சேர்ந்த Dr. Istvan Major, M. A., Ph. D., (திராவிடவியலறிஞர்) அவர்கள் 17-11-75 அன்று தமிழ்த்துறைக்கு வருகை தந்தார்கள்.

(2) வெட்டர்ன் பர்ஹ், லூதர்ப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் டாக்டர் Dietrich Sommer Martin அவர்கள் நவம்பர்த் திங்களில் தமிழ்த்துறைக்கு வருகை தந்தார்கள்.

(3) டாக்டர் க. கைலாசபதி அவர்கள் 21-11-75 அன்று தமிழ்த்துறைக்கு வருகை தந்து, துறையினருடன் கலந்துரையாடினர்.

(4) டாக்டர் கமில் சுவலபில் அவர்கள் 31-12-75 அன்று தமிழ்த்துறைக்கு வருகைதந்தார்கள்.

## (ஆ) அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்—1975

| வரிசை எண் | நாள் | சொற்பொழிவின் பெயர் | சொற்பொழிவாளர் | சொற்பொழிவின் பொருள் |
|---|---|---|---|---|
| 1. | 19, 20, 21-2-1975 | டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளிவிழா நினைவுச் சொற்பொழிவுகள் | டாக்டர் எம். எஸ். திருமலை (துணை இயக்குநர், இந்திய மொழிகளின் மைய நிறுவனம், மைசூர்) | தமிழும் மொழியியலும் நடையும் |
| 2. | 12, 13, 14-3-1975 | அன்னை சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் | தவத்திரு குன்றக்குடி அடிகளார் | நமது நிலையில் சமயம் - சமுதாயம் |
| 3. | 7, 8, 9-4-1975 | பம்மல் சம்பந்த முதலியார் நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் | திரு. நாரணதுரைக் கண்ணன் | பம்மல் சம்பந்த முதலியாரின் காலத்துக்கு முன்னும் பின்னும் தமிழ்நாடகம் |

## (இ) தமிழ்த்துறை ஆசிரியர்-மாணவர் கருத்தரங்கு—1975

| எண் | நாள் | கட்டுரையாளர் (ஆசிரியர்) | பொருள் | கட்டுரையாளர் (மாணவர்) | பொருள் |
|---|---|---|---|---|---|
| 1. | 26-2-'75 | செல்வி தி. சு. சத்தியம் | திருக்குறள் உரையாசிரியர்கள் பொதுநோக்கு-தனிநோக்கு | திருமதி கிருட்டிணா சஞ்சீவி | ஆற்றுப்படை நூல்களில் ஒப்புமைப் பகுதிகள் |
| | | | | திரு. நா. பாண்டுரங்கன் | குமரேச சதகத்தில் குறள் மணம் |
| | | திரு. கு. மோகனராசு | 1. திருக்குறளிலும் தொல்காப்பியத்திலும் 'பொருள்' என்ற சொல்லாட்சி-ஒரு புள்ளி விவரப் பார்வை | செல்வி கோ. தான்யா | மார்க்சிசத்தின் தோற்றம்-ஒரு குறிப்புரை |
| | | | | திரு. சு. சண்முக சுந்தரம் | காதற் பாடல்கள் |
| | | | 2. குறளடிகள் - திருக்குறள் தொல்காப்பிய ஒப்பாய்வு-ஒரு வரைபடப் பார்வை | திரு. க. ப. அறவாணன் | தொல்காப்பியம் பற்றிச் சில மேற்கோள் செய்திகள் |
| | | டாக்டர் ந. சஞ்சீவி | பழந்தமிழும் பழஞ்சீனமும் | | |
| | | திரு. புலவர் மு. சண்முகம்பிள்ளை | பிள்ளைத்தமிழ் மரபும் அடிமதிக்குடி ஐயனார் பிள்ளைத்தமிழும் | திரு. த. அமிர்தலிங்கம் | வள்ளுவர் நோக்கில் வறுமை |
| 2. | 25-3-'75 | திரு. கு. மோகனராசு | 1. தொல்காப்பியத்தின் அடிவரையறையிலிருந்து நெகிழ்ந்த குறளடிகளின் அமைப்புமுறை | திரு. சு. சண்முக சுந்தரம் | 1. தொல்காப்பியத்தில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகள்<br>2. தொழிற்பாடல்கள் |
| | | | 2. தொல்காப்பியம் உவம இயல்-சுருக்க வரிப்பட விளக்கங்கள் | திரு. த. அமிர்தலிங்கம் | 1. பாலைக்கலியில் பொருள் பற்றிய கருத்துகள் |

| எண் | நாள் | கட்டுரையாளர் (ஆசிரியர்) | பொருள் | கட்டுரையாளர் (மாணவர்) | பொருள் |
|---|---|---|---|---|---|
| | | செல்வி தி. சு. சத்தியம் | சங்க இலக்கிய அகத்திணைக் கூற்றுகள்- தொடர்ச்சி - நிகழ்ச்சி நோக்க நிரல்முறை | | 2. பட்டினப்பாலை வாயிலாக அறியலாகும் காவிரிப்பூம்பட்டினத்தின் வளம் |
| | | திரு. வ. செயதேவன் | தமிழகராதியியல் - கிழக்கும் மேற்கும் | செல்வி கோ. தான்யா | 1. மார்க்சிசமும் மதமும் 2. பிரபஞ்ச தத்துவ வரலாறு பற்றிய குறிப்புரை |
| 3. | 29-4-'75 (பாவேந்தர் பாரதிதாசன் பிறந்த நாள் கருத்தரங்கு) | திரு. கு. மோகனராசு | பாவேந்தரின் மணிமேகலை வெண்பாவில் வள்ளுவமும் தமிழும் | திரு. சு. சண்முகசுந்தரம் | பாரதியும் பாமரர் பாடல்களும் |
| | | டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் | குடும்ப விளக்கு தரும் ஒளி 'தங்கம்' | | |
| | | திரு. இ. சுந்தரமூர்த்தி | பாரதிதாசனாரின் குழந்தைப் பாடல்கள் | | |
| 4. | 30-7-'75 | திரு. து. மூர்த்தி | உலகம் | திரு. த. அமிர்தலிங்கம் | பெருஞ்சித்திரனாரின் வறுமை |

| | | | | |
|---|---|---|---|---|
| | செல்வி தி. சு. சத்தியம் | பாடல் ஒன்று—கூற்று பல | திரு. க. ப. அறவாணன் | 1. தமிழ் பிராமிஎழுத்து களா தமிழ் எழுத்து கள்? |
| | டாக்டர் சி. பாலசுப்பிர மணியன் | பெருங்கதை — ஒரு முன்னுரை | | 2. தமிழ்க் கல்வெட்டுக ளும் தொல்காப்பி யர் காலமும் |
| 5. 14-8-'75 | டாக்டர் ந. சஞ்சீவி | இராசாசி மண்டபத் தில் புதிய படங்கள் —சில குறிப்புகள் | திரு. த. அமிர்தலிங்கம் | புறநானூற்றில் வறுமை |
| | டாக்டர் சி. பாலசுப்பிர மணியன் | பெருங்கதையில் நீதி கள் | திருமதி கிருட்டிணு சஞ்சீவி | ஒரே (same) / ஒத்த (similar) / ஒப்பு (parallel)—ஓர் அறி முகம் |
| | | | திரு. க. ப. அறவாணன் | நல்லூர் ஞானப்பிர காச அடிகளார் |
| | | | திரு. க. வேங்கடேசன் | தமிழர் மருத்துவம்— செய்திகள் |
| | | | திருமதி மா. சு. சாந்தா | திருவள்ளுவரும் சிவப்பிரகாசரும் |
| 6. 29-10-'75 | திரு. கு. மோகனராசு | வாய்மை—பொருள் விளக்கம் | திருமதி கிருட்டிணு சஞ்சீவி | தொல்காப்பியத்தில் ஒப்புமைப் பகுதிகள் |

| எண் | நாள் | கட்டுரையாளர் (ஆசிரியர்) | பொருள் | கட்டுரையாளர் (மாணவர்) | பொருள் |
|---|---|---|---|---|---|
| | | | | திரு. ப. கிருட்டிணன் | ம. பொ. சி.—ஓர் அறிமுகம் |
| | | | | திரு. சு. சண்முகசுந்தரம் | தமிழக நாட்டுப்புற இலக்கியத்தில் பெண்கள் |
| | | | | திரு. த. அமிர்தலிங்கம் | வறுமை என்பது யாது? |
| | | | | திரு. க. ப. அறவாணன் | Variations in the commentaries of Tamil Grammar |
| 7. | 28-11-'75 | திரு. கு. மோகனராசு | (1) குறளிலும் குறிஞ்சிப் பாட்டிலும் உவம உருபுகள் — தொல்காப்பியத்துடன் ஓர் ஒப்பாய்வு | திரு. சு. சண்முகசுந்தரம் | பள்ளு—ஒரு பாமரர் இலக்கியமே |
| | | | | திரு. க. ப. அறவாணன் | A saivite's commentary to Nannul |
| | | | (2) குறளிலும் குறிஞ்சிப் பாட்டிலும் ஓர் ஒப்பாய்வு — தலைமகன் (I) | திரு. ப. கிருட்டிணன் | சிலம்புச் செல்வர் காட்டும் கம்பர் |
| | | | | திரு. க. வேங்கடேசன் | The fundamental Doctrines of 'Medicine' as revealed in Thirukkural |
| | | செல்வி தி. சு. சத்தியம் | (1) எட்டுத்தொகை அகப்பாடற் கூற்றுகள் — ஒருவகை தொகை ஆய்வு அடங்கல் | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | (2) எட்டுத்தொகை அகப் பாடற் கூற்றுகள் ஆய்வு — தொகைக் கதிர் | | |
| | | திரு. து. மூர்த்தி | நா. காமராசனின் 'கறுப்பு மலர்கள்' — திறனாய்வு | | |
| 8. | 18-12-'75 | டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் | பெருங்கதையும் -கீழ்க் கணக்கு நூல்களும் | திரு. சு. சண்முக சுந்தரம் | சிறுகதைகளில் நாட்டுப்புறப் பாடல்களின் தாக்கங்கள் |
| | | திரு. கு. மோகனராசு | மெய்ப்பாடு-ஓர் ஆய்வு | திரு. த. அமிர்தலிங்கம் | புறநானூறு, தனிப் பாடல் திரட்டு — வறுமைபற்றிய அட்டவணைகள் |
| | | செல்வி தி. சு. சத்தியம் | திருக்குறள் துறவு— ஒரு குறள் ஆய்வு (அடிப்படை) | திரு. சி. நா. குமாரசாமி | முடிநாகராயர் காட்டும் நல்லரசு |

## (ஈ) சிறப்புப் பயிற்சிகள்

(1) கோடை மொழியியல் பள்ளி

பல்கலைக் கழக நிதியுதவிக் குழுவின் உதவியோடும், மைசூர் இந்திய மொழிகள் மைய நிறுவன உதவியோடும், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை சார்பில் 12-5-75 முதல் 7-6-75 முடிய கோடை மொழியியல் பள்ளி அனைத் துலகப் பல்கலைக் கழகக்கட்டடத்தில் நடத்தப்பெற்றது.

(2) முதுகலைத் தமிழ்ப் புத்தொளிப் பயிற்சி வகுப்புகள்

முதுகலைத் தமிழ்ப் பேராசிரியர்களுக்காகச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையின் சார்பில் 26-5-75 முதல் 5-6-75 முடிய புத்தொளிப் பயிற்சி வகுப்புகள் அனைத்துலகப் பல்கலைக்கழகக் கட்டடத்தில் நடத்தப்பெற்றன.

## (உ) தமிழ்த்துறை அலுவலர்

(1) தமிழ்த்துறை

டாக்டர் ந. சஞ்சீவி, தமிழ்த்துறைத் தலைவர், பேராசிரியர்

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், துணைப்பேராசிரியர்

புலவர் இ. சுந்தரமூர்த்தி, விரிவுரையாளர்

(2) திருக்குறள் ஆய்வுப் பகுதி

புலவர் மு. சண்முகம் பிள்ளை, விரிவுரையாளர்

திரு. கு. மோகனராசு, விரிவுரையாளர்

செல்வி தி. சு. சத்தியம், ஆய்வுத் துணைவர்

(3) பேரகராதித் திருத்தப்பணிப் பகுதி

திரு. வ. செயதேவன், விரிவுரையாளர்

திரு. து. மூர்த்தி, தொழில் நுட்பத் துணைவர்

## (ஊ) தமிழ்த்துறை ஆய்வாளர்

[டாக்டர் பட்டம் (Ph.D.)]

மேற்பார்வை: டாக்டர் ந. சஞ்சீவி

| அ. ஆசிரியர் | ஆய்வுப் பொருள் |
|---|---|
| 1. புலவர் இ. சுந்தரமூர்த்தி எம்.ஏ., டிப். மானிடவியல் | "பரிமேலழகர் உரைத்திறன்—ஒரு திறனாய்வு" |
| 2. திரு. வ. செயதேவன், பி.எசி., எம்.ஏ. சான்றிதழ்—மொழியியல். | "தமிழ் அகராதிக் கலை—வளர்ச்சியும் வரலாறும்" |
| 3. திரு. கு. மோகனராசு, பி.எசி., எம். ஏ., டிப். மானிடவியல். | "திருக்குறளும் தொல்காப்பியமும்—ஓர் ஒப்பாய்வு" |
| **ஆ. மாணவர்** | **ஆய்வுப் பொருள்** |
| 4. திரு. சி. நா. குமாரசாமி, எம்.ஏ. | "தமிழிலக்கியங்களில் நன்னாட்டுக் கோட்பாடு" |
| 5. திரு. சு. சண்முகசுந்தரம், எம்.ஏ. | "திருநெல்வேலி மாவட்ட நாட்டுப் புறப் பாடல்கள்" |
| 6. திரு. ப. கிருட்டிணன், எம்.ஏ. | "தமிழ் இலக்கியத்தில் நாடு, மொழி, இனம்" |
| **இ. பகுதி நேர ஆய்வாளர்** | **ஆய்வுப் பொருள்** |
| 7. திரு. க. ப. அறவாணன், எம்.ஏ., எம்.லிட். | "தொல்காப்பியம்—உரை வேற்றுமை" |
| 8. திரு. பு. அ. மோகனராசு, எம்.ஏ. | "1900 வரை தமிழ் அச்சு/பதிப்புத் தொழில் வளர்ச்சி" |
| 9. திரு. நா. பாண்டுரங்கன், எம்.ஏ. | "சதகங்கள்—ஓர் ஆழ்வாய்வு" |

மேற்பார்வை: டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்

| அ. ஆசிரியர் | ஆய்வுப் பொருள் |
|---|---|
| 1. செல்வி தி. சு. சத்தியம், எம்.ஏ. | "திருக்குறள் ஆராய்ச்சியின் வளர்ச்சி—ஓர் அகழ்வாய்வு" |

| ஆ. மாணவர் | ஆய்வுப் பொருள் |
|---|---|
| 2. திரு. த. அமிர்தலிங்கம், எம்.ஏ. | "தமிழிலக்கியத்தில் வறுமை" |
| 3. செல்வி கோ. தான்யா, எம்.ஏ. | "தமிழிலக்கியத்தில் மார்க்சியக் கொள்கைகளின் தாக்கம்" |
| 4. திரு. க. வேங்கடேசன், பி.எசி., எம்.ஏ. | "தமிழிலக்கியத்தில் மருத்துவச் செய்திகள்" |

| இ. பகுதி நேர ஆய்வாளர் | ஆய்வுப் பொருள் |
|---|---|
| 5. திரு. கோ. இராமச்சந்திரன், எம்.ஏ., எம்.லிட். | "திருக்குறளில் மனித நலக் கொள்கைகள்" |
| 6. திரு. இரா. மாயாண்டி, எம்.ஏ., எம்.லிட். | "சங்க இலக்கியத்தில் கற்பனை" |
| 7. திருமதி கிருட்டிணா சஞ்சீவி, எம்.ஏ., பி.டி. | "சங்க இலக்கியத்தில் ஒப்புமைப் பகுதிகள்" |
| 8. திருமதி மா. சு. சாந்தா, எம்.ஏ. | "சிவப்பிரகாசர் நூல்கள்—ஆய்வு" |
| 9. திரு. செ. இராசேந்திரன், எம்.ஏ. | "தமிழ் வளர்ச்சி/ஆராய்ச்சியில் திராவிட இயக்கத்தின் தாக்கம்" |

# இரங்கல்

நம் தமிழ்த்துறையில் பல்லாண்டுகள் துணைப்பேராசிரியராய் விளங்கிய பண்டித—வித்துவான் பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள் 'காலமானர் என்ற செய்தி கிடைத்துள்ளது. இன்று பிற்பகல் எரியூட்டாம்.

பேராசிரியர் பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள் மாசு மறுவற்ற ஒழுக்கம் படைத்தவர்; வீர வைணவர்; தமிழ் இலக்கிய இலக்கணங்களை ஐயந்திரிபறக் கற்றவர்.

திருவையாற்று அரசர் கல்லூரியில் பல்லாண்டுக்காலம் தமிழ்ப் பேராசிரியராய்ப் பணி புரிந்தவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் முதலில் இளநிலை விரிவுரையாளராய்ப் பதவி பெற்றார். பின்னர், துணைப்பேராசிரியர் நிலைக்கு உயர்ந்தவர். பல்கலைக் கழகத்தில் பணி புரிந்த காலத்தில், திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கமும், ஆசாரிய ஹிருதயமும் மிகச் சிறந்த முறையில் வெளி வருவதற்கு அரும்பாடுபட்டார். இப் பல்கலைக் கழகம் வெளியிட்ட அத்தொகுதிகளே அவர்தம் அரும்புலமைக்குப் பெருஞ்சான்ருய் விளங்குகின்றன.

அறிவிலே தெளிவும் நெஞ்சிலே உறுதியும் அகத்திலே அன்பும் பொறிகள்மேல் தனி அரசாணையும் பூண்டு விளங்கிய புவனகிரி நாயுடு ஐயா அவர்களிடம் திருவையாற்று அரசர் கல்லூரியிலே சில காலம் தமிழ் இலக்கிய இலக்கணக் கல்வி பெறும் நல்ல வாய்ப்பு அடியேனுக்கும் கிடைத்தது.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைக்குச் சீரும் சிறப்பும் சேர்த்துக் கொடுத்த புருஷோத்தம நாயுடு அவர்களின் மறைவு பெருந்துன்பம் தருவதாகும். என்ருலும், இயற்கையை எண்ணி அவர் இன்னுயிர் அமைதி பெற வேண்டுவோமாக!

ந. சஞ்சீவி,
தமிழ்த்துறைத் தலைவர்.

*29—6—1976 (2007)*

# வாழ்க்கைக் குறிப்பு





பிறப்பு : 15—11—1901. இறப்பு : 28—6—1976.

**தந்தையார் :**

புவனகிரி, கஸ்தூரி, இராசகோபால் நாயுடு.

**பெரிய தந்தையார் :**

புவனகிரி, அழகிய மணவாள ஏகாங்கி சுவாமிகள்.

**தாயார் :**

ஆண்டாள் அம்மையார்.

**படிப்பு :**

மதுரைத் தமிழ்ச்சங்கம்—பண்டிதன், சென்னைப் பல்கலைக் கழக வித்துவான்.

**பணிபுரிந்த கல்வி நிலையங்கள் :**

சிதம்பரம் வரவரமுனிகள் பாடசாலை.
மாயவரம் பள்ளியில் சில காலம்.
பண்ருட்டி பள்ளியில் சில காலம்.
கள்ளக்குறிச்சி பள்ளியில் சில காலம்.
திருவையாறு அரசர் கல்லூரியில் (1936 முதல் 1947 வரையில்).
சிதம்பரம் மீனாட்சித் தமிழ்க் கல்லூரி.
சென்னைப் பல்கலைக் கழகம் (1947 முதல் ஓய்வுபெறும் வரையில்).

**பிற பணிகள் :**

(1) யூ. ஜி. சி. ஓய்வுபெற்றத் தமிழ்ப் பேராசிரியர்.
(2) அண்ணாமலைப் பல்கலைக் கழகக் கம்பராமாயணப் பதிப்புக் குழு உறுப்பினர்.

**எழுதிய/பதிப்பித்த நூல்கள் :**

(1) கட்டுரைக் கதம்பம்.
(2) திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் 1 முதல் 10 தொகுதிகள்.
(3) ஆசாரிய ஹிருதயம் (இரு தொகுதிகள்).
(4) ஸ்ரீ வசன பூஷணம்.